# கல்கி

KALKI
29.3.98 ரூ. 4.50



புதிய பிரதமர்

# பலமும் பலவீனமும்

# ஐடிபிஐ

## ஃபிக்ஸட் டெப்பாஸிட்






# இந்த டெப்பாஸிட் உங்களுக்கு தரும் பாதுகாப்பும், வருவாயும்.

**4 முதலீட்டு தேர்வுகள்:** ❑ மாதாந்திர வருமான தேர்வு ❑ காலாண்டு வருமான தேர்வு ❑ குமுலேடிவ் டெபாஸிட் தேர்வு ❑ அதிகபட்ச தள்ளுபடி தேர்வு.

• காலாண்டு அடிப்படையில் காம்பவுண்ட் வட்டி • 1 ஆண்டுக்கு மேல் 5 ஆண்டுகள் வரை எந்த காலத்திற்கும் முதலீடு செய்யும் உரிமை • மாத வருவாய் திட்டம் தேர்ந்தெடுத்தோருக்கு முன்னதாகவே வட்டி வாரண்டுகள். • பிரிவு 80L கீழ் சலுகைகள் • வெளியூர் டெப்பாஸிட் தாரர்களுக்கு டிடி செலவை ஐடிபிஐ ஏற்றுக்கொள்ளும் (தனி நபர்களுக்கு).

மேல் விவரங்களுக்கு ஐடிபிஐ அலுவலகங்கள்/ஏஜெண்டிடம் உள்ள விண்ணப்பபடிவத்தை பார்க்கவும்.

| காலம் | | வட்டி விகிதம் |
|---|---|---|
| 1 ஆண்டு - 2 ஆண்டிற்குள் | : | 10.50% ஆண்டிற்கு |
| 2 ஆண்டு - 3 ஆண்டிற்குள் | : | 11.00% ஆண்டிற்கு |
| 3 ஆண்டு - 5 ஆண்டு வரை | : | 12.00% ஆண்டிற்கு |



**இண்டஸ்ட்ரியல் டெவலப்மெண்ட் பாங்க் ஆஃப் இந்தியா**

ஐடிபிஐ டவர், கஃப் பரேட், மும்பை 400005.

**பாதுகாப்பின் முத்திரை**

115, அண்ணாசாலை, சைதாப்பேட்டை, த.பெ. எண். 1306, **சென்னை** 600015, தொலை: 2355201 • ஐடிபிஐ ஹவுஸ், 58, மிஷன் ரோடு, **பெங்களூர்** 560027, தொலை: 2245048 • சேரன் டவர்ஸ், 3வது மாடி, 78-85, கவர்மெண்ட் ஆர்ட் காலேஜ் ரோடு, **கோயமுத்தூர்** 641 018, தொலை: 211153 • டி. எண். 5-9-89/1&2, சேப்பல் ரோடு, த.பெ. எண். 370 **ஹைதராபாத்** 500 001, தொலை: 236846 • பனம்பில்லி நகர், த.பெ. எண். 4253, **கொச்சி** 682036, தொலை: 322157 • 3ம் மாடி, சித்தார்த் பில்டிங், பால் மாதா ரோடு, **மங்களூர்** 575 001 • 3ஏ, அலங்கார் காம்ப்ளெக்ஸ், 3ம் மாடி, காந்தி நகர், **விஜயவாடா** 520 003, தொலை: 571025 • 13-26-2, முதல் மாடி, அபூருபா ஆர்கேட், மகாராணிபேட்டா, ஜகதாம்பா சென்டர், **விசாகப்பட்டினம்** 530002, தொலை: 565067, மற்றும் நாடு முழுவதும் 30 பிற அலுவலகங்கள்.

சென்னை டெஸ்ட் முடிந்து, கல்கத்தா டெஸ்டுக்காகப் பயிற்சி எடுத்துக் கொண்டிருந்த சமயம், கல்கிக்குச் சிறப்புப் பேட்டியளித்தார்.... பர்சனலான கேள்விகளுக்கும் பதிலளித்தார்...

"சென்னை டெஸ்ட் வெற்றி குறித்து உங்கள் மனநிலை

# "நானும் கோபதாபங்களுக்கு உட்பட்ட மனிதன்தான்!"

## - அஸார் சிறப்புப் பேட்டி

முகமது அஸாருதீன் - இந்திய அணியின் கேப்டன். பலத்த சர்ச்சைகளுக்கிடையில், சச்சின் டெண்டுல்கருக்குப் பதிலாக நியமிக்கப்பட்டவர். 'டெஸ்ட் பந்தயங்களின் சாம்பியன்' என்று வர்ணிக்கப்படும் ஆஸ்திரேலிய அணியை, தமது சுழற்பந்து வீச்சாளர்களின் உதவியுடன் சென்னையில் தோற்கடித்தவர்.

கல்கி இன்டர்நெட் முகவரி: www.kalkiweekly.com ஈ மெயில்: kalki@md2.vsnl.net.in

**என்ன அஸார்?"**

"டாஸில் வென்றவுடனேயே நமது அணி சென்னையில் வெற்றி பெறுவது உறுதியாகி விட்டது. காரணம், சென்னை போன்ற இடங்களில் ஆட்டத்தின் நான்காவது இன்னிங்ஸில் விளையாடும் அணி, ஆடுவதற்கு ரொம்பவும் கஷ்டப்படும் என்பது தான். (ஆஸி. அணி கேப்டன் மார்க் டெய்லரும் இதே கருத்தை வெளியிட்டார் என்பது குறிப்பிடத்தக்கது) மேலும் பேட்டிங்கில் நல்ல துவக்கம் கொடுத்து, சித்துவும் மோங்கியாவும் விளையாடினார்கள். என்



**"தலைவரே, சாகும்வரை உண்ணா விரதம் இருக்கப் போறீங்களாமே...?"**

**"ஆமா. அதுக்கென்ன இப்ப?"**

**"உங்களுக்குப் பிறகு யார் தலைவரா வரணும்னு சொல்லிட்டுப் போயிடுங்களேன்!"**

**– எஸ். எஸ். பூங்கதிர்**

னாலும் அதை நான், சச்சின், கங்குலி அனைவரும் பயன்படுத்திக் கொண்டு விளையாடாததால் ஆஸி அணி முதல் இன்னிங்ஸில் அதிக ரன்கள் எடுத்து விட்டது. பிறகுதான் வார்னேவை Counter attack செய்து விளையாடுவது என்று முடிவு செய்தோம். அதன்படி வார்னேவின் பந்து வீச்சில் ரன்களைக் குவித்தோம். வார்னேவும் சலிக்கவில்லை. பயங்கரமாகத் தமது லெக்ஸ்பின்னைப் போட்டார். இருந்த போதிலும் நமது அணியின் அதிரடி ஆட்டம் காரணமாக வெற்றியைத் தக்கவைத்துக் கொண்டு விட்டோம்."

**"சென்னை வெற்றிக்கு இன்னார்தான் காரணம் என்று யாரையாவது குறிப்பிட்டுச் சொல்லுவீர்களா?"**

"சச்சினின் பேயாட்டம் காரணமாக ரன்கள் குவிந்தன என்றால், சித்துவும் டிராவிடும் பொறுப்பாக ஆடியதை எப்படிக் குறிப்பிடாமல் இருக்க முடியும்? ராஜு, கும்ளே, சௌகான், ஸ்ரீநாத் ஆகியோரின் பந்து வீச்சைத்தான் புறக்கணித்து விட முடியுமா? அனைவரும்தான் இந்த வெற்றிக்குக் காரணம்."

**"அதெப்படி இந்த மூவர் (ராஜு, சௌகான், கும்ப்ளே) கூட்டணி உங்கள் தலைமையின் கீழ் மட்டும் சிறப்பாகப் பந்து வீசுகிறது?"**

"அதான் எங்கள் வெற்றியின் ரகசியம் (சிரிக்கிறார்). அவர்களின் பிளஸ் மற்றும் மைனஸ் பாயிண்டுகள் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். அதே போல் எனது தேவைகள் பற்றியும் அவர்கள் நன்றாக அறிவார்கள் என்பதால் எனக்கு ஏற்ப பந்து வீசுகிறார்கள். நானும் அவர்களில் யாரை எப்போது பந்து வீசச் செய்ய வேண்டும் என்பதை மிக நுணுக்கமாகத் தீர்மானித்துச் செயல்படுவதால் அவர்களின் பந்து வீச்சில் விக்கெட்டுகள் விழுகின்றன. இப்படி ஒருவருக்கொருவர் முழுமையாகப் புரிந்து கொண்டு ஆடுவதால்தான் எங்கள் வெற்றி தொடர்கிறது."

**"தேர்வுக் கமிட்டி நீங்கள் விரும்புகிற மாதிரியான அணியையே உங்களுக்குத் தருகிறதே! மற்றவர்களுக்கு இப்படித் தருவதாகத் தெரியவில்லையே?"**

"எந்தக் கேப்டனுக்கும் அவர் விருப்பப்படியான அணியைக் கொடுக்கிற பட்சத்திலேதான் வெற்றி கிடைக்கும். இல்லாவிட்டால் அணி தோற்கவே செய்யும். (பேச்சில் லேசான கோபம் தெரிகிறது) அது சரி, நான் கேட்டபடி எந்த அணியை எப்போது கொடுத்தார்கள் என்று உங்களால் சொல்ல முடியுமா?"

**"முன்பு ராஜு ஓரங்கட்டப்பட்டிருந்தார். சச்சின் தலைமையில் அவர் ஆடவேயில்லை. இப்போது நீங்கள் கேப்டன். தேர்வுக் கமிட்டி உறுப்பினர் சிவலால் யாதவும் நீங்களும் ஐதராபாத் அணியைச் சேர்ந்தவர்கள். எனவே, ஐதராபாத் அணியிலிருந்து ராஜு, லட்சுமண் ஆகியோர் இப்போது சேர்க்கப்பட்டுள்ளனர். 'நான் கேட்டபடி எனது அணி தரப்படவில்லை' என்று முன்பு சச்சின் கூறியது அனைவரும் அறிந்த விஷயம்தானே!"**

"ஏன், சென்னையில் ராஜு நன்றாகப்

பந்து வீசவில்லையா என்ன? (கோபமாகத் தொடர்கிறார்) இரண்டு இன்னிங்ஸிலும் ஆறு விக்கெட்டுகள் எடுத்தார். விசாகப்பட்டினத்தில் ஆஸி அணிக்கு எதிராக லட்சுமண் சதம் அடிக்கவில்லையா? அவர்கள் இருவருமே அவர்களின் சொந்தத் திறமையால்தான் அணியில் சேர்க்கப்பட்டார்களே தவிர, என்னுடைய அல்லது சிவலால் யாதவுடைய சிபாரிசால் அல்ல. மேலும் ராஜு, கும்ப்ளே, சௌகான் காம்பினேஷன் என்பது சக்சஸ்ஃபுல் காம்பினேஷன். இத்தனை காலம் இவர்களைச் சரியாக உபயோகப்படுத்தாதது என் தவறு அல்ல. நான் முன்பே சொன்ன மாதிரி கேப்டன் விருப்பப்படி ஓர் அணி அமைந்தால்தான் அந்த அணியால் வெற்றி பெற முடியும். சச்சின் தலைமையில் தோற்றதற்கு இதுவே காரணம்."

**"சரி. உங்களையும் உங்கள் அணியையும் Local Tigers என்று சொல்வது பற்றி?"**

"ஓர் அணி உள்ளூரிலேயே ஜெயிக்க வில்லையென்றால் எப்படி? இங்கே தோற்று, வெளிநாடுகளில் மட்டும் ஜெயித்தால் போதுமா? சமீபத்தில் டாக்காவில் பெற்ற வெற்றி, கனடாவில் பெற்ற வெற்றியெல்லாம் வெளி நாடுகளில் பெற்றவைதானே! இடம் எதுவானாலும் வெற்றிதான் லட்சியம். அதை அடைகிறோமா என்பதுதான் முக்கியம்."

**"கோபப்படாமல் இருந்தால் ஒரு கேள்வி...."**

"கேளுங்கள்!"

**"கேப்டன் பதவி வந்தாலே நீங்கள் 'டென்ஷன் பார்ட்டி'யாகி விடுகிறீர்களே, அது ஏன்?"**

"இப்போது நான் டென்ஷனாகவா இருக்கிறேன்? சரி, எப்போது நான் டென்ஷனானேன், நீங்கள்தான் சொல்லுங்களேன்?"

**"இரண்டாண்டுகளுக்கு முன்பு. பெங்களூரில் ஒரு புகைப்படக்காரரை அடித்தது... பீகாரில் ஒட்டு மொத்தமாகத் திட்டி. பிறகு மன்னிப்புக் கேட்டது...."**

"சார், நான் பப்ளிக் ஃபிகர்தான், ஒப்புக் கொள்கிறேன். அதற்காக கிரிக்கெட் கிரவுண்டுக்கு வெளியே நானும் என் மனைவியும் (அந்தச் சமயத்தில் சங்கீதா பிஜ்லானி காதலிதான்; மனைவி அல்ல!) சேர்ந்து போவதைத் துரத்தித் துரத்திப் படமெடுத்தால் எப்படி? நான் எச்சரிக்கை செய்தும் கேட்கவில்லையே! எனக்குத் தெரியாமல் எனது தொப்பியை எடுத்துச் சென்றால் நான் சும்மா இருந்து விட முடியுமா? அது அதிர்ஷ்டமான தொப்பி. நான் அதை முதன் முதலில் போட்டுக் கொண்டு இந்தியாவுக்காக ஆடிய போது மூன்று சதம் அடித்த அதிர்ஷ்ட தொப்பி. அதை எடுத்தால் கோபம் வராதா? நானும் கோபதாபங்களுக்கு உட்பட்ட மனிதன் தானே!" ●

பேட்டி : **நந்தினி**

படங்கள் : **உமாமணி**




"இந்த டாக்டர்கிட்ட போனால், நமக்கே ஒரு தைரியம் வரும்."

"அவ்வளவு கெட்டிக் காரரா?"

"ஊஹூம்; நாம என்ன வியாதியைச் சொன்னாலும், தனக்கும் அப்படித்தான் இருக்குன்னு சொல்லி நமக்கு தைரியத்தை வரவழைச்சிடுவார்!"

– *சீர்காழி வி. ரேவதி*



"குடும்ப அரசியல் என்று எங்களை குதர்க்கம் பேசும் எதிர்க்கட்சிக்கு கூறிக் கொள்கிறேன்... பதவி எதுவுமின்றி வாடும் என் ஒண்ணு விட்ட தம்பியும் சித்தன்னையும் உங்கள் கண்களுக்குப் படவில்லையா? இதைக் கண்டுகொள்ளாதது ஏன்?"

– *என் வி. ரமணி*

# 'ஜீன்ஸ்' அனுபவம்

**சொல்கிறார்**

**'ஜீன்ஸ்' படத்தின் இறுதிக் கட்ட வேலைகளுக்காக ஓடிக் கொண்டிருந்த ஷங்கர் நீண்ட பேட்டிக்கு 'நோ' சொல்லிவிட்டு, சட்சட்டென்று சொன்ன சின்னச் சின்ன விஷயங்கள் இங்கே...**

● *கதையை எப்படி உருவாக்குகிறீர்கள் ஷங்கர்?*

எனக்கு ஒரு பொறிதட்டும். அந்த சின்னப் பொறியை உதவியாளர்களிடம் சொல்ல– விவாதம் ஆரம்பிக்கும். இதில் Firrst line ஓ.கே.யாகிவிடும். பின் நானே எனக்குள் விவாதிப்பேன். ஒரு உருவம் form ஆகும். மறுபடியும் உதவியாளர்களோடு விவாதம். இப்படி பல தடவை. மனம் திருப்தியடைந்ததும் செயல் வடிவத்தில் இறங்குவேன்.

● *சில இயக்குநர்களைச் சந்திக்கும்போது படத்தின் முழு கதையையும் சொல்லி– சில காட்சிகளையும் சொல்வார்கள். நீங்கள் எதைப்பற்றியும் மூச்சே விடுவதில்லை. ஏன்?*



ஒரு எதிர்பார்ப்புக்காகத்தான். ஒரு படத்திற்கு எக்ஸ்பெக்டேஷன் முக்கியம்–. அதுவும் என் போன்ற இயக்குனர்கள் இயக்கும் படத்திற்கு. காரணம், நான் இயக்கும் படங்களுக்குக் கால அவகாசம் அதிகம். கதையையும், காட்சியையும் சொல்லிக் கொண்டிருந்தால் எல்லாம் பழையதாகிவிடும். நெக்ஸ்ட்– அடுத்து என்ன என்னங்கற ஆர்வம், த்ரில் இருந்தாத்தான் இரண்டு வருடங்களாகத் தயாரிக்கிற படத்திற்கு மதிப்பு இருக்கும். அதனால்தான், மூச்சுவிடுவதில்லை. நான் உணர்ந்ததைத்தான் இப்ப படமாக எடுத்துக் கொண்டிருக்கிறேன். எதிர்பார்ப்பு சில நேரங்களில் மிஸ்ஸாயிடக் கூடுவதும் உண்டு. எல்லோருமே வெற்றியை நினைத்துத்தான் படம் எடுக்கிறார்கள். என்னைப் பொறுத்த வரை முழுமையாக உழைத்தால் வெற்றி நிச்சயம்.

● *ஐஸ்வர்யா ராயைத் தேர்வு செய்தது ஏன்?*

வித்யாசமான லவ் சப்ஜெக்ட் இது. பார்த்துப் பார்த்து பழகிப் போன முகத்தைப் போடாம சினிமாத் திரைக்கு அதிகம் பரிச்சயமில்லாத ஒரு முகத்தைப் பயன்படுத்தலாம்னு பட்டது. அதுவுமில்லாம அனைவராலும் ஒப்புக் கொள்ளக் கூடிய முகமாகவும் இருக்க வேண்டுமென்று பட்டது. ஐஸ்வர்யா ராய் அதற்குப் பொருத்தமானவராக இருந்தார்.

● *பிரசாந்த்தைப் பற்றி...?*

நமக்குத் தேவையான கதாபாத்திரம். ஒரு மலர்ச்சியான முகம். ஓர்க்ல சின்சியாரிட்டி இருந்தது. கீழ்ப்படிதலுள்ள ஒரு மாணவன் மாதிரி. நல்லா நடிச்சிருக்காருங்கற பாராட்டு 'ஜீன்ஸ்' மூலம் கிடைக்கும். கூட ஓர்க் பண்ணினப்ப பிரசாந்த் என்னோட தம்பிங்கற உணர்வுதான் வந்தது. அவ்வளவு ஒத்துழைப்பு. அப்புறம், டான்ஸ் மாஸ்டர் ராஜு சுந்தரம் துறுதுறுப்பான காமெடி கேரக்டர் பண்ணியிருக்கார்.

● *பொதுவா 'ஜீன்ஸ்' பட அனுபவம் எப்படி இருந்தது?*

ஒரு தமிழ்ப்படம் நாப்பத்தைந்து நாட்கள் நியூயார்க்லயும், பல வெளி நாட்டிலயும் படமாகியிருப்பதென்பது இது தான் முதல் முறைன்னு நினைக்கிறேன். ஹாலிவுட் படத்துக்குச் சமமா லொகேஷன்களை ஏற்பாடு பண்ணிக் கொடுத்த தயாரிப்பாளர் அசோக் அமிர்தராஜுக்கு

இப்படிப்பட்ட அனுபவங்கள்தான் நிறைய. நாலு படத்தோட உழைப்பு இந்தப் படத்தில் இருக்கு. அதையெல்லாம் ஒரு ஒழுங்குக்குக் கொண்டு வந்து– இந்தப் படத்தின் சக்ஸஸ் கிரெடிட் யாருக்குப் போய்ச் சேரும்னா அது எடிட்டர் லெனின்– விஜயன் ரெண்டு பேருக்கும்தான். அவங்களின் சிறப்பான ஒத்துழைப்பை மறக்கவே முடியாது. வெரி நாலட்ஜபிள் பெர்ஸன்ஸ். அதைவிட

என்றைக்கும் என்னோட நன்றி இருக்கும். இந்த இரண்டு வருட தாமதத்திற்குக் காரணம், வெளிநாடுகள்ல ஷூட்டிங் வச்சுக்கிட்டதுதான். அந்த அனுபவங்கள் எக்கச்சக்கம். உதாரணத்துக்கு ஒண்ணு சொல்றேன். சுதந்திரதேவி சிலை என்பது ஒரு பெரிய கடல் மாதிரி. லைட் எல்லாம் பிளான் பண்ணி படப்பிடிப்புக்குத் தயாராகிற நேரத்துல, பனிமழை வரப்போகுதுன்னு சொல்லிட்டாங்க. அதிர்ச்சி! மதியத்துக்குமேல டாப் ஆங்கிள் ஷூட்டிங் ஹெலிகாப்டர்ல வச்சுக்கலாம்ன்ட்டு பிளான். திடீர்னு இன்னும் ஒரு மணி நேரத்துக்கு ஹெலிகாப்டர் வராதுன்னுட்டாங்க. பனிமழை பெய்ய ஆரம்பிச்சுடுச்சு. ஒரு ஷாட் எடுக்க முடியல. எங்கேயும் பனியா கொட்டிக் கிடக்கு. பனியத் தூக்கிப்போட்டு யூனிட்ல விளையாட ஆரம்பிச்சிட்டாங்க! அன்னைக்கு நாங்க ஷூட் பண்ணல; போட்டோ மட்டும் எடுத்துக்கிட்டோம்.

ஏ.ஆர். ரஹ்மானுக்கும் நிறைய பாராட்டு கிடைக்கும். எனது முதல் மூன்று படங்களில் பணிபுரிந்ததைவிட இந்தப் படத்துல சிறப்பா 'ஒர்க்' பண்ணியிருக்கார். ●

சந்திப்பு : **ரெவித்தம்பி**

# சோதனை மேல் சோதனை!

S. அகிலன்

அப்போது நான் சென்னையில் என் அக்காவின் வீட்டில் தங்கிப் படித்துக் கொண்டிருந்தேன். என் அத்தான் தனியார் கம்பெனி ஒன்றில் வேலை பார்த்தார்கள், வறுமை வீட்டிற்கும். தெருவுக்கும் வந்துபோய்க் கொண்டிருக்கும். என் அத்தான் சிடுமூஞ்சியாகஇல்லா விட்டாலும், பிள்ளைகளிடம் கூட ஒரு பற்றுதல் இல்லாத தனிப்பிறவி. பிள்ளைகளுக்கெல்லாமே, என் அக்கா தான். அந்தத் தாயின் நூலிழைப் பந்தம் தான், அந்தவீட்டை ஒரு மகிழ்ச்சிக் கட்டுப்பாட்டில் வைத்திருந்தது.



அந்த நேரத்தில் சோதனை போல் , என் அக்காவிற்கு வயிற்றில் கட்டி ஆபரேஷன் செய்யவேண்டிய நிலை, பணமோ கையில் இல்லை, உடனடி உதவிசெய்ய உறவினர்க்கும் முடியாத நிலை. குடும்பமே கலங்கியது, ஆனாலும் என் அத்தான் கலங்கவில்லை. நாங்கள் எல்லாம் அவரை கல்நெஞ்சுக்காரர் என்று பேசிக்கொண்டிருந்தோம். ஆனால் அவரோ வைர நெஞ்சுக் காரர், யாருக்கும் தெரியாமல் தான் ஸ்ரீராம் சிட்ஸில் சேர்ந்திருந்தச் சீட்டுப் பணத்தை எடுத்து,




என் அக்காவைக் குணப் படுத்தினார்கள்.

அன்று அந்த நூலிழைப் பந்தம் இருந்ததினால் தான், இன்றும் இந்த இனிய உறவுகள்... எங்களை மகிழ்ச்சி வெள்ளத்தில் வைத்திருக்கின்றன!

சிவகாசி - 626 189

# கலைஞர் நடவடிக்கை!



**க**டந்த 16.3.98 – திங்கட்கிழமை இரவு ஒன்பது மணி.... வீட்டில் டெலிபோன் ஒலித்தது. எடுத்தால், எதிர்முனையில் முதல்வர் கலைஞர்.

செட்டிநாடு சிறப்பிதழைப் (கல்கி 15.3.98) படித்துக் கொண்டிருந்த கலைஞர், அதில் 'கண்ணதாசனைக் காணோம்!' என்ற கட்டுரையைப் (காரைக்குடி, கண்ணதாசன் நினைவகத்தின் நிர்வாகச் சீர்கேடுகள் பற்றியது) படித்ததும் உடனே தக்க நடவடிக்கை எடுத்துவிட்டுத் தான் தொலைபேசியில் என்னுடன் பேசினார்.

"கல்கியில் வந்த கட்டுரையைப் படித்தேன். கண்ணதாசன் என் மிக நெருங்கிய நண்பர் என்பது எல்லோருக்கும் தெரியும். காரைக்குடியில் நான் அடிக்கல் நாட்டிய அவரது நினைவகம் சரியாகப் பராமரிக்கப்படவில்லை என்று கல்கியில் எழுதி, என் கவனத்துக்குக் கொண்டு வந்திருக்கிறீர்கள். உடனே, சிவகங்கை மாவட்ட ஆட்சியாளருக்கு, இதுகுறித்து விசாரித்து, தக்க நடவடிக்கை எடுக்க உத்தரவு அனுப்பி விட்டேன்!" என்று தெரிவித்தார்.

பேச்சின் இடையில் கலைஞர் இன்னொரு தகவலும் சொன்னார்.

சென்ற முறை முதல்வராக இருந்த போது, அவர் அடிக்கல் நாட்டித் தொடங்கி வைத்ததுதான் காரைக்குடி கண்ணதாசன் நினைவகம்.

ஆனால் ஆட்சிக்கு வந்த ஓராண்டு காலத்துக்குள், சந்திரசேகர் அரசு, கலைஞர் ஆட்சியைக் கலைத்தது. மறு தேர்தலில் ஜெயலலிதா முதல்வராகி விடவே, நினைவகத் திறப்பு விழாவை ஜெயலலிதா செய்ய வேண்டியதாயிற்று.

எப்படிச் செய்தாராம் தெரியுமா?

வேறு ஏதோ ஓர் அலுவல் காரணமாக சிவகங்கை சென்றவர், அங்கிருந்தபடியே, 'நான் காரைக்குடியில் உள்ள கண்ணதாசன் நினைவகத்தைத் திறந்து வைக்கிறேன்!' என்று அறிவித்து விட்டாராம்! மற்றபடி அவர் காரைக்குடிக்கே செல்லாமல், நினைவகத்தைப் பார்வையிடக் கூடச் செய்யாமல், 'திறந்து வைத்ததை' நகைச்சுவையாக நினைவுகூர்ந்த கலைஞர், சென்னையிலுள்ள வள்ளுவர் கோட்டமும் தமது ஆட்சியில் கட்டப்பட்டு, பிறகு எமர்ஜென்சியில் நடந்த ஆட்சிக் கலைப்பு காரணமாக அதைத் தாம் திறந்து வைக்க முடியாமல் போனதையும் குறிப்பிட்டார்.

"மாவட்ட ஆட்சியாளருக்குத் தகவல் அனுப்பி விட்டேன். மிக விரைவில், நினைவகத்தில், கல்கியில் சுட்டிக்காட்டிய குறைகள் நிவர்த்தி செய்யப்படும்!" என்று உறுதிகூறி தொலைபேசியை வைத்தார் கலைஞர். ●

— கி. ராஜேந்திரன்

படம் : சுபா நியூஸ்

"மணிலாவிலுள்ள 'ரைஸ் ரீசர்ச் இன்ஸ்டிட்யூட்'டுக்கு பயிற்சிக்காகச் சென்றிருந்த ஒரு சமயம். எனது அறை நண்பரான அமெரிக்கர் ஒருவர் படகிலேறி அக்கரைக்குச் சென்று அரிசி வாங்கிக் கொண்டு வருவார். நாங்கள் தங்கியிருக்கிற பகுதியிலேயே அரிசி கிடைக்கிற போது, அவர் எதற்காகப் படகேறிச் செல்ல வேண்டும்? தெரிந்து கொள்வதற்காக நானும் அக்கரைக்குச் சென்றேன். அங்குள்ள சூப்பர் மார்க்கெட்டில் விசாரித்த போதுதான் ஓர் உண்மை தெரிந்தது!

"அவர் வாங்கி வந்த அரிசி ரசாயன உரம் போடாமல், இயற்கை உரங்களால் விளைந்த அரிசி! கொஞ்சம் விலை அதிகம்தான். என்றாலும் இதுபோன்ற அரிசிக்கு அங்கு ஏக டிமாண்ட் என்பதால் சூப்பர் மார்க்கெட்காரர்கள், இப்படிப் பயிரிடும் விவசாயிகளிடம் பயிரிடுவதற்கு முன்பே சென்று அட்வான்ஸ் புக்கிங் செய்து விடுகிறார்கள்!" என்றார் 'ஜே' பண்ணை ('ஜெ' பண்ணை இல்லீங்க!) யின் விவசாய ஆராய்ச்சியாளர் எஸ்.எஸ். நாகராஜன்.

"இயற்கை உரங்கள் மூலமாகவே விளைந்த அரிசி, காய்கறிகள்தாம் கொஞ்சமும் சுகாதாரக் கேடு விளைவிக்காதவை; ருசியானவை என்பதால், இப்படிப்பட்ட உணவு வகைகளைத் தேடிப்பிடித்து வாங்குகிற விழிப்புணர்வு உலகம் முழுவதுமே தோன்றியிருக்கிறது. இங்கிலாந்திலுள்ள பெண்கள் சமூக அமைப்பு ஒன்று இதையொரு கொள்கையாகவே மக்களிடம் வலியுறுத்தி வருகிறது!" என்றார், டிராக்டர்கள் தயாரிக்கும் 'டாஃபே' நிறுவனத்தின் தலைவரான மல்லிகா சீனிவாசன். டாஃபே போஷித்து வளர்ப்பதுதான் 'ஜே பண்ணை!'

"இதற்காக ஜே பண்ணை என்ன செய்கிறது? செய்து கொண்டிருக்கிறது?" என்று கேட்டபோது, ஜே பண்ணையின் செயல்பாடுகள் பற்றி விளக்க ஆரம்பித்தார் நாகராஜன்.

"விவசாயிகளுக்குத் தருந்த தொழில் நுட்பத்தைக் கண்டுபிடித்து, அவர்களுக்கு நாலு காசு லாபம் வர நாம் வழிசெய்ய வேண்டும்; நமது கண்டு பிடிப்பின் பயன் கழனிக்குப் போய்ச் சேர வேண்டும்' என்பார் எங்கள் அதிபர் சிவசைலம். இதற்காகவே பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு என்னை மலேசியாவுக்கு அனுப்பி வைத்தார்.

"மலேசியாவிலுள்ள 'மஷூரி பூத்தே' என்கிற நெல் வகையை ஜே பண்ணைக்குக் கொண்டு வந்து ஆராய்ந்து தான் 'வெள்ளைப் பொன்னி' ரகத்தை அறிமுகப்படுத்தினோம். உயர்ந்த ரகச் சாப்பாட்டு அரிசி அது. நீர்வளம் குறைந்த பகுதிகளில் கார்த்திகைச் சம்பா பட்டத்தில் பயிரிட ஒரு ரகத்தை அறிமுகப்படுத்தினோம். அதுதான் ஜே - 13. பிலிப்பைன்ஸிலிருந்து நாங்கள் கொண்டு வந்து அறிமுகம் செய்ததுதான் ஐ.ஆர். 50ம், ஐ.ஆர். 8ம்.

"இவையெல்லாம் நல்ல மகசூல் தந்தன; விவசாயிகளுக்கும் நல்ல லாபம் தந்தன என்றாலும் நிலத்தின் தரம் அடியோடு பாதிக்கப்பட்டுவிட்டது. இதை

# திருக்கழுக்குன்றத்துக்குப் பருந்துகள் வராததேன்?

• சிவசைலம்



• எஸ்.எஸ். நாகராஜன்





• மல்லிகா ஸ்ரீனிவாசன்

முழுமையாக விளக்க வேண்டுமானால் நமது நாட்டில் நடந்த முதல் பசுமைப் புரட்சியிலிருந்து சொல்ல வேண்டும்.

"முதல் பசுமைப் புரட்சியின் போது, மகசூலுக்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டதே தவிர, பூமி மற்றும் தானியங்கள் தரும் ஆரோக்கியத்துக்கு முக்கியத்துவம் தரப்படவேயில்லை. இதன் காரணமாக ரசாயன உரங்களும் பூச்சிக் கொல்லி மருந்துகளும் ஏகமாக உபயோகிக்கப்பட்டன. அதன் விளைவு தான் பூமியின் ஆரோக்கியக் கேடும் சுற்றுச் சூழல் கேடும்!" என்ற நாகராஜன், திடீரென்று, "இப்போது திருக்கழுக்குன்றத்துக்குப் பருந்துகள் வருவதில்லை என்கிற விஷயம் உங்களுக்குத் தெரியுமா?" என்றார்.

• சூப்பர் பொன்னி

"தெரியாதே!"

"நாங்கள் ஆட்களை அனுப்பி விசாரித்து வரச் சொன்னோம். முன்பெல்லாம் தவறாமல் அங்கே வரும் பருந்துகள் இப்போது வருவதில்லை என்றார்கள். காரணம் என்ன தெரியுமா? பயிர்களுக்குப் போடப் படும் இரசாயன உரங்களும் பூச்சிக் கொல்லி மருந்துகளும்தான்.!

"ஆச்சரியமாக இருக்கிறது இல்லையா! ஆனாலும் இது நிஜம். முன்பு எங்கள் பண்ணை (சென்னையை ஒட்டியுள்ள ஜே பண்ணைதான்!) யிலிருக்கும் ஆலமரத்தில் பதினைந்து கருடன்கள் இருந்தன. அவை காணாமல் போய், ஆந்தைகள் வந்தன. அவையும் போய், நீண்ட இரட்டை வால் குருவிகள் வந்து, நடவு செய்யும் பெண் களின் முதுகில் உட்கார்ந்து கொண்டு, பூச்சிகளைப் பிடித்துத் தின்று

## போட்டி – 9-ல் வெற்றி பெற்று பட்டுப் புடைவை பெறும் அதிர்ஷ்டசாலி!

**சாரி வீட்டில் சர்க்கரைப் பொங்கல் சாப்பிடும் அந்த இரு பிரபலங்கள்: கபில், காவஸ்கர் என்று ஏராளமானோர் சரியான விடையை எழுதியிருந்தாலும் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பட்டுப் புடைவை பெறும் அதிர்ஷ்டசாலி:**

**எஸ். காமாட்சி, 13, அனுமார் கோயில் தெரு, ராதா நகர், குரோம்பேட்டை, சென்னை - 44.**

**வாழ்த்துகள்!**

கொண்டிருந்தன. பிறகு அவையும் மறைந்து போய்விட்டன! காரணம் இதுதான்.

"இவையெல்லாம் சாப்பிடும் மீன்களும் மற்ற பூச்சிகளும், பயிர்களுக்குத் தெளிக்கப்பட்ட பூச்சிக் கொல்லி மருந்துகளால் சாகவில்லை. என்றாலும் அவை பாதிக்கப்பட்டன. இப்படி பாதிக்கப்பட்ட மீன்களைச் சாப்பிட்டதால், கருடன்கள் இடும் முட்டைகளின் ஓடு கடினமானது. விளைவு? அடைகாக்கப்பட்ட முட்டைகள் வெடிக்காததால் குஞ்சுகள் வெளியே வராமல் போயின. இப்படி அந்தப் பறவை இனமே அழிந்து வருகிறது. நன்மை செய்யும் பாக்டீரியாக்களும் அழிந்து வருகின்றன. மண்புழுக்களும் அழிந்து வருவதால் மண் பொலபொல வென்று இல்லாமல் கெட்டித்துப் போய் விவசாயமும் பாதிக்கப்படுகிறது!" என்று விளக்கினார் நாகராஜன்.

"அது சரி, ஜெ பண்ணையால் இப்போது அறிமுகப்படுத்தப்பட்டிருக்கும் ஜெ-18 என்கிற சூப்பர் பொன்னி ரகம் பயிரிடுகிறபோது, இது போன்ற சுற்றுச் சூழல் பாதிப்புகள் ஏற்படாதா என்ன?"

"கிடையாது. இந்த நெல் ரகத்துக்கு குளத்து வண்டல், கம்போஸ்ட் உரம், தொழுவுரம் போன்ற இயற்கை உரங்கள் மட்டுமே போதும். ரசாயன உரங்கள் பக்கமே தலை வைத்துப் படுக்க வேண்டாம். பூச்சிக் கொல்லி மருந்தும் வேண்டாம்; பிண்ணாக்குக் கரைசலைத் தெளித்தாலே போதும். ஏக்கருக்கு இருபது மூட்டை கிடைக்கும். செலவெல்லாம் போக ஏக்கருக்கு ஐயாயிரம் ரூபாய் லாபம் கிடைக்கும்!" என்றார் நாகராஜன்.

"விவசாயிக்கு லாபம் கிடைத்தால் மட்டும் போதுமா? சூப்பர் பொன்னியின் சாப்பாடு எப்படி? சுவை எப்படி?" என்றோம் மல்லிகா சீனிவாசனிடம்.

"பொன்னி அல்லது வெள்ளைப் பொன்னி பச்சரிசிக்குத்தான் லாயக்கானது. சூப்பர் பொன்னி அப்படி அல்ல. பச்சரிசிக்கும் ஏற்றது, புழுங்கல் அரிசிக்கும் ஏற்றது. வெஜ், நான்வெஜ் வகை பிரியாணிகளுக்கும் பொருத்தமானது. இட்லி, தோசைக்கும் ஏற்றது. ருசியும் பிரமாதமாக இருக்கும். புரதச் சத்தும் அதிகம். இவை எல்லாவற்றையும் விட இன்னொரு முக்கியமான விஷயம், எளிதில் ஜீரணமாகக் கூடியது இது!" என்ற மல்லிகா சீனிவாசன், விவசாயிகளுக்கு மிகவும் பயனுள்ள வகையில் உதவ, எழுபது நாட்களிலேயே அறுவடைக்கு வரக்கூடிய குறுகிய கால நெற்பயிர் ஒன்றைக் கண்டுபிடித்து அறிமுகப்படுத்துகிற புதிய ஆராய்ச்சியிலும் இப்போது ஜெ பண்ணை இறங்கியிருக்கிறது!" என்றார். ●

— **சாருகேசி**

வண்ணப்படம் : **ரவிசங்கரன்**



"நாம காதலிக்கிற விஷயம் எங்க அப்பாவுக்குத் தெரிஞ்சு போச்சுங்க..."

"சந்தோஷத்துல தலை கால் புரியாம குதிச்சிருப்பாரே?"

"அதான் கிடையாது: இந்தப் பையனையாவது பாதியிலே விட்டுடாம ஒழுங்கா கொஞ்சநாள் காதலிச்சுக் காட்டு. அப்புறமா கல்யாணத்தைப் பத்தி பேசலாம்னு சொல்லிட்டாங்க!"

— எஸ்.எஸ். பூங்கதிர்

# BE / MBBS

## என்ஜினியரிங் / மெடிக்கல்

### நுழைவுத் தேர்வுகள் '98

## சன் டிவி மூலமாக உங்கள் வீட்டிலேயே கோச்சிங்!

தமிழக அரசின் என்ஜினியரிங், மெடிக்கல், அக்ரி, வெர்ட்டினரி படிப்புகளுக்கான நுழைவுத் தேர்வுகள் எழுதும் மாணவர்கள் முதன் முறையாக ஒரு புதுமையான கோச்சிங் முறையின் மூலம், தங்கள் வீட்டிலேயே T.V. வழியாக கோச்சிங் பெறலாம். அதுவும் உங்கள் அபிமான சன் T.V.வழியாக!

கணிதம்(Maths), இயற்பியல் (Physics), வேதியியல்(Chemistry) உயிரியல்(Biology) ஆகிய ஒவ்வொரு பாடத்திலும் அனுபவம் நிறைந்த பேராசிரியர்கள் தயாரித்த ஆயிரக்கணக்கான கேள்வி பதில் அடங்கிய பிரின்டட் கோர்ஸ் மெட்டீரியல் (Printed Course Material) உங்களுக்குத் தரப்படும். அதை அடிப்படையாக வைத்து ஒவ்வொரு பாடத்திற்கும் தனித்தனியாக அந்தந்தப் பேராசிரியர்கள் டி.வி.யில் தோன்றி விரிவான விளக்கமளித்து கோச்சிங் கொடுப்பார்கள்.

ஏப்ரல் 1 முதல் 24 தேதி வரை தினமும் காலை 6.00 மணி முதல் 6.45 வரை ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு பாடம் வீதம் சன் T.V.ல் இந்த கோச்சிங் நடைபெறும். உங்கள் குடும்பத்தில் உள்ளவர்கள் பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளைப் பார்க்க T.V.க்கு போட்டி போடாத நேரமாகவும், படிப்பதற்கு எந்த இடையூறும் இல்லாத அமைதியான நேரமாகவும் இருப்பதால் இந்தக் காலை வேளையைத் தேர்ந்தெடுத்துள்ளோம். காலையில் இதைப் பார்த்து விட்டு பிறகு பகல் முழுவதும் வீட்டிலேயே இந்த கோர்ஸ் மெட்டீரியலை தனியாக அமர்ந்து நீங்கள் படிக்கலாம். அல்லது ஏற்கனவே வேறு கோச்சிங் கிளாசில் நீங்கள் சேர்ந்திருந்தாலும் இதைப் பார்த்து விட்டு நீங்கள் புறப்படலாம். ஆனால் நாங்கள் வழங்கும் கோர்ஸ் மெட்டீரியலை வைத்திருந்தால் மட்டுமே டி.வி.யில் அளிக்கப்படும் பாடங்களுக்கான விளக்கம் உங்களுக்குப் புரியும்.

**கட்டணம் : B.E. அல்லது M.B.B.S / AGRI / VETERINARY Rs. 1,800/-**
**ஒன்றுக்கு மேற்பட்ட படிப்புகளுக்கு Rs. 2,000/-**

இந்தக் கட்டணத்தை மணி ஆர்டர் (M.O) மூலமாகவோ, AVCCஎன்ற பெயரில் சென்னையில் மாற்றக்கூடிய (D.D.)டிமாண்டு டிராஃப்டு எங்களுக்கு அனுப்பியோ பெற்றுக் கொள்ளலாம். மறக்காமல் தமிழ், ஆங்கிலம் இவற்றில் எந்த மீடியம் உங்களுக்குத்தேவை என்பதையும் குறிப்பிடவும். மணி ஆர்டர் மூலம் பணம் அனுப்புபவர்கள் மணி ஆர்டர் பாரத்தின் அடிப்பகுதியில், பின்கோடுடன் கூடிய தங்களின் முழு முகவரியைத் தெளிவாக எழுதி, என்ன மீடியம், என்ன படிப்பு என்பதையும் குறிப்பிட வேண்டும். D.D. அனுப்புபவர்கள் ரெஜிஸ்டர்டு தபால் அல்லது கொரியர் மூலமாக அனுப்பவும். சென்னை மாணவர்கள் நேரில் வந்து கட்டணத்தைச் செலுத்தி கோர்ஸில் சேர்வதன் மூலம் தபால் தாமதத்தைத் தவிர்க்கலாம்.

*மேலும் விவரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் :*




**AUDIO VISUAL COACHING CENTRE**
27, First Street, Karpagam Avenue, Chennai - 600 028.
Phone: 493 74 92 / 493 99 05

--------------- கீழ்க்கண்ட விவரப்படி எனக்கு கோர்ஸ் மெட்டீரியலை அனுப்பிவைக்கவும் ---------

Name: ..........................................................

Address: ..........................................................

..........................................................

.......................................................... Pin: ☐☐☐☐☐☐

Couse: ☐ B.E. ☐ M.B.B.S. ☐ AGRI ☐ VETERINARY ☐ ALL
Medium: ☐ Tamil ☐ English Payment: ☐ D.D. No........... ☐ M.O. Dated......

# கமலஹாசனும் காளிமுத்துவும்

ஜி. ஆர். சுரேந்தர்நாத்

பஸ் நகரைத் தாண்டி, வெளியே வந்ததும், குளிர் காற்று சில்லென்று முகத்தில் அறைந்தது. வித்யா ஜன்னலைச் சாத்தினாள்.

அருகில் அதற்குள் உறங்கிவிட்டிருந்த, தனது புதுக் கணவனைப் பார்த்த வித்யாவுக்கு எரிச்சலாக வந்தது. நேற்று அவன் தாலி கட்டிய நேரம் முதல், அவனின் எந்தச் செயலும், அவளுக்கு எவ்வித சந்தோஷத்தையும் தரவில்லை. அவனின் கடைக்கண் பார்வையில் மனசு ஒன்றும் சிலிர்க்கவில்லை. அவன் இவளுடைய உள்ளங் கையை வருடிய பொழுது கிளுகிளுக்கவில்லை. முதலிரவின் பொழுதுகூட, உடல், உலகம் மறந்து, மயிலிறகாய்ப் பறக்கவில்லை.

புதுக் கணவனுடன் குடித்தனம் நடத்தப் போகும் பெண்ணின் மனத்தில், எவ்வளவு எதிர்பார்ப்புடன் கூடிய உணர்வுகள் இருக்க வேண்டும்? ஆனால் தன் மனதில் அப்படி எந்தவிதமான உணர்வும் இல்லாதது வித்யாவுக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தியது. கனவுகள் கரைய ஆரம்பித்த, முப்பது வயதைத் தாண்டி விட்டதாலா? இல்லை கமலஹாசன் போன்ற தோற்றம் கொண்ட புருஷனுக்கு ஆசைப்பட்டு, கடைசியில் காளிமுத்துவுக்கு வாழ்க்கைப்பட்டதால் அந்த மாதிரி உணர்வுகள் ஏற்படவில்லையா?

உடம்பில் தாவணியும், மனசில் கனவுகளும் புதிதாகக் குடியேறிய வயது அது. அப்பொழுது எப்படியெல்லாம் தனது கணவன் குறித்து அவள் கற்பனை செய்து வைத்திருந்தாள். அப்பொழுதுதான் அவள் உடம்பிலும், மனசிலும் மாற்றங்கள் நிகழ்ந்த வயது. திடீரென்று உடம்பில் வளர்ச்சிகள் ஏற்பட்டு, தெருவில் நிறையப் பேருக்குத் தூக்கத்தைக் கலைத்தாள். மாதத்திற்கு ஒருவன், "நீதான் என் வாழ்க்கைக்கு சாவி. இல்லையேல் அணிந்திடுவே... காவி" என்ற ரீதியில் லவ் லெட்டர் ச... வித்யா, "பெரிய க... நெனப்பு!" என்று கசக்கி எறிவாள்.

ஆமாம். எவ்வளவு அழகனாக இருந்தாலும், ஒற்றை வரியில், 'பெரிய கமல்னு நெனப்பு' என்று அனைவரையும் ஒதுக்கி விடுவாள்.

அவள் வயதுக்கு வந்த பிறகு, அவள் பார்த்த முதல் படம் மூன்றாம் பிறை என்பதாலோ என்னவோ, அந்தக் கமல்தான் மனசு முழுவதும் ஆக்கிரமிப்பு. மேலும் இவளின் மிகையான அழகும், தோழிகள் எல்லாம் 'அழகுல ஸ்ரீதேவியவே நம்ப வித்யா தூக்கிச் சாப்பிடுவா' என்று ஊதிவிட்டதும் சேர்ந்து, கமலஹாசன் போன்ற தோற்றமுடைய ஒருவன்தான் தனக்குக் கணவனாக அமைய வேண்டும் என்று முடிவெடுத்து விட்டாள்.

அதனால் ஊரில் தன் பின்னால் சுற்றிய அனைத்து ஆண்களையும் அலட்சியப் படுத்துவாள். தோழிகள் மிகவும் பிரமாதமாக ரசிக்கும் பிரபாகரைக்கூட தூக்கி எறிவாள். "ஏண்டி ... சிவப்பா, நல்லா ட்ரெஸ் பண்ணிட்டு வந்தா பெரிய ஆளா?" என்பாள். "நீ இருக்கற அழகுக்கு ஒனக்கு ராஜகுமாரனே கெடப்பான். எங்களுக்குப் பிரபாகர் கெடச்சாலே பெரிசு!" என்பார்கள்.

கரெக்ட். தன் அழகுக்கு நிச்சயமாக ராஜகுமாரன்தான் கிடைப்பான். கமல் அழகாக ஸ்ரீதேவியின் கழுத்தில் கையை வைத்து இழுப்பதும், தலையைச் சாய்த்து கை நீட்டிக் கூப்பிடுவதும் வித்யாவுக்கு மிகவும் பிடித்துப் போயிற்று. எனவே கமல் போன்ற ஒருவன்தான் கணவனாக வர வேண்டும். ஏனெனில் கமலை திருமணம் செய்ய முடியாது. கமல் போன்ற உருவத்தையுடையவனுக்குப் பெயர் கூட வைத்திருந்தாள். ராஜா.



ராஜா மிகவும் வித்தியாசமானவன். அவன் பிரபாகர் போல தியேட்டரில் விசிலடிக்க மாட்டான். ஆத்தங்கரையில் மூணு சீட்டு விளையாட மாட்டான். பிறர் பார்க்கும்பொழுது மூக்கை நோண்ட மாட்டான். அவன் கமல் போல அழகானவன். நாகரிகமும் நாசூக்கும் நிறைந்தவன். மெதுவாகத்தான் பேசுவான். இவளை 'வித்து...' என்றுதான் கூப்பிடுவான். எப்பொழுதும் குறும்புத்தனமாக இருப்பான்.

இது போல் ஏதாவது பைத்தியக்காரத்தனமாகக் கற்பனை செய்து கொண்டேயிருப்பாள். ப்ளஸ் டூ ஃபெயிலாகி வீட்டில் உட்கார்ந்தவுடன் கனவும் கற்பனையும் மேலும் அதிகமாயிற்று.

அம்மா திட்டும்பொழுது அவன் தோளில் தலையைச் சாய்த்துக் கொண்டு அழ, அவன் "நான் இருக்கேன்மா ஒனக்கு" என்று தலையைக் கோதி விடுவான். அப்பா அவளுக்கு வாங்கித் தராத கொலுசை, அவன் காலில் முத்தமிட்டு மாட்டி விடுவான். அக்காவால் மாட்டி விட முடியாத ப்ரா ஹூக்கை, அவன் மாட்டி விடுவான்.

"அரைகுறைத் துணியோட என்ன மெதப்புல நிக்கற?" என்று அம்மா கன்னென்று முதுகில் அறைவாள். "இப்பவே இப்படி இருக்க? ஒனக்கு மேல மூணு பேரு இருக்காளுங்க. அவளுகளுக்குக் கல்யாணம்

முடிச்சுட்டு, ஒனக்கு முடிக்கற வரைக்கும் வயித்துல நெருப்பக் கட்டிக்கிட்டிருக் கணும்'' என்று புலம்புவாள் அம்மா.

ஆனால் அம்மா பயந்தபடி ஒன்றும் நடக்கவில்லை. ஏனெனில் தான் சந்தித்த ஆண்கள் எல்லோரையும் தன் அழகுக்கு நிகரானவர்கள் அல்ல என்று புறக்கணித் தாள். அவளைப் பொறுத்தவரை கமல ஹாசனின் தோற்றம் கொண்ட ராஜாவுடன் தான் அவள் வாழ்ந்து கொண்டிருந்தாள்.

அவனோடு குன்னூர் ரயில் பாதைத் தண்டவாளத்தில், கைகளைக் கோத்துக் கொண்டு நடந்தாள். கொடைக்கானல் மலைச்சரிவில், ஒரே சால்வைக்குள் போர்த் தியபடி இருவரும் நடந்தனர். குளித்து விட்டு, நெஞ்சு வரை ஏற்றிக் கட்டிய



''கண்ணை மூடிண்டு கச்சேரி செய்யறது ரூபத் தாயிருங்க.''

''ஏன் அப்படிச் சொல்றீங்க? வித்வான்கள் அப்படித்தானே அனுபவிக்கப் பாடுவாங்க.''

''நேத்து அப்படித்தான் சபாவில் பாடினேன். கண்ணைத் திறந்து பார்த்தால் தாட்சண்யத்துக்குக் கூட சபையில் ஒருத்தருமில்லை!''

— சங்கராபரணன்

பாவாடையோடு, பீரோவைத் திறந்தால் உள்ளிருந்து கத்தி பயமுறுத்துவான். தூங்கும் பொழுது இவளின் கால்களுக்கு மருதாணி பூசி விடுவான்.

பின்னாளில் பிரபு, கார்த்திக், அரவிந்த சுவாமி என்று நிறைய நடிகர்கள் வந்த பொழுதும் இவள் மாறவில்லை. கமல் நாய கன் படத்தில் மீசை எடுத்த பொழுதும், சத்யா படத்தில் தாடி வைத்தபொழுதும்கூட வித்யா கற்பனைக் கணவனின் தோற்றத்தை மாற்றவில்லை. அவன் எப்பொழுதும், எத் தனை வருடங்கள் ஆனபொழுதும் ஸ்ரீதேவிக் காகக் குட்டிக்கரணம் போடும் மூன்றாம் பிறை கமல்தான். பின்னாலிருந்து ஸ்ரீதேவி யின் இடுப்பில் கிள்ளும் மீண்டும் கோகிலா கமல்தான்.

கனவுகள்... கற்பனைகள்... ஆண்டுகள் ஓடிக் கொண்டேயிருந்தன. கவர்மென்ட் ஆஃபிசில் ப்யூன் வேலை பார்க்கும் அப்பா தட்டுத் தடுமாறி, கடன் வாங்கி மூன்று அக்காக்களுக்கும் திருமணம் முடிக்கும் பொழுது, வித்யாவுக்கு இருபத்தெட்டு வய தாகி விட்டது. பிறகு வித்யாவுக்கு மாப் பிள்ளை பார்க்க ஆரம்பித்தபொழுதுதான் அவள் கண்களைத் திறந்து, நடைமுறை உலகைப் பார்த்தாள்.

ஊரே ரசிக்கும் வித்யாவின் உடைந்த பல் சிரிப்பும், திரண்ட தோளும், பளீரென்ற இடுப்பும், முழங்கால் தொடும் கூந்தலும் பணத்திற்கு முன்னால் மதிப்பை இழந்தன. ராஜகுமாரனுக்காகக் காத்துக் கொண்டிருந் தவளுக்கு முப்பது வயது வரையில் ஒரு சேவ கன் கூட கிடைக்கவில்லை. கடைசியில் சென்னையில் ஒரு பிரைவேட் கம்பெனியில் வேலை பார்க்கும் இந்த காளிமுத்து, அவள் அப்பா சொன்ன ஐந்து பவுனுக்கு ஒத்துக் கொள்ள, இவளின் சம்மதத்தைக்கூட கேட்காமல் அப்பா கல்யாண ஏற்பாட்டில் இறங்கினார். நிஜம் புரிந்தது. வயது வேறு ஆகி விட்டது. வித்யா மௌனமா னாள்.

இருப்பினும் கண்ட கனவையும், அடைந்த வாழ்க்கையையும் நினைக்க, நினைக்க வித்யாவால் பொறுக்க முடிய வில்லை. அருகில் தூங்கிக் கொண்டிருந்த கணவனை திரும்பிப் பார்த்தாள். குள்ளமாக, முக்கால் வழுக்கையும், வெற்றிலைக் காவி யேறிய பற்களும் முன்னே தள்ளும் தொப்பையுமாகத் தூங்கிக் கொண்டிருந்த வனைப் பார்க்கப் பார்க்க வித்யாவால் அழுகையை அடக்க முடியவில்லை.

ஏதோ ஒரு புத்தகத்தில் படித்த மேத்தா வின் கவிதை ஞாபகத்திற்கு வந்தது: விழிகள் என்னவோ விண்மீன்களோடு உறவாடி னாலும், விரல்கள் என்றும் ஜன்னல் கம்பிகளோடுதான்!

திருவல்லிக்கேணியின், ஒரு சந்திலிருந்த அந்த வீட்டினுள் நுழைந்தபொழுது, வித்யா வுக்கு பகீரென்றது. ஒண்டுக் குடித்தன வீடு. வீடு சிறியது என்று அப்பா சொல்லி யிருந்தார். ஆனாலும் இவ்வளவு சிறியதாக இருக்கும் என்று எதிர்பார்க்கவில்லை. ஒரு கூடம். ஒரு சமையலறை. அவ்வளவுதான் வீடு. பெயர்தான் சமையலறையே தவிர, அதில் ஒரே சமயத்தில் இரண்டு பேருக்கு மேல் நிற்கக்கூட முடியாது.

புதுப்பெண் வந்திருக்கிறாள் என்று பெரிய வரவேற்பெல்லாம் ஒன்றும் இல்லை. பக்கத்து குடித்தனக்காரர்கள் இரண்டு, மூன்று பேர் எட்டிப் பார்த்துவிட்டுப் போனார்கள். வெளியே முற்றத்தில் தண்ணீரடிக்கும் சத்தம், குழந்தைகளின் அலறல், தாத்தாக்களின் இருமல் என்று ஒரே அமர்க்களமாக இருந்தது.

குளியல், உடை மாற்றல் எல்லாம் அந்த நாலடி பாத்ரூமில்தான். வீட்டிற்குள் முடியாது. மாமனார், நாத்தனார், கொழுந்தனார் எல்லாம் கூடத்தில்தான் இருப்பார்கள். வேறு இடம் ஏது? ஜாக்கெட் மாற்றக் கையை உயர்த்தியபொழுது கை மேலே இடித்துக் கொண்டு நல்ல வலி. வித்யாவுக்கு அழுகையாக வந்தது. இவள் கனவுலகில், தனது ராஜகுமாரனோடு வாழ்ந்த வீடு மிகவும் பெரியது. இவர்களைத் தவிர வேறு யாரும் இருக்க மாட்டார்கள்.

தலையை உலர்த்துவதற்காக அவள் ஃபேனின் கீழ் உட்கார்ந்திருந்தாள். அவளின் ராஜகுமாரன் வீட்டில், மொட்டை மாடியில் நின்று கொண்டு, ரோடில் செல்லும் கார்களை பார்த்துக் கொண்டு தலை உலர்த்துவாள். உண்மை வேறுமாதிரியாக இருந்தது.

“என்ன மகாராணி மாதிரி ஒக்காந்துட்ட? புதுப் பொண்ணு சுகத்தை எல்லாம் மறந்துரு. அவரு கம்பெனிக்குப் போகணும். பசங்க காலேஜ் போகணும். வந்து வேலையைப் பாரு'' என்று மாமியார் அதட்ட, அவள் வேகமாக எழுந்து, தனது புதுக் கணவனின் முகத்தைப் பார்த்தாள். அவன் இவளை பரிதாபத்துடன் பார்த்தானே தவிர, ஒன்றும் சொல்லவில்லை. இதுவே அவளுடைய ராஜகுமாரனாக இருந்தால், “ஏம்மா... கல்யாணமாகி இன்னக்கித்தான் வீட்டுக்கு வந்துருக்கா. வந்தன்னைக்கே வேல செய்யணுமா?'' என்று கேட்டிருப்பான்.

இரவு கூடத்தில்தான் அனைவருக்கும் படுக்கை. மாமனார் மட்டும் வெளியே சென்று படுத்துக் கொண்டார். வித்யா சுவரோரத்தில் படுத்திருக்க, அருகில் கணவன். அவனுக்கடுத்து அவனுடைய தம்பி, தங்கை, அம்மா எல்லாரும் படுத்திருந்தார்கள். தூக்கம் வராமல் வித்யா சுவரைப் பார்த்தபடி படுத்திருந்தாள்.

திடீரென்று தோளில் கை விழ, வித்யா திரும்பிப் பார்த்தாள். அவளின் கணவன் லேசாகச் சிரித்தபடி அணைக்க வந்தான். அவனைத் தடுத்த வித்யா, அருகில் படுத்திருந்தவர்களை நோக்கி கையைக் காட்டினாள். “அதப் பாத்தா சரிப்பட்டு வராது. இருட்டாத்தானே இருக்கு” என்று கிசுகிசுப்பாகக் கூறிய காளிமுத்து, மீண்டும் அவள் தோளில் கை வைக்க, வித்யா மௌனமானாள். திடீரென்று முகத்தில் வெளிச்சம் விழ, வித்யா சட்டென்று காளிமுத்துவைத் தள்ளினாள்.

திரும்பி வெளிச்சம் வந்த திசையைப் பார்த்தாள். பக்கத்தில் இருந்த அபார்ட்மெண்டின், மாடி வீட்டில் இப்பொழுதுதான் ஆட்கள் வந்திருக்கிறார்கள் போல. அவர்கள் வீட்டு ட்யூப் லைட் வெளிச்சம் இரு வீட்டு



## பிளட் குரூப் ஜோதிடம்!

ஜப்பானியர்களை இன்று ஆட்டிப் படைத்துக் கொண்டிருக்கும் மூட நம்பிக்கை ''பிளட் குரூப் ஜோதிடம்!''

பெரிய பெரிய கம்பெனி முதலாளிகள் தங்கள் நிறுவனத்திற்கு ஆபீஸ் பாய் முதல் பெரும் பதவிகளுக்குரிய நியமனம் வரை சம்பந்தப்பட்டவர்களின் இரத்த வகை எது என்று அறிந்த பின்னரே செயல்படுகிறார்கள்!

தகேஜி புருகேவா எனும் மனோதத்துவ டாக்டரின் கூற்றுப்படி:-

- யாருடைய இரத்தப் பிரிவு 'ஏ'வாக உள்ளதோ அவர்கள் நல்ல திறமைசாலிகளாக இருப்பார்கள்.
- 'ஓ' பிரிவு இரத்தம் கொண்டவர்கள் பணிவுடையவர்களாகவும் அதே சமயம் கம்பீரமானவர்களாகவும் திகழ்வார்கள்.
- 'பி' பிரிவு ஸ்தரத்தன்மை இல்லாதவர்கள்.
- 'ஏபி' பிரிவைச் சேர்ந்தவர்கள் சகலகலா வல்லவர்கள்!

**— ஆர். ஆர். பூபதி**



"அந்த ஆள் என்ன லூஸா?"

"ஏன்...?"

"இரண்டு குழந்தைகளுக்கு மேல் இப்பொழுது வேண்டாம்னு சொன்னதுக்கு அப்ப 'Female' பரவாயில்லையாங்கறான்!"

— வெ. ராஜாராமன்

ஜன்னல்களையும் கடந்து இவர்கள் வீட்டினுள் விழுந்தது.

மறுநாள் பீச்சுக்கு அழைத்துச் சென்ற கணவனிடம் பேசினாள். "கொஞ்சம் பெரிய வீடா பாக்க முடியாதாங்க?" என்றாள்.

"கட்டுபடி ஆகாதும்மா. எனக்கு ஆயிரத்தைநூறு ரூபா சம்பளம். அப்பாவுக்குப் பிடித்தமெல்லாம் போக ரெண்டாயிரம் ரூபா வரும். இந்தச் சின்ன வீட்டுக்கே எழுநூத்தம்பது ரூபா வாடகை. அப்புறம் கடனுக்கு வட்டி கொஞ்சம் தர வேண்டியிருக்கு. மீதி சம்பளத்துலதான் பசங்க படிப்பு, ஆறு பேர் சாப்பாடு எல்லாத்தையும் பாத்தாகணும். தனி ரூமோட வசதியா பாத்தம்னா வாடகையே ஆயிரத்தைநூறு ரூபா போயிடும். என்ன பண்ண முடியும்?" என்ற கணவனுக்கு, வித்யா ஒன்றும் பதில் சொல்லவில்லை.

தூரத்தில் தெரியும் கடல் அலைகளைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவ்வளவுதான் வித்யா. இதான் ஒன் வாழ்க்கை. வேலைக்குப் போய்ட்டு வர்ற புருஷன நெஞ்சுல சாய்ச்சுக்கிட்டு காபி கொடுக்க முடியாது. வம்புக்கிழுக்கும் கணவனின் நெஞ்சில் செல்லமாகக் குத்த முடியாது. மடியில் படுத்துக் கொண்டு ஆசையாகப் பேச முடியாது. இருட்டில் கட்டிக் கொள்ளலாமென்றால்கூட, பக்கத்து வீட்டுக்காரன் லைட்டை அணைக்கும்வரை காத்திருக்க வேண்டும். வீட்டில் எப்பொழுதும் தன்னைச் சுற்றி நாலு பேர் இருந்து கொண்டே இருப்பார்கள். புருஷனிடம் நாலு வார்த்தைகூட பேச முடியாது. சை... என்ன வாழ்க்கை இது? வீட்டை விட்டு வெளியில் வந்தால் கூட பிடிக்கவில்லை. பீச், கோயில், சினிமா, ஹோட்டல் என்று எங்கு பார்த்தாலும் கும்பல், கும்பலாக ஜனங்கள். இவ்வளவு பேரும் இந்த ஊரில் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்?

யோசனையுடனிருந்த வித்யா, தன் தோளை அணைத்த கணவனின் கைகளை வெடுக்கென்று தள்ளி விட்டாள்.

பார்த்தசாரதி கோயிலில் யோசனையுடன், தனியாக அமர்ந்திருந்தாள் வித்யா. முதுகில் யாரோ கை வைப்பதை உணர்ந்து, திரும்பிப் பார்த்துவிட்டு, "அக்கா..." என்று உடனே சந்தோஷத்திற்கு மாறினாள்.

வாயில் சிரிப்போடு சித்ராக்கா நின்று கொண்டிருந்தாள். நான்கு வருடங்களுக்கு முன்பு வரை ஊரில் வித்யா வீட்டிற்குப் பக்கத்தில் குடியிருந்தவள். வித்யாவின் நெருங்கிய தோழி.

"நீங்க எங்கக்கா இந்தப் பக்கம்?"

"மெட்ராஸ்ல ஒரு கல்யாணத்துக்கு வந்தேன்" என்று சித்ராக்கா கூற, பிறகு சம்பிரதாய விசாரிப்புகள்.

"ஏன்டி புதுப் பொண்ணு. மொகத்துல ஒரு சந்தோஷத்தையும் காணோம்!" என்று சித்ராக்கா கூறியதுதான் தாமதம். அவ்வளவுதான். வித்யா அழுதுகொண்டே தன் கனவுகளையும், அமைந்த வாழ்க்கையையும் கொட்டித் தீர்த்து விட்டாள்.

"இங்க பாரு வித்யா. பொம்பளயாப் பொறக்க கூடாது. அப்படியே பொறந்தாலும் ஏழை வீட்டுல பொறக்கக் கூடாது. கனவுல்லாம் பணக்காரங்களுக்குத்தான். நமக்கில்லடி. எனக்கு முப்பத்து நாலு வயசாவுது. கல்யாணம் பண்ணி வைக்க வீட்டுல காசில்ல. இனிமே கல்யாணம் நடக்கும்ங்கற நம்பிக்கையே போயிடுச்சு. என்ன மாதிரி இங்க ஆயிரக்கணக்கான பொம்பளைங்க இருக்காங்க. அம்மா, அப்பா இருக்கற வரைக்கும் ஓட்டிடலாம். அதுக்குப் பெறகு என்ன பண்றது? ஒனக்காச்சும் கமலஹாசன் கெடைக்கலன்னாலும், ஒரு காளிமுத்து கெடைச்சிருக்கான். சுதந்தரமா பழகற அளவுக்கு வீடு வசதியில்லன்னாலும், தலைவலின்னா விசாரிக்க நாலடி தூரத்துல புருஷன்னு ஒருத்தன் இருக்கான். இங்க நெறயப் பேருக்கு அதுகூட இல்லடி."

சட்டென்று தனது மனதினுள் இருந்த இருட்டு விலகுவதை வித்யாவால் உணர முடிந்தது.

அன்று இரவு தன் தோளில் கைவைத்த கணவனை, வித்யா அன்போடு அணைத்துக் கொண்டாள். ●

இந்தாங்க, ஸ்ட்ராங் காபி. குடிச்சிட்டு வேலையைப் பாருங்க....

இந்தாங்க பச்சத் தண்ணி. குடிச்சிட்டு ஆதரவு கொடுங்க...

6-நிபந்தனைகள்

தேசிய செயல்திட்டம்



1998 மார்ச் 29
ஈசுவர பங்குனி 15
மலர் : 56
இதழ் : 35

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## சோனியா காந்திக்கு இரட்டைக் கிரீடம்!

உட்கட்சி ஜனநாயகத்தை இத்தனை காலமாக உறங்க அனுமதித்த காங்கிரஸ், இப்போது அதை உயிரோடு புதைத்துச் சமாதி கட்டி விட்டது!

ராஜீவ் காந்தியின் மனைவி என்ற ஒரே தகுதிக்காக சோனியா காந்திக்கு இரட்டைக் கிரீடம் சூட்டப்பட்டிருக்கிறது:

1) காங்கிரஸ் கட்சித் தலைமைப் பதவி.

2) காங்கிரஸ் நாடாளுமன்றக் கட்சித் தலைமைப் பதவி.

இவற்றுள் இரண்டாவதில் சோனியாவை அமர்த்துவதற்காக காங்கிரஸ் கட்சியின் அடிப்படை சாசனமே திருத்தப்பட்டிருக்கிறது!

நடந்து முடிந்த தேர்தலில் பிரசாரம் செய்து பெரிய வெற்றிகளைக் குவித்ததற்காக சோனியாவுக்குத் தரப்படும் பரிசு இது என்று கூறுவதற்கில்லை. சோனியா பிரசாரம் செய்த பெரும்பாலான இடங்களில் காங்கிரஸ் பெரிய வெற்றிகளைப் பெறவில்லை. ராஜீவின் தொகுதியான அமேதியில்கூட காங்கிரஸ் வேட்பாளர் சதீஷ் சர்மா தோற்றிருக்கிறார்! சோனியாவின் பிரசாரமும் எடுபடவில்லை ; பப்ரி மஸ்ஜித் நிகழ்ச்சிக்கான பாவ மன்னிப்புக் கோரலும் விலை போகவில்லை!

இந்த நிலையில், சோனியாகாந்தி கலபமாகத் தலைவராகியிருப்பது, ஆரம்ப நிலையிலிருந்து உழைத்து உயர்ந்திருக்கும் தலைவர்களிடையே மனக்கசப்பையே




ஏற்படுத்தும்.

'ராஜினாமா செய்வேன்' என்றும் பின்னர் 'முடியாது' என்றும் கூறிய கேசரிக்கு கல்தா கொடுக்கப்பட்டிருக்கிறது. பிற்பாடு அவரே, நாடாளுமன்றக் கட்சித் தலைமைக்கு சோனியாகாந்தி பெயரை முன்மொழிந்திருக்கிறார்! பூச்செண்டு தந்து, புன்சிரிப்பு உதிர்த்து போட்டோவுக்குப் 'போஸ்' கொடுத்திருக்கிறார்.

காங்கிரஸின் வளர்ச்சிக்கும் பெருமைக்கும் காரணமாயிருந்த சரத்பவாரும் மன்மோகன் சிங்கும் நேற்று வந்து குதித்த சோனியா 'தயவால்' லோக்சபா, ராஜ்ய சபா தலைமைப் பொறுப்பைப் பெற்றிருக்கிறார்கள்! 'காங்கிரஸ் கட்சித் தலைமைத் தேர்வு என்பது அழகிப் போட்டியல்ல...' என்று வீரமாய்ப் பேசிய மன்மோகன்சிங் இன்று வேறு வழியின்றி ஆளுமை அரசியலுக்கு அடங்கிப் போயிருக்கிறார்.

தமது ஆளுமையாலும் 'ராஜீவ் தொடர்புகளாலும்' காங்கிரஸுக்கு சோனியா புத்துயிர் ஊட்டுவார் என்ற ஒரு சிலரின் நம்பிக்கையிலும் மண்தான் விழப் போகிறது! சோனியா அரசியலில் இறங்கியிருப்பது முழுக்க முழுக்க சுயநலத்துக்காகத்தான்: பி.ஜே.பி ஆட்சி நீடிக்க வேண்டுமானால் போபர்ஸையும் இதர ஊழல்களையும் கிடப்பில் போட வேண்டும் என்று இனி வற்புறுத்தல் ஆரம்பிக்கும். அதை மீறி காரியங்கள் நடக்குமானால் பி.ஜே.பி ஆட்சியைக் கவிழ்ப்பதற்கான சதித் திட்டங்களில் ஈடுபடுவார்.

இந்த வியூகம், காங்கிரஸின் முக்கிய தலைவர்களுக்குத் தெரியாமலிருக்க நியாயமில்லை. ஆனாலும் அவர்கள் சும்மாயிருப்பது கைகூடுகிற தாற்காலிக லாபங்களுக்காகத்தான்.

காங்கிரஸ் கட்சியின் உன்னதமான இலக்குகள் சிதைந்து உருத் தெரியாமல் போவதைக் கடந்த சில வருடங்களாகப் பார்த்தோம்... அவை விகார உருவமெடுத்து, நாட்டையே அசிங்கப்படுத்துவதைக் காணும் துர்பாக்கியம் இன்று இந்திய மக்களுக்கு




வாய்த்திருக்கிறது!

## முதல் கோணல்...

"மாநில அரசு, அ.தி.மு.க தலைவி மீது பல பொய் வழக்குகளைத் தொடுத்திருக்கிறது. அவற்றையெல்லாம் ஆராய்ந்து மறுபரிசீலனை செய்வோம்... " - சட்ட அமைச்சர் தம்பிதுரை, பதவி ஏற்றுத் திரும்பியபோது, விமான நிலையத்திலேயே உதிர்த்த முத்து இது!

ஆட்சியில் நீடிக்க அ.தி.மு.க.வின் தயவை எதிர்பார்த்திருக்கும் பி.ஜே.பி எதெதில் விட்டுக் கொடுத்து, இன்னும் எப்படியெல்லாம் சமரசம் செய்து கொள்ளப் போகிறது என்பதை நாம் எளிதில் யூகித்துக் கொள்ளலாம்.

ஊழல் குற்றச்சாட்டு வழக்கு விசாரணைகள் இடையூறின்றித் தொடரும் என்று கூறி வந்த பி.ஜே.பி, தேசிய செயல்திட்டத்தில் அது குறித்து மூச்சே விடவில்லை! மாறாக 'லோக்பால் மசோதாவை உயிர்ப்பிப்போம்' என்ற புளித்துப்போன ஏமாற்று வாக்கியமே அதில் இடம் பெறுகிறது!

ஜெயின் டைரி விவகாரத்தில், தம் பேரில் விசாரணை முடியும் வரை எம்.பி.யாக நீடிக்கக் கூட அத்வானி விரும்பவில்லை. ஆனால் இன்று, தங்கள் பேரில் வழக்குகள் நிலுவையிலுள்ள சேடப்பட்டி முத்தையா, பூட்டாசிங் போன்றவர்கள் அதே அத்வானியுடன் அமைச்சரவையில் இடம் பெற்றிருக்கிறார்கள்!

கூட்டணி கட்சிகளுக்கு இடங் கொடுப்பதற்காக, கொள்கைகளுடன் சுய கௌரவத்துக்கும் சேர்த்தே விடை கொடுத்து விட்டது பி.ஜே.பி!

சபாநாயகர் தேர்வில் சமரசம் செய்து கொண்டு விடலாம். ஆளுங்கட்சி, முதல் நம்பிக்கை வாக்கெடுப்பில் வென்று விடலாம். ஆனால் ஐந்தாண்டுகள் ஆட்சியில் நீடிப்பதென்பது பிரும்ம பிரயத்தனம்!

# சிரிக்கெட்!



"ஆனாலும் அநியாயம். இதுக்கெல்லாம் தேர்ட் அம்பயரைக் கேக்கறதா?"



"ஒரு ஓவருக்கு ஆறு பந்துகள்னாங்களே. மீதி அஞ்சு பந்தும் யார்கிட்டே இருக்கு?"



"அந்த பௌலர் கையை ஆட்டி ஆட்டி அம்பயர்கிட்டே என்ன கேட்கிறார்? புதுப்பந்தா?"
"இல்லே புது பேண்ட். பந்தைத் தேய்ச்சித் தேய்ச்சி, கிழிஞ்சிடுச்சாம்."



"பேட்ஸ்மனுக்கு ஆனாலும் தலைக்கனம். எந்த மாதிரி பந்து வீச்சினாலும் எப்படி வேணும்னாலும் நின்னு ஷாட் அடிப்பாராம்!"





"ராமன் லம்பா விஷயத்திலே இருந்து இப்படித்தானாம்."

— குல்லூ

# KALKI SHOPPING PAGE

## அன்பே... அருளே...

-பரணீதரன்



இந்நூலைப் படிக்கும்பொழுது நான் எனது எனக்கு என்ற மாயைகள் விலகி படிப்பவர் எழுதியவர் என்ற மாயத் தோற்றங்கள் மறைந்து அன்பும், அருளும் ஓர் உருவான சத்தியப் பொருளான மஹா பெரியவாளின் விஸ்வரூப தரிசனம் மட்டுமே ஒவ்வொருவரின் மனதில் நிறைந்திருக்கும்.

விலை ரூ.35/-

**பவானி புக் சென்டர்**
19, ஸ்டேஷன் ரோடு,
சென்னை-33 போன்: 4838124

புத்தக விற்பனையாளர்களுக்கு 25% கமிஷன் அளிக்கப்படும்

---

மாபெரும் சிறப்புத் தள்ளுபடி விற்பனை

1.4.98 முதல் 6.4.98 முடிய ஆறு தினங்களுக்கு மட்டும்

உயர் ரக மதுரை சுங்குடி புடவைகள்

## RAMACHANDRA SAREES



37-B, Arya Gowder Road,
Postal Colony 3rd Street corner,
West Mambalam,
Chennai - 33.
Ph : 4896532

வேலை நேரம் : காலை 9 மணி முதல் இரவு 9 மணி வரை.
உணவு இடைவேளை இல்லை.

ஞாயிறு விற்பனை உண்டு.

ங்களிடம்: பெங்கால் காட்டன், வெங்கடகிரி மற்றும் பத்திக் காட்டன் கிடைக்கும்.

---

ஓம்

அயல் நாட்டில் மணம் பரப்பி தாய்நாட்டில் புகழ் பெற்ற T.P.R.G. அகர்பத்திகளான T.P.R.G. மட்டி பால் தூப், சந்தனம் தூப், தசாங்கம் தூப், பிரசன்னா கம்யூட்டர் சாம்பிராணி, T.P.R.G. தசாங்கம் பவுடர் மற்றும் உயர்தரமான அகர்பத்திகள்

**T.P.R. Gopalsamy Naidu,**
**No. 34, Boologanathan koil st**
**Trichi -8** போன். **701267**

எங்களிடம் பூஜைக்கு தேவையான அனைத்து பொருட்களும் மற்றும் மேலே உள்ள பத்தி வகைகளும், கீழே உள்ள விலாசத்தில் கிடைக்கும்.

**SRI HARIKRISHNA AGENCIES,**
No. 31, Subba Reddy Street,
West Mambalam,
Chennai -600 033, Phone: 4898170

---

ஆயுள் உறுப்பினர்களாக சேர்ந்து விட்டீர்களா இல்லையேல் உடனடியாக சேர்ந்து விடுங்கள்



மஹத்தான ஆயுள் பூராவும் உள்ள சலுகைகள்.



1. ஒரு வருஷத்து காமகோடி சந்தா இனாம்.
2. ஒரு வெள்ளிக்காசு (Green Card) காரருக்கு செப்புக்காசு (Silver Card) காரருக்கும் தரப்படும்.
2. 10% to 20% சலுகை (Green Card) காரர்களுக்கு 10% to 20% (Green Card) காரர்களுக்கு. ஆயுள் பூராவும் சலுகை. எது வேண்டுமானாலும் வாங்கலாம். இல்லாதவை வரவழைத்து தரப்படும்.

மேலும் விவரங்களுக்கு தொடர்பு கொள்ளவும்.




அலுவலகம் :
10, கபாலீஸ்வரர் கோயில் சன்னதி தெரு,
மயிலை, சென்னை – 600 004.
போன் : 494 0376, 494 2530
விற்பனைக்கூடம் :
58/2, டி.எஸ்.வி. கோயில் தெரு,
மயிலை சென்னை – 600 004.
போன் : 494 3551

## பெண்ணுலகம்:

• கடாமி

# ஈரானியப் பெண்களின் விடிவிளக்கு!



"சாடிலைட் டி.வி.யா? மூச். மேற்கத்திய நாகரிகமா? பேசப்படாது. பெண்களுக்கு லிப்ஸ்டிக்கா? யாராவது அந்த அசிங்கத்தைப் பயன்படுத்தினால் அந்த உதட்டையே பிளேடால் கிழிக்க வேண்டியதுதான்!"

இப்படி ஒரு கொடுமையைக் காலம் காலமாகச் சகிச்சிட்டிருந்தாங்க ஈரான் நாட்டுப் பெண்கள். போன வருஷம் ஆயிரக்கணக்கான பெண்கள் தெருவிலே ஊர்வலம் நடத்தினாங்க. "நீங்கதான் எங்களுடைய 'விடிவிளக்கு' "ன்னாங்க. அந்த விடிவிளக்குக்கு வயது ஐம்பத்திநாலு. பெயர் முகமது கடாமி.

முன்னாள் கலாசார அமைச்சர் அவர். தேர்தலில் நாட்டின் ஜனாதிபதி ஆகி விட்டார். பிரபல அரசியல்வாதிகளின் அத்தனை செல்வாக்கும் எதிரணியைச் சேர்ந்த அலி நூரி என்பவருக்கு. இருந்தாலும் மக்களின் தீர்ப்பு கடாமி பக்கமாகத்தான் இருந்தது. அதுவும் தாய்க்குலம் வரலாறு காணாத அளவுக்குத் தங்கள் வாக்குரிமையை இந்தத் தேர்தலிலே பயன்படுத்திக் கிட்டாங்க. தொண்ணூறு சதவிகித வோட்டுப் பதிவுன்னா சும்மாவா?!



இன்றைய தேதியிலே ஈரானியப் பெண்களுக்குக் கொஞ்சம் வாய்ஸ் வந்திருக்கு. அதுமட்டுமில்லே; சோடா பாட்டிலை உடைச்சதும், பீறிட்டுக்கிட்டு சோடா வெளி வருமே அந்த மாதிரி இல்லாமல், கணிசமான சுதந்தரம் கிடைத்த பிறகும் அதை கண்ணியமாக ஈரான் நாட்டுப் பெண்கள் ஏற்றுக் கொண்டிருப்பது சந்தோஷமான விஷயம். இதற்கு ஒரு உதாரணம் மசவ்மே ஏப்தேகர். சுற்றுப்புறச் சூழல் பிரிவின் உதவித் தலைவர் இந்தப் பெண்மணி. பல வருடங்களா பெண் உரிமைக்காகக் குரல் கொடுப்பவர். மருத்துவரும்கூட.

"பெண் விடுதலைன்னா என்னங்க? இழந்து போன பெண்களின் உரிமையை மீட்டுத் தருவது என்பதுதானே இதற்கு அர்த்தம்? அப்படிப் பார்த்தா ஈரானிலே நிலைமை இப்போ ரொம்ப முன்னேறி இருக்கு. சமுதாயத்திலேயும் சரி, அரசியலிலேயும் சரி பெண்களின் நிலை முன்னேற்றம் அடைஞ்சிருக்கு. பர்தா மாதிரி உடலை மறைக்கும் உடைகளாலே பெண் உரிமை எதுவும் பறி போயிட்டதா நான் நினைக்கலே. உடையிலே முழு சுதந்தரம் உள்ளவங்கதான் அமெரிக்கப் பெண்கள். ஆனால் வேலைக்குச் செல்லும் இடங்களிலே அவங்க எந்த அளவுக்கு அவமானப் படுத்தப்படறாங்கன்றது நமக்குத் தெரியாதா என்ன?"ன்னு சமீபத்திலே ஒரு பேட்டியில் விளாசியிருக்காங்க.

முன்னேயெல்லாம் பல்கலைக் கழகத்திலே உள்ள வகுப்புகளிலே மாணவர்களுக்கும் மாணவிகளுக்கும் நடுவே சுவர் ஒன்று தடுத்திருக்குமாம்! இது போன்ற சுவர்கள் சமீபத்திலே இடிக்கப்பட்டிருக்கு. அரசாங்க உத்தரவு! அங்கே இன்னமும் இடிக்கப்பட வேண்டிய வேறு சில 'சுவர்களும்' உண்டு. அவையும் ஒருநாள் இடிக்கப்பட்டு விடும் என்று அங்கிருக்கற பெண்கள் நம்பிக்கையோடு இருக்காங்க.

— சுமி

# சிவராஜ் பித்த வாய்வு சூரணம்

மலச்சிக்கல் - பித்த மயக்கம் - வயிரிரைச்சல் - வயிருதல்-மலபந்தம்-வாய் நீருரல் - பித்த வாந்தி - கெற்ப வாய்வு-ஒக்காளம்-இடுப்பு வாய்வு-விக்கல் - சுவாசகாசம் - அஜீரண வாய்வு - உடம்பெரிவு - வயிற்றுவலி-உப்புசம்-முழங்கால் வாய்வு-இடுப்பு வாய்வு- மற்றும் 2 நாட்களுக்கு ஒரு முறை மலம் கஷ்டப்பட்டு போகுதல் முதலியவைகளிலிருந்து நீங்கி வாதநீர், பித்தநீர், சேத்தும நீர் இவைகள் கீழ் நோக்கிவிடும். ஜீரண சக்தி உண்டாக்கி பசி எடுக்கும். ஆண், பெண் எல்லா வயதினருக்கும் ஏற்றது.

100 *கிராம் புட்டி ரூ.* 100/- V.P.P. *பார்சல் சார்ஜ் ரூ.* 20/- *தனி*

***சென்னை :** அம்மா மெடிக்கல்ஸ், **Opp** : அமீர்மஹால், ராயப்பேட்டை. * **J.F.** லட்டாயல் மெடிக்கல்ஸ், 803, அண்ணாசாலை, கீதா கேப் அருகில். ***வேலூர்:** ஸ்ரீ காமாட்சி மெடிக்கல்ஸ், 167, லாங் பஜார். ***மதுரை :** மீனாட்சி மெடிக்கல் மார்ட், நாய்கர் நியூ ஸ்டிரீட். ***திருச்சி : T.S.P.** மெடிக்கல் ஏஜென்ஸி, தில்லை நகர். ***பொள்ளாச்சி:** ஸ்ரீ ராம் ஏஜென்சி, 297, மார்க்கெட் ரோடு. ***பெங்களூர் :** லக்கி ஸ்டோர்ஸ், **Opp** : போலீஸ் ஸ்டேஷன், வில்சன் கார்டன்.

***தமிழகமெங்கும் எல்லா மருந்துக்கடைகளிலும் கிடைக்கும்.***



சிவராஜ் பார்மஸி, C-18/B-1, ராஜாராம் நகர், தமிழ்சங்கம் ரோடு, சேலம் - 7. ☎ 419783

---




**ESTD : 1955** ஸ்ரீ **Ph : 706823, 704312**

## 29 முதல் 30 நாட்கள் கொண்ட இமாலய பத்ரிநாத், கேதார்நாத், நேபாள், பசுபதிநாத் யாத்திரை

2.5.98-ம் தேதி நித்திரை வசதி கொண்ட 3 Tier Sleeper கோச்சுகள் புறப்படுகின்றன. யாத்திரை மார்க்கம், சென்னை, பூரி - புவனேஷ்வர், கோனாரக் - கல்கத்தா - கயா - காசி - நேபாள் - காசி, அயோத்தியா - அலகாபாத் - அரித்வார் - ரிஷிகேஷ், பத்ரி கேதார் - டில்லி - ஆக்ரா - மதுரா - சென்னை. 2-ம் வகுப்பு ரயில் டிக்கெட் முழு பர்த் வசதி, காலை டிபன், காப்பி 2 வேளை போஜனம், ரயில் கோச்சிலேயே தங்கும் வசதி உள்பட நபருக்கு ரூ. 9675/- பத்ரிநாத், கேதார்நாத், நேபாள் யாத்திரைக்கு பஸ் சார்ஜ் தனியாக ரூ. 3750/- செலுத்த வேண்டும்.

இந்த மே மாத யாத்திரையில் உடுமலை ராதா ஜுவல்லரி குடும்பத்தினர் மற்றும், K. K. நகர் திரு. R. ராஜமாணிக்கம் லட்சுமி தம்பதியர், திருப்பூர் சரஸ்வதி அம்மாள் கோவை திரு. M.K. சுப்ரமண்யம் பாகீரதி தம்பதியர் திருச்சி பிச்சை அம்மாள் மலேஷியா, திருமதிகள், சீதாலட்சுமி அம்மாள், பிச்சை அம்மாள் C/o. Sri. N. ராமகிருஷ்ணன் K. K. நகர்) பெரம்பலூர், திரு. R.N. ராஜன் துணைவியார் வசந்தா அம்மாள், அருப்புக்கோட்டை, திரு. சொ. சொக்கையா, கண்ணுத்தாயி தம்பதியர் B.H.E.L. டவுன்ஷிப் திரு. உ. உத்தாணுமல்லையன் ராஜேஸ்வரி தம்பதியர், கோவை பீளமேடு திரு. R. துரைசாமி, ஆண்டாள் தம்பதியர், ஓலகடம் திரு. ம. பரமசிவம், சாரதாம்பாள் தம்பதியர், தஞ்சை திரு. P.S. ராகவன் சுப்புலட்சுமி தம்பதியர் (LIC) கரூர், திரு. B. ராஜகோபாலன் சந்திராதேவி தம்பதியர், சீர்காழி திரு. V. ராஜகோபால் கற்பகம் தம்பதியர், விழுப்புரம் திரு. D.K. சாமி முதலானோர்களும் பதிவுசெய்துள்ளார்கள் என்பதை தெரிவித்துக் கொள்கிறோம். இன்னும் சில டிக்கெட்டுகளே உள்ளன!

13.7.98-ம் தேதி ஆனி மாதம் 29-ம் தேதி மே மாத யாத்திரை புரோகிராமின்படியே சென்னையிலிருந்து ஒரு தனி 3 டயர் ஸ்லீப்பர் கோச் புறப்படுகிறது. கட்டணம் ரூ. 9675+3750.

**விவரத்திற்கு ரூ. 2 ஸ்டாம்ப் அனுப்பி, முழு விவரங்கள் பெறலாம்.**

**ஸ்ரீநாமகிரி டிராவெல் சர்வீஸ்,**

34-A/2 அக்ரஹாரம், மேலசிந்தாமணி, திருச்சி - 2. Ph : 706823

K. E. நம்பிள்ளை. D. சேகர். N.K. சேகர். N. கங்கா. Ph : 704312



# கோவை எம்.பி. ஓர் இந்தியனாகப் பேசட்டும்!

கல்கி (15.3.98) இதழில், கோவையில் வென்ற எம்.பி. திரு. சி.பி. ராதா கிருஷ்ணன் பேட்டி கண்டேன். ஓர் அரசியல்வாதியாகத்தான் பேசியுள்ளாரே தவிர, இந்தியனாகப் பேசவில்லை. பாபர் மசூதி எப்பொழுது இடிக்கப்பட்டதோ அப்பொழுதே தீவிரவாதம் துவங்கி விட்டது. கரசேவையை ஆதரித்த ஜெயலலிதா ஆட்சியிலேயே அது தமிழகத்திலும் தலை தூக்கி விட்டது. ஆர்.எஸ்.எஸ். அலுவலகத்தில் குண்டு வெடித்து 14 பேர் மரணம், நாகூரில் இந்து முன்னணி அலுவலகத்தில் தபால் குண்டு வெடித்து ஒருவர் மரணம், மதுரையில் ராஜகோபாலன் படுகொலை என அது நன்கே வளர்ந்தது. மனசாட்சிப்படி உண்மையைச் சொல்லப் போனால் அன்றே ஜெயலலிதா அரசு தீவிரவாதிகளை ஒடுக்கியிருக்க வேண்டும். கோவையில் இனக் கலவரம் துவங்கியதும் ஜெயலலிதா ஆட்சியில்தான். இதையெல்லாம் மறந்து விட்டு, மறைத்து விட்டு நியாயம் பேசுவது வேடிக்கை. ஜெயலலிதா சிறுபான்மையினரை ஆதரித்தார் என்றால் கலைஞரும் அதையேதான் செய்தார். அன்று தீவிரவாதிகளின் செயலை அடக்க ஜெயலலிதா தவறி விட்டார் என்றால் கலைஞரும் குற்றவாளியே.

தீவிரவாதம் என்கிறாரே! பழநி பாபாவைக் கொலை செய்தது யார்? கடந்த ஓரிரு மாதங்களுக்கு முன்பு இருபதுக்கும் மேற்பட்ட முஸ்லீம் இளைஞர்களைக் கொன்றது யார்? இதுவும் தீவிரவாதிகளின், அதாவது இந்து மதவெறித் தீவிரவாதிகளின் செயல்தானே. அதனால் விளைந்த வினைதானே குண்டுவெடிப்புகள்? இந்துத் தீவிரவாதிகள் குறி வைத்துத் தாக்கினர். சுமார் 200 கோடி மதிப்புள்ள சொத்துக்களை நாசமாக்கினர். ஆனால் தமிழகத்தின் பிற பகுதி மக்கள் இதை நேரிடையாக உணர முடியவில்லை. குண்டு வெடிப்பில் பொதுமக்கள் சிலர் நேரிடையாக பாதிக்கப் பட்ட பொழுது அரசியல் லாபம் தலை தூக்கி விட்டது. ICCIC கோவைக் கிளையின் வெளியீட்டிலேயே கடந்த மூன்று வருடங்களாகவே இனச் சண்டை என்றும், அரசியல் தலையீடு ஒவ்வொரு கட்டத்திலும் இருந்தது என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இன்றைய திமுக அரசு எடுத்து வரும் நடவடிக்கைகளை முன்பே எடுத்திருக்கலாம். அதை விட, ஜெயலலிதா அரசு முளையிலேயே கிள்ளியிருக்கலாம். மத வெறியில் ஏதோ ஒரு பிரிவு மட்டும் தவறு செய்வது போலவும், ஏதோ திமுக மட்டும் கடமை தவறி விட்டது போலவும் பசப்பக் கூடாது. ஒரு எம்.பி. ஆகவும், இந்தியனாகவும், இன ஒற்றுமைக்குப் பாடுபடுவதே பண்பு. இன்று ஜெயலலிதா ஆதரவால் அவர் இப்படிப் பேசலாம். 'ஜெ'யின் சுயரூபம் தெரியும்பொழுது இதே வாய் அலறும்.

கோவை, **ஸ்ரீகிரி.**

• கோவை எம்.பி

**இது கற்பனை அல்ல; நிஜம்தான் என்று நீங்கள் நினைத்தால் அதற்கு நாங்கள் பொறுப்பல்ல...**

# உறவுக்கு மிரட்டுவோம்;

**வாஜ்பாய் :** அத்வானிஜி, நீங்கதான் இனிமே ஜெயலலிதாஜியிடம் டீல் பண்ணணும். போதும் போதும்னு ஆயிட்டுது. 27 ஸீட்டுக்காகப் பார்க்க வேண்டி இருக்கு. இல்லேன்னா துண்டை உதறித் தோள்ள போட்டுக்கிட்டு போய்ட்டே இருப்பேன்!

**அத்வானி :** அடல்ஜி, இதுக்கே நீங்க ஆடிப் போய்ட்டா, எப்படிப் பிரதமர் பதவியைச் சமாளிக்கப் போறீங்க? பார்த்தீங்களா, ஜஸ்வந்த் சிங் சென்னை போனார். வேலையைக் கச்சிதமா முடிச்சுட்டு வந்துட்டார்! இனிமே கட்சிலே இது மாதிரி சமாதானச் செம்மல்களை நிறைய ஐடென்டிஃபை பண்ணி வச்சுக்கணும். தேவைப்படும் போது அங்கங்க அனுப்பி வச்சிட்டு நம்ம வேலையக் கவனிக்கலாம். இப்ப சந்திரபாபு நாயுடுவைக் கவனிக்க வெங்கய்ய நாயுடுவை அனுப்பிச் சமாளிச்சிடலாம். நமக்குப் பிராப்ளமே இல்லாம, ஆரம்பத்துலேருந்தே ஆதரவா இருக்கார் நாயுடு.

**வாஜ்பாய் :** ஐ.மு.வுல ட்ரபிள் ஷூட்டர்னு பேரு வச்சுக்கிட்டு ஒரு ஹர்கிஷன் சுர்ஜித் இருக்காரே. நாயுடு 'யெஸ்'னு சொல்ற வரைக்கும் அவரை அரிச்சுக்கிட்டே இருப்பாரே!

**அத்வானி :** இன்னமே சுர்ஜித்தை எல்லாம் நாயுடுகாரு லட்சியம் பண்ண மாட்டார். கவலையே படாதீங்க. டிசம்பர்ல ஆந்திரால தேர்தலை வச்சுக்கிட்டு அவர் காங்கிரசை எதுக்காம பின்ன சிவபார்வதியையா எதிர்ப்பார்?

**வாஜ்பாய் :** எதுக்கும் ராமகிருஷ்ண ஹெக்டே கிட்டக் கொஞ்சம் சொல்லி வையுங்க. ஜெயாஜியைப் பார்த்தா அப்பப்ப சிரிக்கச் சொல்லுங்க. பதிலுக்கு ஜெயாஜி சிரிக்காட்டியும் பரவாயில்லை. அப்படியே ராமதாஸ்ஜியப் பார்த்து லேசா ஒரு சிரிப்பு. வைகோவைப் பார்த்து ஒரு சின்னச் சிரிப்பு. வாழப்பாடியையும் பார்த்து ஒரு ஹிஹி...

**அத்வானி :** ஐயோ, வம்பு. அப்புறம் ஹெக்டே என்னைப் பார்த்து எப்பவும் சிரிக்கறார்னு சென்னையில் போய் ஸ்டேட்மென்ட் உட்டுடுவார் ஜெயாஜி. எதுக்கும் முன் ஜாக்கிரதையா இனிமே, ஜெயாஜி கலந்துக்கற நம்ம கூட்டத்தை எல்லாம் வீடியோ பண்ணச் சொல்லிடுங்க. டிடி ஒண்ணுலயோ, மெட்ரோவுலயோ தமிழாக்கத் தொடர்ல ஒண்ணா காட்டிடலாம்.

*(ஜெயலலிதா வருகிறார். கூடவே ராமதாஸ், வைகோ, வாழப்பாடி ராமமூர்த்தி.)*

**வாஜ்பாய் :** (எழுந்து நின்று) இப்படித் திடீர்னு வந்துட்டீங்களே? ஒரு வார்த்தை சொல்லியிருக்கக் கூடாது? மாலை, பொன்னாடை எதுவும் ரெடி பண்ணலை. ஹிஹி... வணக்கம் ராம்தாஸ்ஜி. வாங்க வைகோஜி. வணக்கம் வாழப்பாடிஜி!

**ஜெ :** எல்லாரையும் வாய் நிறைய வரவேத்துட்டாப் போதுமா? உக்காருங்கன்னு மரியாதையாச் சொல்றதில்லே போலருக்கு.

**வாஜ்பாய் :** அடடா, உக்காருங்க. ராம்



தாஸ்ஜி உக்காருங்க. வாழப்பாடிஜி உக்காருங்க. வைகோஜி உக்காருங்க.

**அத்வானி** : சொல்ல மறந்திட்டேனே... நீங்க எல்லாரும் ஃபர்ஸ்ட் கிளாஸ் சிட்டிஸன்ஸ். செகன்ட் கிளாசே இல்லே. போதுமா ஜெயாஜி?

**வாஜ்பாய்** : ஆமா. டிரெயின்லதான் ஃபர்ஸ்ட் கிளாஸ், செகன்ட் கிளாஸ்னு மக்களைப் பிரிச்சி வச்சிருக்கோம். இனிமே ரெயில்வே அமைச்சர்ட்ட சொல்லி எல்லாத்தையும் ஒரே கிளாஸா ஆக்கிடுவோம். சரிதானாஜி? உக்காருங்க ராம்தாஸ்ஜி, வாழப்பாடிஜி, வைகோஜி...

**ராமதாஸ்** : எங்களுக்கு எல்லாமே அம்மாதான். அவங்க சொன்னாத்தான் உக்காருவோம்.

**வாழப்பாடி** : அவங்க சொல்லலேன்னா உக்கார மாட்டோம்.

# ரிமைக்கு விரட்டுவோம்!

**வைகோ** : இங்கே வந்தா, அம்மா சொன்ன உடனே உக்காரலாம்னு முதல்லியே நான் குடியரசுத் தலைவர்ட்ட லெட்டர் குடுத்துட்டேன்.



**அத்வானி** : ஐயோ, இந்த நல்ல சமயத்துல ஹெக்டே வந்து கதவைத் தட்டாம இருக்கணும். அம்மா இப்பவே கடுகடுன்னு இருக்காங்க.

**ஜெ** : என்ன முணுமுணுக்கறீங்க?

**அத்வானி** : ஒண்ணுமில்லே, ரங்கராஜன் வரேன்னார்....

**ஜெ** : பார்த்தீங்களா, எங்க ராமராஜன் ஞாபகம் வரல்லியே உங்களுக்கு? அலட்சியம்... அவமரியாதை...

**அத்வானி** : அய்யய்யோ, அப்படி எல்லாம் சொல்லாதீங்க. ரங்கராஜன் குமாரமங்கலம் வந்துட்டா, கோவை ராதா கிருஷ்ணன் வந்துருவார். நீலகிரி மாஸ்டர் மாதனும் வந்துட்டார்னா யாராருக்கு அமைச்சர் பதவின்னு டிசைட் பண்ணிடலாம்.

**ஜெ** : அவங்க வந்து என்ன டிசைட் பண்ண வேண்டியிருக்கு. நாங்க எதுக்கு வந்திருக்கோம்? ஏற்கெனவே சுப்பிரமணிய சுவாமிக்கு மினிஸ்டர் போஸ்ட் தர மாட்டேனுட்டீங்க. என்னோட ரெகமண்டேஷனுக்கு அவ்வளவுதான் மதிப்பு வச்சிருக்கீங்க.

**வாழப்பாடி** : நாங்களெல்லாம் ஃபர்ஸ்ட் கிளாஸ் சிட்டிஸன்ஸா இருக்கணும்னா, நீங்க அம்மா பேச்சைக் கேட்டு நடந்துக்கறது நல்லது. ஆமா.

**வாஜ்பாய்** : வைகோஜி, நீங்க ஏன் இன்னும் அமைச்சரவைல சேர்றது பத்தி ஒண்ணும் சொல்லாமயே இருக்கீங்க? நீங்க வெளியுறவுத் துறைல துணை அமைச்சரா இருந்தீங்கன்னா, ஸ்ரீலங்கா விஷயத்துல பேச்சு வார்த்தை நடத்த அப்பப்ப நீங்க தோணி பிடிச்சுப் போயிட்டு வர சௌகரியமா இருக்கும்.

**அத்வானி** : டாக்டர் ராம்தாஸ்ஜி, உங்க கட்சிக்காரர் தலித் எளில் மலையோட பேரு... உச்சரிக்க கொஞ்சம் கஷ்டமா இருக்கு. நாங்களே கஷ்டப்பட்டா, இந்தி-இங்கிலீஷ் நியூஸ்ரீடருங்க டீவில திணறுவாங்க. வைகோ மாதிரி சின்னதா சுருக்கி வச்சுக்கிட்டா வசதியா இருக்குமே?

**ராமதாஸ் :** ஆரம்பிச்சிட்டீங்களே உங்க வேலைய! அவர் பேரு தலித் எழில்மலை. அவர் பேர் சொல்ல டீவி நியூஸ் சொல்ற வங்க திணறுவாங்கங்கறதுக்காக, பெத்து பேரு வச்சவங்க மனசை நோகடிக்கணுமா? அம்மா, பார்த்தீங்களா இந்த அக்கிரமத்தை? பேரை மாத்தச் சொல்றாங்க. அதிகாரம் பண் றாங்க. இப்பவே!

**அத்வானி :** அய்யய்யோ... அதிகாரமே பண்ணலே. ஒரு சஜஷன். அவ்வளவுதான். அதுக்காக மினிஸ்ட்ரிக்கு ஆதரவு தராம போயிடாதீங்க. ப்ளீஸ்.

**வாஜ்பாய் :** வாழப்பாடிஜி, நீங்க ஒரே ஒரு உதவி பண்ண வேண்டியிருக்கும். சுப்பிரமணிய சுவாமி அப்பப்ப பி.ஜே.பி. பத்தி அறிக்கை விட்டா, நீங்கதான் மறுப்பு அறிக்கை விடணும். உங்க இலாகாவைக்கூட அறிக்கை இலாகான்னு பண்ணி, காபினட் அந்தஸ்து கொடுத்துடறோம். யு மஸ்ட் ஹெல்ப். ராஜீவ் காங்கிரசுக்குக்கூட நாங்க பெருந்தன்மையா எங்க மந்திரி சபைல இடம் கொடுத்திருக்கோம்னா சோனியாஜிகூட சந்தோஷப்படு வாங்க...

**வாழப்பாடி :** பார்க்கலாம். அம்மாதான் முடிவு பண்ணணும். அப்பப்ப அவங்களப் பார்த்துக் கும்பிட்டு, பொன்னாடை போர்த்தி, யாரையாவது பதவியிலேருந்து தூக்கணும்னா தூக்கி, நியமிக்கணும்னா நியமிச்சு, அவங்க மனசு கோணாதபடி நடந்துக்குங்க. அதான் உங்களுக்கும் நல்லது. எங்களுக்கும் நல்லது. நாட்டுக்கும் நல்லது.

**அத்வானி :** கவலையே படாதீங்க. சுஷ் மாஜியை அம்மாஜியோட உடன்பிறவா சகோதரி மாதிரியே நடந்துக்கச் சொல்றேன்...

**ஜெ :** இந்த மாதிரி இன்சல்ட் பண்றதா இருந்தா, இவங்களை எல்லாம் இப்பவே கூட்டிக்கிட்டுச் சென்னை கிளம்பிடுவேன்!

**வாஜ்பாய் :** அய்யய்யோ! அப்படி மட் டும் செய்துடாதீங்க. இப்பத்தான் நேஷனல் அஜன்டா ஒரு மாதிரியா ஒப்பேத்தியிருக் கோம். இன்னும் ரீஜனல் அஜன்டா, முனி சிபல் அஜன்டா எல்லாம் நீங்க ஒப்புத்துக் கிட்டு ஒண்ணொண்ணா நிறைவேத்த வேண் டாமா?

**அத்வானி :** உங்களுக்கு ஆட்சேபணை இல்லேன்னா, இங்கியே போயஸ் கார்டன் பங்களா மாதிரி ஒரு வீடு ஒதுக்கிடறோம். ஜனாதிபதி மாளிகை பக்கத்துலயே இருக் கான்னு பார்க்கறோம். நீங்க கூட இருந்தாலே ஒரு தெம்புதான்...

**ஜெ :** ஜனாதிபதி மாளிகை பக்கத்துல தானா? ஜனாதிபதி மாளிகை இல்லியா? ராம தாஸ், கிளம்புங்க! வாழப்பாடி, எந்திரிங்க. வைகோ, வாங்க பின்னாடி. இவங்க எல்லாம் நம்மை இன்சல்ட் பண்றதுக்குன்னே தில்லிக்கு வரச் சொல்லியிருக்காங்க! நாம்ப மோசம் போயிட்டோம்!

**வாஜ்பாய் :** அடடடா. மன்னிச்சுக் கணும். நீங்க தெற்கே இருக்கும் தென்றுவி நாங்க வடக்காயிருந்தாலும் வண்டல். உங்களை மாதிரி வருமா? நீங்க ஜனாதிபதி யாக இருக்க நாடு கொடுத்து வச்சிருக் கணுமே! ரொமேஷ் பண்டாரி மாதிரி, நாரா யணனும் அவராவே முன் வந்து பதவி விலகி கிட்டா, உங்களைத்தான் குடியரசுத் தலை வரா ப்ரபோஸ் பண்ணுவோம். சந்தேகமே வேணாம். கோவிச்சுக்க மட்டும் செய்துடா தீங்க. ரொம்பப் பயம்மா இருக்கு!

**ஜெ :** நான் என்ன இப்ப அமெரிக்க ஜனாதிபதி கிளிண்டன் போஸ்ட்டா கேட் டுட்டேன்? இல்லை வெள்ளை மாளிகைல குடியேறணும்னு சொன்னேனா? ரொம்ப பயந்து நடுங்கறீங்களே?

**வாழப்பாடி :** ஆமா. அம்மா வோட தகுதி உங்களுக்குத் தெரி யல்லே. இருபத்தேழு எம்.பின்னா சும்மாவா... அவங்க அமெரிக்க ஜனாதிபதி பதவி கேட்டாலும் நீங்க வாங்கித் தரணும்.

*(அத்வானியும் வாஜ்பாயும் தலை தெறிக்க ஓடுகிறார்கள்).*

கற்பனை : **சாருகேசி**



"பரீட்சை வருது: டென்ஷன் இல்லாம எப்படி இருக்கே?"

"வெறும் பேப்பரை மடிச்சுக் கொடுக்கற துக்கு டென்ஷன் என்ன வேண்டிக் கிடக்கு!"

— வீ.எஸ். கணேசன்



# ஈ.எம்.எஸ்.

திருவனந்தபுரத்திலிருந்து கோவளம் செல்லும் சாலையில் இருக்கிற மணக்காடு பகுதியில், பரவங்குந்து சந்திப்பில் இருக்கிறது கமல் அபார்ட்மென்ட். இதன் இரண்டாம் மாடியில் ஒரு ஃப்ளாட்டில் குடியிருந்தார் ஈ.எம்.எஸ். நம்பூதிரிப்பாடு. உலகிலேயே மக்களால் வாக்களித்துத் தேர்ந்தெடுக்கப்பட்ட முதல் கம்யூனிஸ்ட் முதலமைச்சர் இவர்தான் என்ற பெருமைமிகு வாழ்க்கையிலும் ஆடம்பரம் இல்லாதது ஆச்சரியமான விஷயம்.

சென்ற ஆண்டு, 'கல்கி' சுதந்தர தினப் பொன்விழா மலருக்காகப் பேட்டி காண நாம் சென்றபோது, மாலை மணி ஐந்தைத் தாண்டி விட்டிருந்தது.

நமக்காகக் காத்திருந்தார் ஈ.எம்.எஸ். நாம் ஏற்கெனவே சென்னையிலிருந்து ஃபேக்ஸில் அனுப்பியிருந்த கேள்வியைக் கையில் தயாராக வைத்திருந்தார்.

"ஐந்து மணிக்கு உங்களை நேரே இங்கே அல்லவா வரச் சொல்லியிருந்தேன்? நீங்கள் கட்சி அலுவலகத்துக்குப் போய் விட்டீர்கள் போலிருக்கிறது! உட்காருங்கள்!" என்றார்.

"முதலில் உங்களை இரண்டு படங்கள் எடுத்துக் கொள்ளுகிறேனே? உங்கள் மனைவி பக்கத்தில் உட்காரட்டும்" என்றார் புகைப்படக்காரர் ஸ்ரீஹரி.

ஈ.எம்.எஸ்.ஸின் துணைவியார் ஆர்யா அந்தர்ஜனம் (நம்பூதிரிகளின் மனைவிமார்களை அந்தர்ஜனம் என்றுதான் சொல்லுவார்கள்) அறைக்குள் வந்தார். ஈ.எம்.எஸ்.ஸின் நாற்காலி அருகே, அவரை இன்னொரு நாற்காலியில் உட்காரச் சொன்னோம்.

"உங்கள் நாற்காலியைச் சற்று நகர்த்திக் கொள்ள முடியுமா?" என்றார் புகைப்படக்காரர் ஹரி.

பாதங்கள் சற்றே வீங்கியிருக்க, ஈ.எம்.எஸ். ஒரு கோணத்தில் சௌகரியமாக உட்கார்ந்திருந்தார். மாறி உட்கார அவர் விரும்பவில்லை. "நான் இப்படியேதான் இருப்பேன். உங்களால் முடிந்த மாதிரி படம் எடுத்துக் கொள்ளுங்கள்!" என்று சொல்லி விட்டார் ஈ.எம்.எஸ். அதில் ஒருவிதக் கண்டிப்பும் தொனித்தது. தாம் சொல்லும் விஷயங்களை விட தமது படம் ஒன்றும் முக்கியமில்லை என்கிற கண்டிப்பு அது!

ஒவ்வொரு கேள்வியையும் முதலில் வாய் விட்டுப் படித்து விட்டு, அதற்கான பதிலை வெகு தெளிவாகச் சொல்லிவிட்டு, "இனி அடுத்த கேள்விக்குப் போகிறேன்!" என்றார். பேச ஆரம்பித்தபோது திக்கியது. ஆனால் அது நின்றவுடன் கடகடவென்று வார்த்தைகள் வந்தன. கடிதத்தை டிக்டேட் செய்வது போல நிறுத்தி, நிதானமாக, வார்த்தைகளைக் கோவையாகச் சொன்னார்.

கேரளத்தில் ஏதோ ஓர் இடத்துக்கான இடைத் தேர்தல் நடந்து முடிந்து, அன்று வாக்கு எண்ணிக்கை நடந்து கொண்டிருந்தது. உள்ளே யார் வந்தாலும், வெகு ஆவலோடு ரிசல்ட் என்ன? நமக்கு எத்தனை வோட்டுக்கள்?" என்று கேட்டுக் கொண்டிருந்தார்.

அவருடைய இரண்டு பேத்திகளும், முன்னறையில் கர்நாடக இசை கற்றுக் கொண்டிருந்தார்கள். நாங்கள் இருந்த அறையிலும் பாட்டுக் கேட்டது.

"உங்களுக்குச் சங்கீதம் பிடிக்குமா?" என்று கேட்டோம்.

"எனக்கா? எனக்குச் சங்கீத ரசனையே கிடையாது!" என்றார் ஈ.எம்.எஸ், சிரித்தபடி.

— எஸ்.வி.என்

படம் : ஸ்ரீஹரி

# புதிய பிரதமர்: பலமும் பலவீனமும்

இறைவா!
இத்தனை உயரம் எனக்கு
ஒரு போதும் கொடுத்து விடாதே!
சக மனிதனைத்
தோளோடு அணைக்க இயலாத
இத்தனை உயரம் எனக்கு
ஒரு போதும் கொடுத்து விடாதே!

**– பிரதமர் வாஜ்பேயி எழுதிய 'ஊஞ்சாயி' (உயரம்) என்ற கவிதையிலிருந்து...**

**1960** கால கட்டம் அது. இந்தியாவிலிருந்து ஆறு பேர் கொண்ட பாராளுமன்ற உறுப்பினர்கள் குழு, தென் கிழக்கு ஆசிய நாடுகளில் சுற்றுப் பயணம் செய்து கொண்டிருந்தது. வல்லபாய் படேலின் மகன் தயாபாய் படேல், வாஜ்பேயி, நாஞ்சில் மனோகரன் ஆகியோர் அந்தக் குழுவில் இருந்தார்கள். தைவான் நாட்டில் அதன் குடியரசுத் தலைவர் ஷியாங்கே ஷேக் அவர்களை அந்தக் குழுவினர் சந்தித்தனர். ஷேக், குழுவோடு பேசும்போது, "பிரிட்டிஷாருக்கு பயப்படாமல் இந்திய சுதந்தரப் போராட்டத்தின் போது உங்கள் நாட்டை ஆதரித்தோம். ஆனால் எங்கள் பிரச்னையில் நீங்கள் பட்டும் படாமலும் இருந்து விட்டீர்கள். இருந்தாலும் இந்தியாவின் சுதந்தரத்திற்காகப் பாடுபட்ட காந்தியையும் நேருவையும் நாங்கள் மறக்கவில்லை" என்றார்.

உடனே தயாபாய் படேல், "இந்திய சுதந்தரத்திற்காகப் போராடியவர்கள் இருவர்; ஒருவர் காந்தி; மற்றொருவர் என் தந்தை வல்லபாய் படேல்" என்று படக்கென்று பதில் சொன்னார். வாஜ்பேயிக்கு வந்ததே கோபம்! முகம் கடு கடுப்பாக மாறிவிட்டது. அங்கிருந்து கிளம்பி வெளியே வந்தவுடன் தயாபாய் படேலைப் பார்த்து, "நமக்கும் நேருவுக்கும் இந்திய மண்ணில் ஆயிரம் வேறுபாடுகள் இருக்கலாம். அதைத் தீர்த்துக் கொள்ள வேண்டிய இடம் இந்திய மண்தான். அதை விட்டுவிட்டு, வெளி நாட்டில் தேசத்தின் விடுதலைக்காகப் பாடுபட்ட நேருவின் தியாகத்தைக் குறைத்துப் பேசுவது சற்றும் சரியல்ல!" என்று பிடிபிடியென்று பிடித்து விட்டார்.

இவர்தான் வாஜ்பேயி! என்னதான் அரசியல் விரோதம் இருந்தாலும் நல்ல பண்புகளை என்றைக்குமே விட்டுக் கொடுக்காதவர். அதே இந்திய மண்ணில் நேருவை அரசியல் ரீதியாகக் கடுமையாக எதிர்த்தவர். அவரது பேச்சில் ஆவேசம் இருக்கும். அவதூறு இருக்காது. நகைச்சுவை இருக்கும். ஆபாசம் இருக்காது. தலையை இடதும் வலதுமாக ஆட்டி ஆட்டி பேசத் துவங்கி விட்டால் நாடாளுமன்றமே அமைதியாகிப் போகும்! "மொழி பெயர்ப்பைக் கேட்கவே மிகவும் அசத்தலாக இருக்கிறதே! மூல மொழியான இந்தியில் கேட்டால் எவ்வளவு சிறப்பாக இருக்கும் என்று என்னால் ஊகிக்க முடிகிறது"– வாஜ்பேயின் பேச்சைப் பற்றி இவ்வாறு குறிப்பிட்டவர் அண்ணா!

**நே**ரு ஒரு முறை ஜனசங்கத்தை கடுமையாகத் தாக்கிப் பேசிவிட்டார். அவருக்குப் பதில் சொல்லும் விதமாக வாஜ்பேயி "எங்கள் கட்சியைப் பற்றி தலை கீழாகச் சொல்கிறார் நேரு. அதற்குக் காரணம் அந்தப் பேச்சு பற்றிய சிந்தனை, அவர் சிரசாசனம் செய்யும்போது உதித்திருக்கலாம்!" என்று நையாண்டியாகப் பதில் சொன்னார் வாஜ்பாய்.

எழுத்தாளர்களுக்கே உரிய இரக்க சுபாவம், உணர்ச்சி வேகம் வாஜ்பேயிக்கும் உண்டு. 1980, 1984ம் ஆண்டுத் தேர்தல்களில் பா.ஜ.க. மிகவும் மோசமாகத் தோல்வியடைந்த கால கட்டத்தில், அவரைக் கட்சியிலிருந்து ஓரங் கட்ட முயற்சி நடந்தது. பின்னணியிலிருந்து இயக்கும் ஆர்.எஸ்.எஸ்., 'ஹிந்துத்வா' பற்றிய தீவிர கருத்துக்களைக் கொண்ட நபர் தலைமை ஏற்றால்தான் கட்சி வளரும் என்று கருதியது. அதன் விளைவாக அத்வானி பொறுப்புக்கு வந்தார்.

ஒரு கட்டத்தில் அரசியலில் இருந்தே ஓய்வு பெறப் போவதாக அறிவித்து விட்டார் வாய்பேயி. ஆனால் கட்சிக்கு ஒரு மிதவாத முகமூடி தேவைப்பட்டதால் கட்சியினர் அவரது முடிவைக் கைவிட வைத்தனர்.

இன்று வாஜ்பேயி பா.ஜ.க.வில் இருந்தாலும் கட்சிகளைக் கடந்து எல்லோராலும் ஏற்றுக் கொள்ளக் கூடிய அளவில் அந்தக் கட்சியில் இருக்கும் ஒரே தலைவர் வாஜ்பேயிதான்.

இன்று 72 வயதாகும் வாஜ்பேயி மத்தியப் பிரதேசம், குவாலியரில் பள்ளி ஆசிரியருக்கு மகனாகப் பிறந்தவர்; அதுவும் கிறிஸ்துமஸ் நாளில். குவாலியர் லக்னோ ஆகிய இடங்களில் பள்ளி கல்லூரிப் படிப்பை



முடித்தவர். இளம் வயதிலேயே வீர் அர்ஜுன், ஸ்வதேசி, ஆகிய தினசரி பத்திரிகைகளின் ஆசிரியராக இருந்திருக்கிறார். அவரது பேச்சு. எழுத்து ஆகியவை ஜனசங்கத்தின் முதல் தலைவராக இருந்த சியாமப் பிரஸாத் முகர்ஜியை மிகவும் கவர்ந்தது. வாஜ்பேயை அடையாளங்கண்டு தம்முடன் இணைத்துக் கொண்டார் அவர். அதுதான் வாஜ்பேயின் அரசியல் வாழ்வின் துவக்கம்.

எளிமைக்கு ஓர் எடுத்துக்காட்டு அவர். பந்தாவெல்லாம் துளியும் பிடிக்காது. 1978ல் ஜனதா அரசில் அவர் வெளியுறவுத்துறை அமைச்சராக இருந்தபோது கொழும்பு நகருக்குச் சென்றிருந்தார். அவருடன் பத்திரிகையாளர்கள் சிலரும் சென்றிருந்தார்கள். ஒரு நாள் காலை பத்திரிகையாளர் குல்தீப் நய்யாரின் அறைக் கதவு தட்டப்பட்டது. திறந்தவுடன் திகைத்தார் குல்தீப். காரணம் தேநீர் தட்டுடன் வாஜ்பேயி நின்று கொண்டிருந்தார். "தேநீர் தாமதமாகும் போலிருந்தது; உங்களுக்கு அது இல்லாவிட்டால் வேலையே ஓடாதே என்று நாமே கொண்டு வந்து விட்டேன்!" என்று சொல்லி அசத்தினார்.

வாஜ்பேயி பற்றிய சிறு சர்ச்சையும் உண்டு. இன்று பா.ஜ.க.வில் உள்ள தலைவர்களில் சுதந்தரப் போராட்டத்தில் கலந்து கொண்டவர்கள் வெகு சிலரே. அந்த வகையில் 1942ல் வெள்ளையனே வெளியேறு இயக்கத்தில் கலந்து கொண்டவர் வாஜ்பேயி. ஆனால் மன்னிப்புக் கடிதம் எழுதிக் கொடுத்துச் சிறையிலிருந்து வெளி வந்ததால். அது பற்றிய ஒரு குற்றச்சாட்டும் அவர் பேரில் உண்டு.

"பல மாநிலக் கட்சிகளை கூட்டணியாகக் கொண்டதால்தான் பா.ஜ.க. ஆட்சிக்கு வந்தது; இந்த யுத்திக்குக் காரணம் அத்வானி" என்று பா.ஜ.க.வில் பலர் சொல்லிக் கொண்டிருந்தாலும் 1967லேயே இதைக் கையாண்டவர்தான் வாஜ்பேயி. அப்போது காங்கிரஸ் அல்லாத பல கட்சிகளுடன் ஜன சங்கம் உடன்பாடு கண்டு, பல மாநிலங்களில் அந்தக் கூட்டணி பொறுப்புக்கும் வந்தது. அதே போன்று 1977ல் ஜனதா கட்சி உருவாவதற்குக் காரணமான முக்கிய தலைவர்களில் ஒருவர் வாஜ்பேயி. அந்தக் கட்சி உடைந்து போகாமல் இருக்கக் கடைசிவரை முயற்சி செய்தவர். பின்னர் பாரதிய ஜனதாவை துவக்கி, இன்று அந்தக் கட்சியை டெல்லி செங்கோட்டை வரை வெற்றிகரமாகக் கொண்டு வந்திருக்கிறார்.

1996ல் தமது 13 நாள் ஆட்சி கை நழுவிப் போகாமல் இருப்பதற்காக எந்த விதமான அரசியல் குதிரை வியாபாரத்திலும் இறங்க அவர் விரும்பவில்லை. இத்தனைக்கும் பல தொழில் அதிபர்கள், "நீங்கள் கண்ணசைத்தால் தேவையான அளவு எம்.பிக்களை உங்களுடன் கொண்டு வந்து சேர்க்கிறோம்!" என்று பணப் பைகளுடன் காத்துக் கொண்டிருந்தனர். மீண்டும் பிரதமராக 22 மாதங்கள் காத்திருக்க வேண்டியிருந்தது; அவ்வளவுதான்!

பொதுமக்களிடம் நிதி வசூல் செய்வதில் கூட ஒரு கட்டுப்பாடு வேண்டும் என்பதில் குறியாக இருப்பவர் வாஜ்பேயி. ஒரு முறை குவாலியரில் குழந்தைகளுக்கான நூலகம் ஒன்று அமைப்பதற்காக நிதி வசூல் செய்யப்பட்ட போது, யாரிடமும் அதிகபட்சமாகப் பத்தாயிரம் ரூபாய்க்குமேல் நன்கொடை வசூல் செய்யக்கூடாது என்று கட்டுப்பாடு விதித்தவர்

தமது "நிபந்தனைகள்" ஏற்றுக் கொள்ளப் படாத நிலையில், ஜெயலலிதா ஆதரவுக் கடிதம் கொடுக்கத் தாமதித்தபோது, எதைப் பற்றியும் கலங்காமல் தைரியமாக 'come what may' என்று 240 உறுப்பினர்கள் ஆதரவு பட்டியலைக் கொண்டு போய் ஜனாதிபதியிடம் கொடுத்து விட்டு வந்தவர் வாஜ்பேயி.

இப்படிப்பட்ட கொள்கைகளைக் கொண்ட வாஜ்பேயின் இன்றைய நிலை? கிட்டத்தட்ட பத்துக்கும் மேற்பட்ட கூட்டணிக் கட்சிகள், ஒற்றை உறுப்பினர்கள் ஒன்பது பேர், அப்படியும் மெஜாரிட்டி இல்லாத நிலை. இந்தச் சூழலில் வாஜ்பேயி அரசு எத்தனை நாள் நீடிக்கும்? அதுவும் ஜெயலலிதா, மம்தா போன்றவர்கள் நாளொரு சிந்தனையும் பொழுதொரு முடிவுமாக அலைபவர்கள். ஜார்ஜ் பெர்னாண்டஸ், தமது அதிரடி அறிக்கைகளுக்குப் பெயர் போனவர். கூட்டணிக் கட்சிகளில் யாரையும் விட்டுக் கொடுக்க முடியாது. இப்போதே 'ஜெயலலிதா மிரட்டி தமது செல்வாக்கை நிலைநாட்டிக் கொள்கிறார்' என்ற பேச்சு துவங்கி விட்டது.

கூட்டணித் தொந்தரவு ஒரு பக்கம் இருக்க, சொந்தக் கட்சியினர் கொடுக்கும் அழுத்தங்கள், குறிப்பாக ஆர்.எஸ்.எஸ். இயக்கம் பின்னணியில் இருந்து சில விஷயங்களில் 'சாவி' கொடுக்கும் போது வாஜ்பேயிக்கு சற்று சங்கடமாகவே இருக்கக் கூடும். இன்று இந்தியாவில் இருக்கும் தொழிலதிபர் அமைப்புகள் எல்லாமே வாஜ்பேயை வரவேற்று உள்ளன. பா.ஜ.க.வின் கொள்கை காந்தியப் பொருளாதாரம் என்றாலும் கடந்த அரசு கடைப்பிடித்த தாராளமயமாக்குதல் தொடரும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

ஆர்.எஸ்.எஸ். தமது 'ஹிந்துத்வா' கொள்கையை வலியுறுத்தும் விதமாக, பா.ஜ.க.வை ஆட்டி வைக்க நினைத்தால் வாஜ்பேயி தமது மிதவாதப் போக்கைக் கடைப்பிடிப்பதில் கொஞ்சம் சிரமம் உண்டாகும். ராமர் கோவில், பொது சிவில் சட்டம், காஷ்மீருக்கு ஸ்பெஷல் அந்தஸ்து ஆகிய விஷயங்களுக்கு தேசிய செயல்திட்டத்தில் இடம் கொடுக்கவில்லையென்றாலும் பா.ஜ.க.வுக்கு வோட்டு வங்கியை உருவாக்கும் விஷயங்களாக அவை இருப்பதால், அவ்வளவு எளிதில் அவற்றை விட்டுக் கொடுக்க முடியாது.

இதேபோல், ஜெ. மீது மத்திய அரசு தொடர்ந்துள்ள வழக்குகளின் கதி என்னவாகும் என்பது பற்றியும் நாடே உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருக்கிறது! மேலும் அத்வானிமேல் ஊழல் குற்றச்சாட்டு கூறப்பட்டபோது, அது தவறென்று நிரூபணமாகும் வரை தேர்தலில் கூட நிற்க மாட்டேன் என்று இருந்தார். ஆனால் இப்போதோ ஊழல் குற்றச்சாட்டுகள் சுமத்தப்பட்டு வழக்குகளுக்காக நீதிமன்றத்தில் ஆஜராகிக் கொண்டிருக்கும் சேடப்பட்டி முத்தையாவை அமைச்சராக்க வேண்டிய சூழ்நிலை! ●

நாஞ்சில் கி. மனோகரன் எழுதிய 'மேடும் பள்ளமும்' என்ற நூல் மற்றும் பல்வேறு செய்திக் கட்டுரைகளிலிருந்து: **ப்ரியன்**

அட்டை வண்ணப்படமும், படமும்: **யோகா**

● டென்னிஸ் பந்தின் வேகம் மணிக்கு 138 மைல். பூப்பந்து ஷேட்டில் காக் பயணப்படும் வேகம் மணிக்கு 162 மைல்! ஆதாரம்: இந்து. தகவல்: கோவி. ராஜேந்திரன்

# WHEEL OF FORTUNE

## EASTER FUN WORLD OVER!

## KITTY, THE PET

# GOKULAM

The monthly magazine for children

APRIL '98

Rs. 5/- Only



47, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097

# நடக்குமென்பார்,



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

பிரமாதமான டயம்னு சொல்ல முடியாதுன்னாலும் கொஞ்சம் புத்தி சாலித்தனமா நடந்தீங்கன்னா, பிரச்னைகளைச் சமாளிக்கலாம். குரு 11ல இருக்கறது உங்களுக்கு ஒரு பினஸ் பாயிண்ட்தான். ஆனாலும் காத்தாடி மாதிரி ஏன் மனசைப் பறக்க விடறீங்க? விபரீதமான கற்பனைகள், குழப்பமெல்லாம் வேணாம். ஆணா இருந்தாலும் பெண்ணா இருந்தாலும் அவங்கவங்க வாழ்க்கைத் துணைவர்களால எப்பவும் சப்போர்ட்டும் ஆறுதலும் கிடைக்கப் பெறுவாங்க. பண விஷயம் கொஞ்சம் இழுபறியாத்தான் இருக்கும். செலவைக் கட்டுப்படுத்துங்க. அது ரொம்ப முக்கியம்.



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

டோட்டலா பார்க்கும்போது உங்களுக்கு இது சுமாரான காலகட்டம் தான்னாலும் இந்த வாரம் உங்க அறிவுத்திறன் பிரகாசிக்கும்ங்கறதால வெற்றி, புகழ்க்கொடி பட்டொளி வீசிப் பறக்கும்! தொழில் ரீதியில முன்னேற்றம் ஜோரா இருக்கும். ஷேர், லாட்டரியில கூட ஓரளவு லாபம் கிடைக்கலாம். முக்கியமான விஷயம், சில பேருக்கு வீடு மாற்றமோ இட மாற்றமோ இந்த வாரம் இருக்கலாம். அரசியல்வாதிகளுக்குப் புதிய பலம், தன்னம்பிக்கை கூடும். தொட்டதெல்லாம் வெற்றிதான். ஆனா, எதையும் ஒரு தடவைக்கு ரெண்டு தடவை யோசிச்சிட்டுத் தொடங்குங்க.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

இன்னும் கொஞ்ச நாளைக்கு உங்க காட்டுல மழைதான் சார்! ஒம்போதுல குருன்னா சும்மாவா? நீங்க காலெடுத்து வெக்கறதுக்கு முன்னாடியே, வெற்றி கதறி அடிச்சிட்டு வந்து விழும்! அப்படியொரு நேரம்! வேலை வாய்ப்பா? காதல் சமாசாரமா? அடரேஷன்ல சர்க்கரை வாங்கப் போறீங்களா? எதுவானாலும் இப்ப வெற்றிதான்! சில பேர் தங்களோட நீண்டநாள் கனவுகளை இப்ப நினைவாக்கிக்கப் போறாங்க. அது, உல்லாச உலாவாகவோ, தங்க நகைகளாவோ இருக்கலாம்!



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

கொஞ்சம் நிதானமா செயல்பட வேண்டிய வாரம் இது! பதற்றம் உதவாது. குடும்பத்துல வர்ற சிக்கல்களுக்கு, வெளி ஆளுங்ககிட்ட கருத்துக் கேட்காதீங்க. உங்களாலேயே எதையும் தீர்க்க முடியும். கொஞ்சம் நிதானமும் அனுசரிச்சுப் போற மனப்பான்மையும்தான் வேணும். இந்த வாரம் நிறைய செலவு இருக்கும். சிறு விபத்துகளுக்கும் வாய்ப்பு இருக்கு. அடுத்தவங்க விவகாரத்துல மூக்கு நுழைக்காம இருங்க. கொடுக்கல் வாங்கல் வேணாம். ஏதாவது முக்கியமான முடிவுகள் எடுக்க வேண்டி இருந்ததுன்னா கொஞ்ச நாள் தள்ளிப் போடுங்க.



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

நல்லதும் கெட்டதும் கலந்த வாரம் இது. உங்களுக்கு ஒண்ணும் பிரச்னை இல்லைன்னு சந்தோஷப்பட்டீங்கன்னா, உங்க வீட்டுல யாருக்காவது உடல் நலக் குறைவு எட்டிப் பார்க்கும். பணம் வந்ததும் தெரியாம போறதும் தெரியாம போய்ட்டு இருக்கும். போதாக் குறைக்கு பிக்பாக்கெட் மாதிரி சில இழப்புகளும் சிலருக்கு நேரலாம்! ஆபீஸ்ல என்னதான் கஷ்டப்பட்டு உழைச்சாலும் நல்ல பேர் கிடைக்காது. மேலதிகாரிகளோட அதிருப்திக்கும் ஆளாக வேண்டி வரலாம். வாரக் கடைசில, சில சுப நிகழ்ச்சிகள், உல்லாச அனுபவங்கள் வாய்க்கும். ஒரு தொலைபேசித் தகவல், நல்ல செய்தி கொண்டு வரும்.



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

செல்வாக்கு ஓஹோன்னு இருக்கும். நல்ல, நியாயமான எண்ணங்கள் செயல் வடிவமான வெற்றி பெறும். குறிப்பா, கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்கு இந்த வாரம் செமை உற்சாகமா இருக்கும். புதிய வாய்ப்புகள், தாராள பண வரவு, பெரியவங்க ஆதரவுன்னு சக்கைப் போடு போடுவீங்க. பெண்களுக்கு ஆடை, நகைகள் வாங்கற யோகம் இருக்கு. பண விஷயத்துல பிரச்னை இல்லை. ஆனா, பயண விஷயத்துல உஷார்! பொருள்கள் களவு போகவும் வாய்ப்பு இருக்கு. கடின உழைப்பு உழைக்க வேண்டி வரும். மனைவி



**மிதுன ராசிக்காரரான சோனியா காந்தி காலெடுத்து**

உடல் நலத்துல கவனம் செலுத்துங்க. கடன் வாங்காதீங்க. அது இப்ப அன்லைபயோ எலும் பைபயோ முறிக்கலாம்!



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

இந்த வாரம் இந்த ராசிப் பெண்கள் பல பேர், குழந்தை பாக்கியம் பெற சான்ஸ் இருக்கு. கல்யாணம் ஆகாதவங்கன்னா, அதுக்கான ஏற்பாடுகளாவது ஜரூரா நடக்கும். நண்பர்கள் உதவுவாங்க. புதிய பொருள்கள் ஏதாவது வாங்குவீங்க. சிலபேருக்கு வெளியூருக்கு ட்ரான்ஸ்ஃபர் வரலாம். வீடு மாறுதல் சிலருக்கு இருக்கும். பணக் கையிருப்புக்குக் குறைச்சலே இல்லை. சில அதிர்ஷ்ட வாய்ப்புகள் – குறிப்பா வெளிநாட்டுல வேலை இந்த மாதிரி ஏதாவது சிலருக்குக் கிடைக்கலாம்!



**விருச்சிகம் :** *(விசாகம் 4- ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

சோம்பல்தாங்க உங்க முதல் எதிரி! அதை விலக்கினா, பெரும்பாலான பிரச்னைகள் தீர்ந்துடும். ஆனாலும் இந்த வாரம் அலைச்சல், வீண் விரயம், லேசான உடல் உபாதைகள் இப்படியான சிக்கல்கள் இருக்கும். எதுலயும் அகலக் கால் வைக்காமல் இருந்தீங்கன்னா இழப்புகளைத் தவிர்க்கலாம்! பத்திரிகை, எழுத் துத் துறைல இருக்கறவங்களுக்கு மட்டும் ஓரளவு பிரகாசமான பலன் தரக்கூடிய வாரம் இது!

**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*



பிராப்ளம் ஒண்ணும் இல்லீங்க. இப்ப உங்க பக்கம் சாதகமான காத்துதான் வீசுது. பண விஷயம் தொடங்கி எல்லாத்துலயும் ஒரு கை பார்ப் பீங்க. ஆனா செலவு எக்கச்சக்கமா போயி வாரக் கடைசில கொஞ்சம் தள்ளாடு வீங்க. கவனமா இருங்க! சிலபேருக்கு வெளியூர்ப் பயணங்கள் இருக்கும். சிலபேருக்கு விருந்து, உல்லாசங்கள் அமையும்! உடல் நலத்துல கவனமா இருங்க. வயிறு சம்பந்தப்பட்ட கோளாறுகள் சிலருக்கு வரலாம். நண்பர்கள் விஷயத்திலயும் கவனம். உங்க வளர்ச்சியைப் பார்த்து அவங்களுக்கும் வயிறு சம்பந்தப்பட் கோளாறு (வேறென்ன, வயித்தெரிச்சல்!) வந்து எப்படியாவது உங்களை மட்டம் தட்டப் பார்ப்பாங்க. இந்த வாரம் முருகனை வணங்குங்க, நீங்க தொடங்கற காரியங்கள் கட்டாயம் வெற்றி பெறும்.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

பெண்களுக்குச் சாதகமான வாரம் இது. குடும்பத்துல சுப நிகழ்ச்சிகள், விருந்து, கேளிக்கைன்னு அமர்க்களப்படும். சிலருக்குக் கோவில் குளம்னு பக்தி யாத்திரை போகும் சான்ஸ் இருக்கு. ஆபீஸ்ல நல்ல பேரோட, சிலருக்குப் பதவி உயர்வு கூட கிடைக்கலாம்! எதிர்பாராத இடமாறுதல்கள் சிலருக்கு இருக்கும். அது உத்தியோக ரீதியிலேயோ, பர்சனல் காரணங்களிலோ இருக்கலாம். கணவன் மனைவி உறவு இனிமையும் இன்பமுமா இருக்கும். மொத்தத்துல பிரச்னை அதிகம் இல்லாத வாரம் இது.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

அலைச்சலும் சுகவீனமும் இப்ப உங்க கூடவே ஒட்டிட்டிருக்கற கவச குண்டலம் மாதிரி. அதிகம் உணர்ச்சிவசப் படாம இருங்க. நிதானம் ரொம்ப முக்கியம். இல்லாட்டா, உங்க நெருங்கின உறவினர்களும் உங்கமேல வெறுப்பு கொள்ளறாப்பல ஆயிடும்! ஏதாவது நல்ல காரியத்துக்குப் பிளான் பண்ணீங்கன்னா, கவனமா, மத்தவங்க சௌகர்யத்தையும் பார்த்துச் செய்யுங்க. ஏன்னா, சில தடைகள் வரலாம். கணவன் மனைவி உறவு சீராகவே இருக்கும். மருத்துவச் செலவை தவிர்க்க முடியாது. வாரக் கடைசில பல சந்தோஷமான சம்பவங்கள் நடக்கும். சகோதரிகளால ஆதாயம் கிடைக்கும்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்தி ரட்டாதி. ரேவதி முடிய)*

கொஞ்சம் கஷ்டமான நேரம். எந்தக் காரியமும் ஏதாவது பிரச்னையோடவேதான் செய்ய வேண்டி வரும். மனகலக்குழப்பம், வீண் அலைச்சல், பண விரயம்னு கஷ்டப்படுவீங்க. பதற்றம் கூடாது! உஷ்ணம் சம்பந்தப்பட்ட நோய் ஏதாவது வந்து போகலாம். உணவு விஷயத்துலயும் பயண விஷயத்துலயும் எச்சரிக்கை அவசியம். கெட்ட நண்பர்கள் சகவாசத்தால, கெடுதல் வர சான்ஸ் இருக்கு. அந்த மாதிரி ஆசாமிங்க யாராவது இருந்தா உடனே நூறடி தள்ளி நிறுத்துங்க. இந்த வாரம் சிலருக்கு எதிர்பாராத இன்ப அதிர்ச்சி மாதிரி ஏதாவது மெகா பம்பர் லக் அடிச்சா ஆச்சர்யமில்லை!

**நடக்கும்!**

**வைக்கறதுக்கு முன்னாடியே வெற்றி கதறி அடிச்சுக்கிட்டு வந்து விழுமாம்!**

ஏழாவது முறையாய் அந்தக் கடிதத்தைப் பிரித்துப் படித்தேன்.

"ஐயா எங்களது நோக்கம் போராட்டம் நடத்த வேண்டும் என்பது அல்ல. நிறுவனத்தின் லாபத்தில், அந்த லாபத்துக்காக வியர்வை சிந்தியவனுடைய பங்கு சுரண்டப்படாமல் கிடைக்க வேண்டும் என்பது மட்டுமே, எங்கள் நோக்கம். குறிக்கோளை அடையும் ஒரு வழியாகத்தான் போராட்டத்தைப் பயன்படுத்துகிறோமேயன்றி, போராட்டம் என்பதே எங்கள் குறிக்கோள் அல்ல. நாங்களும் நரம்பும் சதையும் மலமும் நீரும் கொண்ட சாதாரண மனிதர்கள்தான். போராட்டம் என்பது ஒரு போதும் எங்களுக்குச் சந்தோஷம் கொடுக்காது.' தங்கள் புதினத்தின் மேற்கூறிய வரிகள் என்னை ஏகமாய்க் கிறங்க அடித்தன. இது குறித்த சிந்தனையில் நான் இரண்டு இரவுகள் உறங்கவில்லை என்பது சத்தியம். உண்மையான தொரு தொழிலாளர் போராட்டத்தை எவ்வளவு தத்ரூபமாக எழுத்தில் வடித்திருக்கிறீர்கள்..! என் பாராட்டுக்கள் பல. தங்களைச் சந்திக்க, வரும் வியாழன் மாலை ஐந்து மணிக்கு தங்கள் இல்லம் வருகிறேன்."

கீழே எந்தவிதமான அடைமொழியும் போடாமல் ஒரு கோடு மட்டும் போட்டு 'பிந்து' என்று கையெழுத்திடப்பட்டிருந்தது, அந்தக் கடிதத்தில்.



கடிதத்தைப் படித்து முடித்து விட்டு குண்டு குண்டான எழுத்துகளுக்குக் கீழே இருந்த கிறுக்கலான அந்தக் கையெழுத்தையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தேன். பின் அந்தக் கடிதத்தை அப்படியே எடுத்து நெஞ்சில் அணைத்து, விழி மூடி மௌனமாய் அமர்ந்திருந்த அந்த வேளையில் காலிங்பெல் மெலிதாய்ச் சிணுங்கியது.

பதறி அடித்து எழுந்து சென்று கதவு திறந்த போது,

# நான் காணாமல் போன இதயம்...

கரும்பச்சை நிற லோஹிப் புடைவையில், இதழில் புன்முறுவலும் நெற்றியில் நீளமாய்த் தீட்டப்பட்ட திலகமும் ஏகமாய்க் கிறங்க அடிக்க, இருபத்தேழு வயது மதிக்கத் தக்க ஒரு பெண் நின்று கொண்டிருந்தாள்.

"நான்... பிந்து. கடிதம் எழுதியிருந்...", தயங்கியபடியே அந்தப் பெண்ணின் கருவிழி கள் என்னை அளவளாவிய போது, என் உடம்பு லேசாய் பதற்றமடைந்தது. "வாங்க... வாங்க. நான்தான் வேணு", என்றபடி பிந் துவை ஹாலுக்கழைத்து சேரில் அமர்த்தி னேன்.

பிந்து நிறையப் பேசினாள். ஆங்கில இலக் கியம் நன்கு தெரிந்திருந்தாள். எட்கர் ஆலன் போ விலிருந்து, சேஸ் வரை தனது அறிவுத் தெளி வைப் பறை சாற்றினாள். இங்கு, பாரதி தொடங்கி வ.வே.சு ஐயர், தி. ஜா என்று தொடர்ந்து பால குமாரன் வரை எல்லோரையும் புரிந்து வைத்திருந் தாள். அவளது அறிவின் விசாலம் எனக்குச் சிறிது அச்சமூட்டியது. அவள் பேச்சில் கம்யூனிசத் தாக்கம் அதிகம் தொக்கி நின்றது. பேசிக் கொண்டிருக்கும் போதே 'பம்'மென்று அடர்ந்திருந்த குதிரைவால் கொண்டை காற்றில் பறக்க இருக்கை விட்டு எழுந்தாள். பிறகு ஒரு நாள் சந்திப்போம் என்று சொல்லிவிட்டு இடம் பெயர்ந் தாள்.



நந்தன்

அவளைச் சந்தித்த நாளிலிருந்து என் எண்ணங்கள் அலைபாய ஆரம்பித்தன. இளமும் எழுதிக் கொண்டிருந்த நான் சில நாட்கள், கற்பனை முழுசாய் கருக்கொள்ளாமல் கனவுகளோடேயே எழுந்து விடுவேன். கருவாய் உதித்தெழுந்த சில விஷயங்கள் கூட முழுசாய் உருப் பெற மறுத்தது. எனக்கு என்னைப் பற்றியே வெட்கம் பிடுங்கித் தின்ன ஆரம்பித்தது.

அவளைச் சென்று சந்திக்கலாமா என்கிற ஆவல் அவ்வப்போது புயற்காற்றாய் மனசுக்குள் மையம் கொள் ளும். தேவையின்றி அடிக்கடி வருகிறானே என்றெண்ணி அவள் என்னை மறுதலித்து விடுவாளோ என்கிற எண்ணம் தலை தூக்கையில்..... சிரமப்பட்டு அந்த ஆவலைக் குதிகால் கொண்டு அழுத்தி மிதித்து விடுவேன். மனதால் கூட பிந்து என்னை மறுதலித்தல் கூடாது என் கிற ஆசை அட்டையாய் ஒட்டிக் கொண்டிருந்தது.

இந்த அலைக்கழிப்பு தொடர்ந்து கொண்டிருந்த போதுதான் பிந்துவிடமிருந்து அடுத்த கடிதம் வந்தது. "என் அப்பா ப்ரஷர் அதிகமாகிப் படுத்த படுக்கையில் கிடக்கிறார். ஆனாலும் உங்களைச் சந்திக்க வேண்டு மென்று பிரியப்படுகிறார். முடிந்தால் வீட்டுக்கு வரவும்..." என்கிற பிந்துவின் கடித வரிகள் என்னை சந்தோஷத் திலாழ்த்தின.

எப்படி என்னால் வாளாவிருக்க முடியும்? நான் ஏங்கி ஏங்கி நினைத்த பெண் என்னை அழைத்திருக்கிறாள். நான் பேசிக் களித்து சுகித்திருக்க நினைத்த என் பிந்து என்னைக் கூப்பிட்டிருக்கிறாள். பின்னங்கால் பிடறியில் பட ஓடினேன்.

பிந்து அவள் அப்பாவை எனக்கு அறிமுகம் செய்து வைத்த விதமே அலாதியானது. "மீட் மை காம்ரேட் மிஸ்டர் பலராமன்" என்று அறிமுகம் செய்வித்தாள் பிந்து.

"உங்கப்பாட்ட அவ்ளோ அந்நியோன்னியமா பிந்து...?"

"என்ன வேணு அப்படி கேட்டுட்ட? என் ஆசான், தாய், தந்தை... என் நண்பன் எல் லாமே எனக்கு பலராமன்தான். அதான் என் அப்பாதான். அவர் இல்லாம நா இல்ல. பன்

னெண்டாவது; வயசுலயே மாக்ஸிம் கார்க்கியக் கைல குடுத்துப் படின்னார். நா திக்கித் திணறிக்கிட்டு உக்காந்திருந்த போது, ஒவ்வொரு அக்ஷரமா சொல்லித் தந்தவர். எதப் பத்தியும் அவரோட டிஸ்கஸ் பண்ணலாம். இன்ன விஷயம் தான்னு இல்ல. எதப்பத்திக் கேட்டாலும் பதில் தெரிஞ்ச ஒரே மனுஷன்."

பிந்து சொல்லி முடித்த போது என் மனத்தில் மெலிதாய் பொறாமை பொங்கியது. ஒரு பெண் இன்னொரு ஆடவனைப் புகழ்வது ஒரு ஆணுக்குப் பிடிப்பதில்லை. அவள் தன்னைப் பற்றியே பேச வேண்டும். புகழ வேண்டும் என்று ஒவ்வொரு ஆண்மகனும் நினைக்கிறான். அவள் யாராகவும் இருக்கட்டும். காதலியாகட்டும். இன்னொருவன் மனைவியாயிருக்கட்டும். ஆணுக்கு இந்த




சுயவாணித்தனம் நிறைய உண்டு. எனக்கும் வந்தது. மனம் முழுக்க பொறாமை பொங்கிப் பிரவகிக்க... 'லொக்கு லொக்'கென்று இருமினேன்.

"என்ன வேணு, ஜலதோஷமா?" என்றாள் பிந்து.

"இல்ல பிந்து. வர வர சிகரட் ரொம்பத் தேவைப்படுது. அதும் கொஞ்ச நாளா... என்னமோ தெரியல, ஃப்ரீக்வென்ஸி ரொம்ப கூடிப் போச்சு," சொல்லி விட்டு அவள் விழி பார்த்துக் காத்திருந்தேன்.

"அச்சச்சோ... ரொம்ப சிகரெட் குடிக்கறயா? குறைச்சுக்கோ வேணு. உடம்பு என்னத்துக்கு ஆறது. நீ நிறைய எழுதி ரொம்ப உசரத்துக்குப் போக வேண்டாமா?" பிந்து இப்படியெல்லாம் கேட்பாளென்று காத்திருந்தேன். பிந்து எனக்காகக் கவலைப் பட வேண்டுமென்று குழந்தையாய் எதிர் பார்த்திருந்தேன். சுய கழிவிரக்கம் கொண்டு பேடியாய் மல்லாந்திருந்தேன்.

இன்னொரு பெண் நமக்காகக் கவலை கொள்வது ஒரு வித சுகம். நம்மைப் பற்றி அவள் அக்கறை கொள்வது போல் பாசாங்கு காட்டினாலும் மனசு உச்சாணிக் கிளைக்குப் போய் உட்கார்ந்து கொள்கிறது. அந்த அசட்டு புத்தியில் மனம் செயற்கையாய் ஏதேதோ கணக்குப் போடுகிறது. அந்தப் பெண்ணின் அக்கறையை நம்பால் திருப்ப வேண்டி, அங்கங்கே கண்ணி வெடி பதிக்கிறது.

பிந்து கேட்கவில்லை. நீ சிகரெட் குடிச்சா என்ன, பீடி குடிச்சா என்கென்ன என்கிற த்வனியில் வேறு ஏதோ பற்றிப் பேச ஆரம்பித்தாள். தலையைக் கவிழ்த்துக் கொள்ளச் சொல்லி அதன் விளிம்பில் உருட்டுக் கட்டை கொண்டு பலமாய்த் தாக்கினாள். சுய பச்சாதாபம் முழுசாய் என் மனசை ஆக்கிரமித்துக் கொள்ள, நான் முதன் முறையாய் நெஞ்சு கிழிய நின்றேன்.

பிந்து தன் அப்பா பற்றி இன்னமும் சிலாகித்தாள். அவரை என்னிடம் முழுசாய் அறிமுகப்படுத்தினாள்.

''தம்பி... உங்க 'போராட்டம்'ங்கற நாவலைப் படிச்சேன். ரொம்ப கொச்சைப் படுத்திட்டீங்களே தம்பி. கொட்டற மழையிலேயும், கொதிக்கற வெயில்லயும் கால் பதிக்காம, ஃபேனுக்கடியில உக்காந்து எழுதின வெடலைத்தனம் அதுல நல்லாத் தெரியுது தம்பி.''

பலராமன் வார்த்தைக்கு வார்த்தை என்னைத் தம்பி... தம்பி... என்று விளித்தது கேட்டு சல்லிசாய்க் கோபம் கொண்டேன். அதுவும் பிந்துவின் முன் அவர் என்னைத் தம்பி... தம்பி.. என்றது, என் சினத்தை இரட்டிப்பாக்கியது. இதனால் 'பொம்' மென்று பூத்துச் சிவந்த சினம், அவர் என் கதையைக் கேலி பேசியது கேட்டு பல்கிப் பெருகியது. கணுக்கால் மயிரிழை கூட கோபத்தால் கனன்று கிடந்தது.

இருந்தும் அடக்கிக் கொண்டேன். என் இயல்பு மறுத்து, புன்முறுவலுடன் பலராமனிடம் காரணம் வினவினேன்.

"போராட்டம் என்பது ஒரு போதும் எங்களுக்குச் சந்தோஷம் கொடுக்காதுன்னு

# நாய்கள் ~~ஜாக்கிரதை!~~ நல்வரவு!



இப்போது வெடி மருந்துக் கலாசாரம் பரவி விட்டதால், மோப்ப நாய்களுக்கு அதிக வேலை. ஜெர்மன் ஷெப்பர்ட், லாப்ரடார் இன நாய்கள் தான் பெரும்பாலும் பயிற்சி கொடுக்கப்பட்டு மோப்ப நாய்களாகப் பயன்படுத்தப்படுகின்றன.

வெடி பொருள்களைக் கண்டு பிடிக்க உதவும் கருவிகளைவிட இந்த நாய்களுக்குப் பத்தாயிரம் மடங்கு சக்தி அதிகம். மனிதர்களின் கேட்கும் சக்தியைவிட இவற்றுக்கு 40 மடங்கு அதிகம். ஒளித்து அல்லது புதைத்து வைக்கப்பட்டிருக்கும் வெடி பொருள்களை இவை, சமிக்ஞைகளால் மட்டுமே அடையாளம் காட்டுகின்றன. குரைத்தால் எங்கே அந்த அதிர்விலேயே அவை வெடித்து விடுமோ என்கிற எச்சரிக்கை உணர்வு!

250 மீட்டர் தூரத்துக்கு அப்பால் யாராவது நடமாடினால் கூட இவை கண்டு பிடித்து விடும். கட்டட விபத்துகளின் இடிபாடுகளுக் கிடையில் உயிருடன் போராடிக் கொண்டிருப்பவர்களை இவை துல்லியமாகக் கண்டு பிடித்து விடும். ஒருவன் தலையிலிருந்து விழுந்த பொடுகை வைத்தே அவனது இருப்பிடத்துக்கு அழைத்துச் சென்றுவிடும். 150 நாட்களுக்கு முன் ஒருவன் விட்டுச் சென்ற ஒரு பொருளிலிருந்து (இடையில் அப்பொருளை யாரும் தொடாமல் இருந்ததால்) அவன் பதுங்கியிருந்த இடத்தை அண்மையில் இந்த நாய்கள் கண்டு பிடித்துக் கொடுத்தன. சியாச்சின் பனிப்பாறைக்கடியில் சுமார் 36 அடிக்குக் கீழே புதைந்துவிட்ட சிலருடைய ஈனஸ்வரமான முனகலைக் கூட இந்த நாய்கள் துல்லியமாகக் கண்டு பிடித்து, அவர்களைக் காப்பாற்ற உதவியிருக்கின்றன!

தகவல் : அ. ஷண்முகசுந்தரம்

---

எழுதியிருக்கீங்களே தம்பி. அது எப்படி தம்பி...? சந்தோஷம் கொடுக்காத ஒரு காரியத்தைச் செஞ்சு ஒர்த்தரால வெற்றி கண்டிட முடியுமா! கொட்ற மழையும் கொதிக்கற வெயிலும் எத்தனை நாள் எங்களுக்குச் சொகமா இருந்துருக்கு தெரியுமா? நாளைக்கு தொழிற்சங்கப் போராட்டம் ஆரம்பிக்குதுன்னாக்க, இன்னிக்கே எங்களுக்கு நாடி நரம்பெல்லாம் முறுக்கேறிக்கும். போராட்டத்தோட குறி மட்டுமே நெஞ்சுல நிக்கும். போராட்டம்கற போது மனசுல கிளர்ந்துட்டு வர்ற சந்தோஷமும் உற்சாகமும் இல்லாட்டி எல்லாம் தவிடாப் போயிடும் தம்பி. துக்கப்பட்டுக்கிட்டே போராடறவன் ஜெயிக்க மாட்டான். துக்கம் தான் அவனை ஜெயிக்கும். சந்தோஷம்... சந்தோஷம்... சந்தோஷம்... மனசு பூரா குளிர்ந்து நிக்கறச்ச வர்ற சந்தோஷம் இருக்கே, அது ஜெயிக்கும்யா. மலையே எதுத்து வந்து மோதினாக் கூட சல்லிசா ஜெயிக்கும்."

பலராமனின் பேச்சு என்னை மூர்ச்சை கொள்ளச் செய்தது. பிடறியில் ஒரு வெட்டு வெட்டி, தலை குப்புறப் புரட்டித் தள்ளியது. எது நிஜம் எது பொய்யென்று புரியவில்லை. உணர்ந்து உணர்ந்து, ரசித்து ரசித்து எழுதிய எழுத்தும் பொய்யாகக் கூடுமா என்கிற சஞ்சலம் மனசை அரித்தது.

இந்த சலனங்கள் இரண்டு நாட்கள் என்னை வெகுவாய் பாதித்தது. அதோடு பிந்துவின் நினைவு வேறு ஓர் ஓரத்தில் குருவியாய் சிறகடித்துக் கொண்டிருந்தது. பிந்துவை கைப்பிடித்து அவளோடு சுகிக்க வேண்டும் என்கிற ஆவல் தீவிரப்பட்டது. அவள் என் அருகில் இருந்தால் இன்னமும் உயரே பறப்பது சாத்தியம் என்று மனசு அரற்றிற்று. அவள் என் தோள் தட்டி என்னை உச்சத்துக்குத் தூக்கிச் செல்வாள் என்று திடமாய் நம்பினேன்.

இதை அவளிடம் சொல்வதில் தயக்கமும் தாமதமும் கூடாது என்று நெஞ்சம் குறி சொன்னது.

இந்த நினைவுகளோடு அன்று பிந்துவை



"என்னங்க, உங்களைத் தேடி உங்க ஃபிரண்டு வந்திருந்தாரு. நான் கிச்சனுக்குள் போயிட்டு வந்து பார்த்தா அவரைக் காணோம்."

"நீ அவனிடம் ஏதாவது ஏறுமாறா சொன்னியா?"

"இல்லியே, 'கொஞ்சம் இருங்க, காப்பி கலந்து எடுத்துட்டு வர்றேன்'னு தான் சொன்னேன்!"

— க. சரவணக்குமார்

சந்திக்கப் போனேன்.

மனத்தில் உள்ளதை வரிசையாய் அவளிடம் வடிப்பதற்கு என்னைத் தயார் படுத்தியிருந்தேன். எது முன்னது எது பின்னது என்று கோவையாகக் கொட்டுவதற்கு என் சொற்களைப் பழக்கியிருந்தேன். துல்லியமான கணக்குகளோடு பிந்துவின் இல்லம் சென்ற போது பிந்து, ஓர் ஆடவனுடன் அந்நியோன்யமாய் அருகமர்ந்து பேசிக் கொண்டிருந்தாள்.

அந்த நெருக்கம் எனக்குப் பெரிதாய் வருத்தம் தந்தது.

என்னைக் கண்டதும் வாயெல்லாம் புன்னகையுடன் வாசலுக்கு வந்து அழைத்தாலும் அந்த ஆண்மகனின் நெருக்கம் என்னை முகம் சிவக்கச் செய்தது. உள்ளே வந்து அமர்ந்த பிறகும் முகம் வெளிறி தரை பார்த்து உட்கார்ந்திருந்தேன். பிந்து, இரண்டு மூன்று முறை என்னைப் பேச வைக்க யத்தனித்தாள். நான் பிந்துவின் கேள்விகளுக்கு மட்டும் பதில் பகர்ந்து விட்டு, மீண்டும் மீண்டும் தலை தாழ்த்திக் கொண்டேன்.

பிந்துவின் அருகில் அமர்ந்திருந்த அந்த ஆள், "பிந்து... சார் உங்கிட்ட ஏதோ தனியா பேசணும் போல்ருக்கு. நா வேணா கொஞ்ச நேரம் கழிச்சு வரேன்..." என்கிற நாகரிக வார்த்தைகளோடு மௌனமாய் வெளியேறினார்.

நான், அவசரமாய் பதற்றத்தோடு, "இல்... இல்.... இல்ல சார்..." என்று வார்த்தைகளை பிரசவிக்கு முன்பே அவர் முழுவதுமாய் வெளியேறியிருந்தார்.

பிந்து என் சலனப்பட்ட முகத்தைப் பார்த்துவிட்டு என்னைத் தேற்றினாள். "என்ன வேணு... என்ன ஒரு மாதிரியா யிருக்கீங்க? இதெல்லாம் ஒரு ரைட்டருக்கு ஆகாத விஷயமாச்சே. கண்ணுல எப்பவும் தேஜஸோட எதையாவது தேடிக்கிட்டே இருக்க வேண்டிய ஆள், இப்படி தலையைக் கவுத்துக்கிட்டு உக்காந்திருக்கறது நல்லாவா இருக்கு! சுமான் வேணு. என்ன சொல்லுங்க."

ஏதேதோ பேச நினைத்து வந்த நான், பிந்துவிடம் சற்று முன் பேசிவிட்டுப் போன அந்த ஆள் என்னை ரொம்பவும் பாதித்ததால் அதை முதலில் அவளிடம் விசாரித்தேன். "யாரு பிந்து அந்த ஆள்? ரொம்ப நேரமா பேசிட்டிருந்திங்க போல்ருக்கு...!"

"தெரியாதா?" பிந்து தன் விழிகளை அகலத் திறந்து வினவினாள்.

"....."

"என்னய்யா வெளையாடறியா? அவர் தான் என் ஹஸ்பண்ட். மிஸ்டர் தேசிகன். ஹோ... உங்கிட்ட நா அவரை இதுவரை இன்ட்ரடியூஸ் பண்ணி வெக்கலையா? இது வரைக்கும் நீ அவரைப் பார்த்ததே இல்லையா! என் அப்பாவுக்கு அடுத்து என்னோட க்ளோஸ் ஃப்ரண்ட் ஹஸ்பண்ட் தான். மனுஷன், ஜெம் தெரியுமா. இப்பக் கூட பாத்தியா. நீ என்னோட ஏதோ தனியா பேசணுங்கறதை சூசகமாப் புரிஞ்சுக்கிட்டு மனுஷன் இங்கிதமா ஒதுங்கிட்டார் பாரேன். நல்ல இங்கிதம் தெரிஞ்ச மனுஷன். மனுஷ உணர்வுகளை மதிக்கற ஒரு நல்ல ஆள். நட்புங்கறதுக்கு அவர்ட்ட கேட்டுத்தான் இலக்கணம் வகுக்கணும்..."

பிந்து பேசிக் கொண்டிருக்க... என்னைத் தராசுக் கோலின் ஒரு தட்டில் ஏற்றி நிறுத்திக் கொண்டேன். கெஞ்சிக் கூத்தாடி பிந்துவின் கணவரை அடுத்த தட்டில் ஏறி நிற்கச் சொன்னேன். தராசுத் தட்டில் தன் சுண்டு விரலை முதலில் பதித்தார் தேசிகன். தட்டு மள மளவென்று அவர் பக்கம் சரிந்தது. நான் இருந்த தட்டில் எக்கி எக்கி என்னைத் தேடினேன். தட்டு வெற்றிடமாய்க் காட்சியளிக்க, நான் முழுசாய்க் காணாமல் போயிருந்தேன்.

# பொன்னியின் செல்வன்




கல்கி கலெக்ஷன்

இருபத்து நான்காம் அத்தியாயம்

## காக்கையும் குயிலும்



ரவெல்லாம் கட்டையைப் போல் கிடந்து தூங்கிவிட்டுக் காலையில் சூரியன் உதித்த பிறகே வந்தியத்தேவன் துயிலெழுந்தான். விழித்துக் கொண்ட பிறகும் எழுந்திருக்க மனம் வராமல் படுத்திருந்தான். மேலக்காற்று விர்ரென்று வீச, மரஞ்செடிகளின் கிளைகளும் இலைகளும் ஒன்றோடொன்று உராய்ந்து 'சோ' என்ற சத்தத்தை உண்டாக்கிக் கொண்டிருந்தன. அந்தச் சுருதிக்கிணங்க, ஓர் இளம் பிள்ளையின் இனிய குரல் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் தேவாரப் பாடலைப் பண்ணுடன் பாடியது.

**"பொன்னார் மேனியனே புலித்**
**தோலை அரைக்கசைத்து**
**மின்னார் செஞ்சடைமேல் மிளிர்**
**கொன்றை அணிந்தவனே!"**

இதைக் கேட்ட வந்தியத்தேவன் கண்ணை விழித்துப் பார்த்தான். அவனுக்கெதிரே பூந்தோட்டத்தில் கொன்றை மரங்கள் சரஞ்சரமாகப் பொன் மலர்களைத் தொங்கவிட்டுக் கொண்டு காட்சியளித்தன. சேந்தன் அமுதன் ஒரு கையில் குடலையும் இன்னொரு கையில் அலக்கும் வைத்துக் கொண்டு, வாயினால் பாடிக் கொண்டே, கொன்றை மலர்களைப் பறித்துக் கொண்டிருந்தான். அதிகாலையிலே எழுந்து ஸ்நானம் செய்து திருநீறு புனைந்திருந்த சேந்தன் அமுதன், சிவபக்தனாகிய மார்க்கண்டனைப் போல் தோன்றினான். இப்படி இனிமையாகவும் அழகாகவும் பாடும் பிள்ளையின் குரலைக் கேட்க அவனுடைய அன்னை கொடுத்து வைக்கவில்லையே என்ற எண்ணத்துடன் வந்தியத்

அமரர் கல்கி

தேவன் எழுந்தான். அமுதனைப் போல் தானும் பூந்தோட்டம் வளர்த்துச் சிவ கைங்கரியம் செய்துகொண்டு ஏன் ஆனந்தமாய்க் காலங் கழிக்கக் கூடாது? எதற்காகக் கையில் வாளும் வேலும் ஏந்திக் கொண்டு ஊர் ஊராக அலைய வேண்டும்? எந்த நேரமும் பிறரைக் கொல்லுவதற்கும் பிறரால் கொல்லப்படு வதற்கும் ஆயத்தமாக ஏன் திரிய வேண் டும்? – இத்தகைய எண்ணங்கள் அவன் மனத்தில் உதித்தன. ஆனால் சிறிது நேரத் தில் மனம் மாறியது. சேந்தன் அமு தனைப் போல் உலகில் எல்லாருமே சிவ பக்தர்களாயிருந்து விடுவார்களா? திருடர் களும் கொள்ளைக்காரர்களும் வஞ்சகர் களும் எளியவர்களைத் துன்புறுத்துவதில் களிப்படைகிறவர்களும் இருக்கத்தான் இருப்பார்கள். இவர்களையெல்லாம் அடக்கி, நியாயத்தையும் தர்மத்தையும் நிலைநாட்ட அரசாங்கம் வேண்டும். அர சாங்கம் நடத்த அரசர்களும் அமைச்சர் களும் வேண்டும். இவர்களுக்கு ஆபத்து வராமல் பாதுகாக்க வேளக்காரப் படை களும் வேண்டும். தன்னைப் போல் அர சர்களுக்கு ஓலை கொண்டு போகவும் ஆட்கள் வேண்டும்.... ஆம்! இன்று சுந்தர சோழ சக்கரவர்த்தியைப் பார்த்தே தீரவேண்டும். பெரிய பழுவேட்டரையர் திரும்பி வருவதற்குள் சக்கரவர்த்தியைப் பார்த்தால்தான் பார்த்தது. அவர் வந்து விட்டால் அது சாத்தியமில்லாமலே போகலாம்...

பூந்தோட்டத்துக்குப் பக்கத்திலே யிருந்த தாமரைக் குளத்தில் குளித்து விட்டு வந்து, வல்லவரையன் ஆடை ஆபரணங்கள் அணிந்து தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டான். சக்கரவர்த் தியைத் தரிசனம் செய்யப் போகும்போது சாதாரணமாகப் போகலாமா? இதற்காகத் தான் அலங்கரித்துக் கொண்டானா, அல் லது பழுவூர் இளையராணியை அன்று மீண்டும் பார்க்கப் போகிறோம் என்கிற எண்ணமும் அவன் மனத்திற்குள் இருந் ததா என்று நாம் சொல்ல முடியாது.

காலை உணவுக்குப் பிறகு சேந்தன் அமுதன் உச்சிவேளை பூஜைக் கைங்கரியத்துக்காகப் பூக்குட லையுடன் கிளம்ப, வந்தியத்தேவன் சக்கர வர்த்தியின் தரிசனத்துக்காகப் புறப்பட் டான். இருவரும் நடந்தே சென்றார்கள்.

கோட்டைக்குள் குதிரையைக் கொண்டு போக வேண்டாம் என்று வல்ல வரையன் முன்னமேயே தீர்மானித்திருந் தான். குதிரை நன்றாக இளைப்பாற அவ காசம் கொடுப்பது அவசியம். சீக்கிரத்தில் அக் குதிரையை, தான் துரிதப் பிரயா ணத்துக்கு உபயோகப்படுத்த வேண்டி வரலாம், யார் கண்டது? எப்படியானா லும், அது இங்கே இருப்பதுதான் நல்லது.

கோட்டை வாசல் போய்ச் சேரும் வரையில் அமுதனுடன் பேச்சுக் கொடுத்து இன்னும் சில விவரங்களைத் தெரிந்து கொண்டான்.

"உன் அன்னையைத் தவிர உனக்கு வேறு உற்றார் உறவினர் யாரும் கிடை யாதா?" என்று வல்லவரையன் கேட்ட தற்கு அமுதன் கூறியதாவது : "இருக் கிறார்கள். என் அன்னையுடன் கூடப் பிறந்த ஒரு தமக்கையும் தமையனும் உண்டு. தமக்கை காலமாகி விட்டாள். தமையனார் **கோடிக்கரைக் குழகர்** கோயிலில் புஷ்ப கைங்கரியம் செய்கிறார். அத்துடன் இரவு நேரங்களில் கலங்கரை விளக்கத்தில் தீபமேற்றிப் பாதுகாக்கும் பணியும் செய்து வருகிறார்... அவருக்கு ஒரு புதல்வனும் புதல்வியும் உண்டு. புதல்வி...." என்று நிறுத்தினான்.

"புதல்விக்கு என்ன?"

"ஒன்றுமில்லை. எங்கள் குடும்பத்தி லேயே ஒரு விசித்திரம். சிலர் ஊமை யாகப் பிறப்பார்கள்; மற்றவர்கள் இனிய குரல் படைத்திருப்பார்கள்; நன்றாய்ப் பாடுவார்கள்...."

"உன் மாமனின் மகள் ஊமை இல் லையே?" என்றான் வந்தியத்தேவன்.

"இல்லை, இல்லை!"

"அப்படியானால் நன்றாய்ப் பாடக் கூடியவள் என்று சொல்லு. உன்னைக் காட்டிலும் நன்றாய்ப் பாடுவாளா?"

"அழகாயிருக்கிறது உங்கள் கேள்வி. 'குயில், காக்கையை விட நன்றாய்ப் பாடுமா?' என்று கேட்பது போலிருக்கிறது. பூங்குழலி பாடினால், சமுத்திர ராஜா அலை எறிந்து ஓசை செய்வதை நிறுத்தி



விட்டு அமைதியாகக் கேட்பார். ஆடு, மாடுகளும் காட்டு மிருகங்களும் மெய் மறந்து நிற்கும்...."

"உன் மாமன் மகளின் பெயர் பூங் குழலியா? அழகான பெயர்!"

"பெயர் மட்டுந்தானா அழகு?"

"அவளும் அழகியாகத்தான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால், நீ இவ்வளவு பரவசமடைவாயா?"

''மானும் மயிலும் அவளிடம் அழகுக்குப் பிச்சை கேட்க வேண்டும். ரதியும் இந்திராணியும் அவளைப் போல் அழகியாவதற்குப் பல ஜன்மங்கள் தவம் செய்ய வேண்டும்."

சேந்தன் அமுதனுடைய உள்ளம் சிவபக்தியிலேயே பூரணமாக ஈடுபடவில்லை யென்பதை வல்லவரையன் கண்டுகொண்டான்.

''அப்படியானால் உனக்குத் தகுந்த மணப் பெண் என்று சொல்லு. மாமன் மகளாகை யால் முறைப் பெண் ணுங் கூடத்தானே? கல்யாணம் எப் போது?" என்று கேட் டான் வந்தியத்தேவன்.

''எனக்குத் தகுந்

தவன் என்று ஒரு நாளும் சொல்ல மாட்டேன். நான் அவளுக்கு எவ்விதத்திலும் தகுதியில்லாதவன். பழைய நாட்களிலே போலப் பூங்குழலிக்குச் சுயம்வரம் வைத்தால் ஐம்பத்தாறு தேசத்து ராஜாக்களும் வந்து போட்டி போடுவார்கள்! தமயந்தியை மணந்து கொள்வதற்கு வானுலகத்திலிருந்து தேவர்கள் வந்தது போல் வந்தாலும் வருவார்கள். ஆனால் இந்தக் கலியுகத்தில் அவ்விதமெல்லாம் ஒருவேளை நடவாது....''

"அப்படியானால் உன்னை மணந்து கொள்ள அவள் விரும்பினாலும் நீ மறுத்து விடுவாய் என்று சொல்லு!"

"நன்றாயிருக்கிறது. இறைவன் என் முன்னால் தோன்றி, 'நீ சுந்தரமூர்த்தியைப் போல் இந்த உடம்போடு கைலாஸத்துக்கு வருகிறாயா? அல்லது பூலோகத்திலிருந்து பூங்குழலியுடன் வாழ்கிறாயா?'' என்று கேட்டால் 'பூங்குழலியுடன் வாழ்கிறேன்' என்றுதான் சொல்லுவேன். ஆனால் நான் சொல்லி என்ன பயன்?''

"ஏன் பயன் இல்லை? உனக்குச் சம்மதமாயிருக்கும்போது அநேகமாகக் கல்யாணம் ஆனது போலத்தானே? எல்லாரும் பெண்களைக் கேட்டுக் கொண்டுதானா கலியாணம் செய்கிறார்கள்? உதாரணத்துக்கு, பெரிய பழுவேட்டரையர் அறுபத்தைந்து வயதுக்கு மேல் கலியாணம் செய்து கொண்டிருக்கிறாரே! அந்த ராணியின் சம்மதத்தின் பேரிலா திருமணம் நடந்திருக்கும்!....''

"அண்ணா! அது பெரிய இடத்துச் சமாசாரம், நாம் ஏன் அதைப் பற்றிப் பேச வேண்டும்? முக்கியமாக, உங்களுக்கு எச்சரிக்கை செய்கிறேன். நீங்கள் கோட்டைக்குள் போகிறீர்கள். கோட்டைக்குள் பழுவேட்டரையர்களைப் பற்றி எதுவும் பேச வேண்டாம். பேசினால் ஆபத்து வரும்!....''

"ஏது தம்பி, ஒரேயடியாகப் பயமுறுத்துகிறாயே?''

"உண்மையைத்தான் சொல்கிறேன். மெய்யாக, இரண்டு பழுவேட்டரையர்களுந்தான் இப்போது சோழ சாம்ராஜ்யத்தையே ஆளுகிறார்கள். அவர்களுடைய அதிகாரத்துக்கு மிஞ்சிய அதிகாரம் வேறு கிடையாது."

"சக்கரவர்த்திக்குக் கூடவா அவர்களை விட அதிகாரம் இல்லை?''

சக்கரவர்த்தி நோய்வாய்ப்பட்டுக் கிடக்கிறார். பழுவூர்க்காரர்கள் போட்ட கோட்டை அவர் தாண்டுவதில்லை என்று ஜனங்கள் சொல்லுகிறார்கள். அவருடைய சொந்தப் புதல்வர்களுடைய பேச்சுக் கூடக் காதில் ஏறுவதில்லை என்கிறார்கள்.''

"அப்படியா சமாசாரம்! பழுவேட்டரையர்களுடைய செல்வாக்கு அபாரமாய்த்தான் இருக்க வேண்டும். இரண்டு வருஷத்துக்கு முன்னால் அவர்களுக்கு இத்தனை செல்வாக்கு இல்லை அல்லவா?''

"இல்லை; அதிலும் சக்கரவர்த்தி தஞ்சைக்கு வந்த பிறகு பழுவேட்டரையர்களுடைய அதிகாரம் எல்லையில்லாமல் போய் விட்டது. அவர்களைத் தட்டிப் பேசுவதற்கே யாரும் கிடையாது. **அநிருத்த பிரமராயர்** கூட வெறுப்படைந்துதான் பாண்டிய நாட்டுக்குப் போய்விட்டார் என்று கேள்வி."

"பழையாறையிலிருந்து சக்கரவர்த்தி தஞ்சாவூருக்கு எதற்காக வந்தார்? உனக்குத் தெரியுமா, தம்பி!''

"நான் கேள்விப்பட்டதைச் சொல்லுகிறேன். மூன்று வருஷத்துக்கு முந்தி வீரபாண்டியன் போரில் மாண்டான். அச்சமயம் சோழர் படைகள் பாண்டிய நாட்டில் சில கொடூரங்களைச் செய்ததாகக் கேள்வி. யுத்தமென்றால் அப்படித்தானே? மதுரை சோழ ராஜ்யத்துக்கு உட்பட்டு விட்டது. ஆனால் வீரபாண்டியனுக்கு அந்தரங்கமான சிலர், எப்படியாவது பழிக்குப் பழி வாங்குவதென்று சபதம் எடுத்துக் கொண்டு சதி செய்கிறார்களாம். பழையாறையில் மன்னர் இருந்தால் அவரைப் பாதுகாக்க முடியாது என்றுதான் அவரைப் பழுவேட்டரையர்கள் தஞ்சைக்கு அழைத்து வந்து விட்டார்கள். இங்கே கோட்டையும் வலிவுள்ளது; கட்டுக் காவலும் அதிகம். அதோடு சக்கரவர்த்தியின் உடம்பு நலத்துக்கும் பழையாறையைக் காட்டிலும் தஞ்சாவூர் நல்லது என்று வைத்தியர்கள் சொன்னார்கள்."

"சுந்தர சோழரின் உடம்பைப் பற்றி எல்லாரும் சொல்லுகிறார்கள். ஆனால் என்ன நோய் என்று மட்டும் யாருக்கும்

தெரிவதில்லை."

"தெரியாமல் என்ன? சக்கரவர்த்திக்குப் பக்கவாதம் வந்து இரண்டு கால்களும் சுவாதீனம் இல்லாமல் போய் விட்டன."

"அடடா! அதனால் அவரால் நடக்கவே முடிவதில்லையோ?"

"நடக்க முடியாது; யானை அல்லது குதிரை மீது ஏறவும் முடியாது. படுத்த படுக்கைதான். பல்லக்கில் ஏற்றி இடத்துக்கு இடம் கொண்டு போனால்தான் போகலாம். அதிலும் வேதனை அதிகம். ஆகையால் சக்கரவர்த்தி அரண்மனையை விட்டு வெளிக் கிளம்புவதே இல்லை. சில காலமாகச் சித்தம் அவ்வளவு சுவாதீனத்தில் இல்லையென்றும் சொல்கிறார்கள்."

"ஆஹா! என்ன பரிதாபம்!"

"பரிதாபம் என்று கூடச் சொல்லக் கூடாது, அண்ணா! அதுவும் ராஜ நிந்தனை என்று சொல்லிப் பழுவேட்டரையர்கள் தண்டனை விதிப்பார்கள்."

பழுவேட்டரையர்! பழுவேட்டரையர்! – எங்கே, யாரிடம் பேசினாலும் பழுவேட்டரையர்களைப் பற்றியே பேச்சு! அவர்கள் எவ்வளவு பராக்கிரமசாலிகளாய் இருந்தால்தான் என்ன? தன் பொக்கிஷம்; தானியக் களஞ்சியம், தஞ்சை நகர்க் காவல், ஒற்றர்படை எல்லாம் அவர்களுடைய வசத்தில் இருக்கும்படி சக்கரவர்த்தி விட்டிருக்கக் கூடாது. இவ்வளவு அதிகாரத்தையும் அவர்களிடம் விட்டதனால் அல்லவா சக்கரவர்த்திக்கு விரோதமாகச் சதி செய்யத் தொடங்கி விட்டார்கள்? இவர்களுடைய சதி எவ்வளவு தூரம் பலிக்குமோ? அது பலிக்காமல் போக நம்மால் இயன்ற பிரயத்தனம் செய்ய வேண்டும். சந்தர்ப்பம் கிடைத்தால் சக்கரவர்த்திக்கும் எச்சரிக்கை செய்து வைக்க வேண்டும்!.....

இதற்குள் கோட்டை வாசல் வந்து விட்டது. சேந்தன் அமுதன் தனது புதிய நண்பனைப் பிரிந்து தளிக்குளத்தார் ஆலயத்தை நோக்கிச் சென்றான்.

வந்தியத்தேவனோ எத்தனையோ மனக்கோட்டைகளுடன் அந்தக் கோட்டை வாசலை நெருங்கினான்.

## இருபத்தைந்தாம் அத்தியாயம்

# கோட்டைக்குள்ளே

பனை இலச்சினை தாங்கிய மோதிரம் கதைகளில் வரும் மாய மோதிரத்தைப் போல் அபாரமான மந்திர சக்தி வாய்ந்ததாயிருந்தது.

காலை நேரத்தில் பால், தயிர் விற்பவர்கள், பூக்கூடைக்காரர்கள், கறிகாய் விற்பவர்கள், பழக் கடைக்காரர்கள், மற்றும் பல தொழில்களையும் செய்வோர், கணக்கர்கள்; உத்தியோகஸ்தர்கள் முதலியோர் ஏகக் கூட்டமாகக் கோட்டைக்குள் பிரவேசிக்க முயன்று கொண்டிருந்தார்கள். கோட்டைக் கதவின் திட்டிவாசலைத் திறந்து அவர்களை ஒவ்வொருவராக உள்ளே விடுவதிலே கோட்டை வாசற் காவலர்கள் தங்கள் படாடோப அதிகாரத்தைக் காண்பித்துக் கொண்டிருந்தார்கள்.



ஆனால் நம் இளம் வீரன் பனை இலச்சினை பொறித்த மோதிரத்தைக் காட்டியதுதான் தாமதம், காவலர்கள் மிக்க மரியாதை காட்டி, கோட்டைக் கதவுகளில் ஒன்றைத் திறந்து விட்டார்கள். வந்தியத்தேவனும் கோட்டைக்குள் பிரவேசித்தான்.

ஆகா! தஞ்சைபுரிக் கோட்டைக்குள் அவன் கால் வைத்த வேளை என்ன வேளையோ தெரியாது! அதிலிருந்து எத்தனை எத்தனை முக்கிய நிகழ்ச்சிகள் தொடர்ந்து வந்தன! சோழ சாம்ராஜ்யத்தின் சரித்திரத்திலேயே அது ஒரு முக்கிய சம்பவமாகவல்லவா ஏற்பட்டது!

கோட்டைக்குள் பிரவேசித்துச் சிறிது நேரம் வரை வந்தியத்தேவன் ஒரே பிரமிப்பில் ஆழ்ந்திருந்தான்.

காஞ்சி பழைய பல்லவ சாம்ராஜ்யத்தின் தலைநகரம். பல தடவை பகைவர்களின் தாக்குதல்களுக்கு உட்பட்டது. அங்கிருந்த மாளிகைகளும் மண்டபங்களும் மற்ற கட்டடங்களும் பழைமையடைந்து சிதிலமாகிப் பூஞ்சக் காளான் பூத்திருந்தன. அழகிய சிற்ப வேலைப்பாடுகள் அமைந்த கட்டடங்கள்தான்; ஆனாலும் பல பகுதிகள் இடிந்தும் சிதைந்தும் கிடந்தன. ஆதித்த கரிகாலர் வந்த பிறகு புதுப்பித்துக் கட்டிய சில மாளிகைகள் மட்டும், பட்ட மரத்தில் ஒவ்வோரிடத்தில் தளிர்த்திருக்கும் மலர்களைப் போல் விளங்கி, நகரத்தின் பாழடைந்த தோற்றத்தை மிகைப்படுத்திக் காட்டின.


ந்தத் தஞ்சையின் தோற்றமோ நேர்மாறாக இருந்தது. எல்லாம் புதிய மாளிகைகள்; புதிய மண்டபங்கள். வெண் சுண்ண மாளிகைகளுக்கு மத்தியில் செம்மண்ணில் கட்ட செங்கற்களினால் கட்டிய சிற்சில கட்டடங்கள் வைரங்களுக்கும் முத்துக்களுக்கும் இடையிலே இரத்தினங்களைப் பதித்தது போல் ஒளி வீசித் திகழ்ந்தன. ஆங்காங்கு அரண்மனைத் தோட்டங்களில் வளர்ந்திருந்த விருட்சங்கள் செம்மண் பூமியின் சத்தை உண்டு, கொழு கொழுவென்று செழித்து ஓங்கியிருந்தன. புன்னை, தென்னை, அசோகம், அரசு, ஆல், பலா, வேம்பு முதலிய மரங்களில் அடர்ந்து தழைத்திருந்த இலைகள் மரகதப் பச்சையின் பல சாயல்களுடன் கண்ணுக்கு இனிமையையும் மனத்துக்கு உற்சாகத்தையும் அளித்தன. அதிசய சக்திவாய்ந்த மந்திரவாதியான மயன் புதிதாக நிர்மாணித்த நகரம் இது. இந்தப் புதிய நகருக்குள் பிரவேசிக்கும் போதே ஒரு புதிய உற்சாகம் பிறந்தது; உள்ளம் பூரித்துப் பொங்கியது; காரணம் தெரியாத கர்வம் நிறைந்தது.

கோட்டையின் கட்டுக்காவலையும் கோட்டைக்குள் பிரவேசிப்பதில் உள்ள நிர்ப்பந்தங்களையும் கவனித்திருந்த வந்தியத்தேவன், உள்ளே அதிக ஜனநடமாட்டமே இல்லாமல் வெறிச்சென்று இருக்கும் என்று எண்ணியிருந்தான். ஆனால் அதற்கு நேர்மாறாக, தெருக்களெல்லாம் ஜே ஜே என்று கூட்டமாயிருந்தது. குதிரைகளும் குதிரை பூட்டிய ரதங்களும் பூமி அதிரும்படி சத்தமிட்டுக் கொண்டு சென்றன. கரிய குன்றுகள் அசைந்து வருவது போல் நிதானமாகவும் கம்பீரமாகவும் நடந்து வந்த யானைகளின் மணி ஓசை நாலாபுறங்களிலும் கேட்டது! பூ, கறிகாய், பழம், பால், தயிர் விற்போரின் கூச்சல்கள் செவிகளைத் தொளைத்தன. அவ்வப்போது காலத்தை அறிவிக்கும் ஆலாட்சி மணிகளின் ஓசையுடன் பேரிகையின் முழக்கமும் கலந்தது. இசைக் கருவிகள் எழுப்பிய இன்னிசைகளுடன் மங்கையர் பாடிய மதுரகீதங்கள் கலந்தன. எல்லாம் ஒரே திருவிழாக் கோலாகலமாகவே இருந்தது.

நகரம் என்றால் இதுவல்லவா நகரம்! நாளுக்கு நாள் விரிந்து பரந்து வரும் ஒரு சாம்ராஜ்யத்தின் தலைநகரம் இப்படித்தான் இருக்கும் போலும்!

தான் இத்தகைய நகரத்துக்கு முற்றிலும் புதியவன் என்று காட்டிக் கொள்ள வந்தியத்தேவன் விரும்பவில்லை. யாரையாவது வழி கேட்டால் தன்னை ஏற இறங்கப் பார்த்து, "நீ இந்த ஊருக்குப் புதியவனா?" என்று அலட்சியமாகப் பேசுவார்கள். அரண்மனைக்கு வழி கேட்கிறவனை வெளியூரிலிருந்து வந்த பட்டிக்காட்டான் என்று கூட நினைத்து விடுவார்கள். ஆகையால், யாரையும் வழி கேட்காமலேயே சக்கரவர்த்தியின் அரண்மனையைக் கண்டுபிடித்துப் போய்விட வேண்

டும். அது அப்படியொன்றும் முடியாத காரியமாயிராது...

எந்தப் பக்கம் நோக்கினாலும் மாட மாளிகைகளின் மீது மகர தோரணங்களும் கொடிகளும் தோன்றின. வேகத்துடன் வீசிய மேலக்காற்றுடன் அவை துவந்த யுத்தம் செய்து சடசட படபட வென்று சத்தம் செய்து கொண்டு பறந்தன. புலிக் கொடிகளும் பனைக்கொடிகளுமே அதிகமாகக் காணப்பட்டன. மற்ற எல்லாக் கொடிகளையும் தாழ்த்திக் கொண்டு மேக மண்டலத்தை அளாவிக் கம்பீரமாக ஒரு பெரிய புலிக்கொடி பறந்தது. அதுவே சக்கரவர்த்தி தங்கும் அரண்மனையாக இருக்க வேண்டும் என்று வல்லவரையன் ஊகித்துக் கொண்டு, அக்கொடி பறந்த திக்கை நோக்கித் தான் மேலே செய்ய வேண்டிய காரியத்தைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டு நடந்தான்.

சக்கரவர்த்தியை நேரில் சந்தித்து ஓலையைக் கொடுப்பது முதற்காரியம். அதோடு ஆதித்த கரிகாலர் நேரில் வாய்மொழியாகத் தெரிவிக்கச் சொன்னதையும் சொல்ல வேண்டும். சின்னப் பழுவேட்டரையரின் அநுமதியின்றிச் சக்கரவர்த்தியைப் பார்க்க முடியாது. அவருடைய அநுமதியை எப்படிப் பெறுவது? கோட்டைக்குள் பிரவேசிப்பதற்குத் தெய்வம் துணை செய்தது. ஆனால் முழுதும் தெய்வம் வழிகாட்டும் என்றே இருந்து விடலாமா? சக்கரவர்த்தியைப் பார்ப்பதற்கு நாமேதான் யுக்தி கண்டுபிடித்தாக வேண்டும்! அது என்ன யுக்தி! வாணர் குலத்தில் வழிவழியாக வந்த மூளையே! கொஞ்சம் வேலை செய், பார்க்கலாம்! சிறிது உன் கற்பனா சக்தியைத் தட்டி விடு! காவியம், கவிதை எழுதுவோருக்கு மட்டும் கற்பனா சக்தி தேவை என்பதில்லை. உன்னைப் போல் இராஜாங்க காரியங்களில் ஈடுபட்டவர்களுக்கும் கற்பனா சக்தி வேண்டும். எங்கே, உன் கைவரிசையைக் காட்டு, பார்க்கலாம்!....

பெரியபழுவேட்டரையர் இன்னும் கோட்டைக்கு வந்து சேரவில்லை என்பதை வந்தியத்தேவன் உறுதிப்படுத்திக் கொண்டான்.

கோட்டைவாசலைத் தாண்டி உள்ளே வந்ததும், அங்கே உட்புறத்தில் நின்ற காவலன் ஒருவனிடம், "ஏன் அப்பா! பழுவேட்டரையர் திரும்பி வந்து விட்டாரா?" என்று கேட்டான்.

"யாரைக் கேட்கிறாய், தம்பி! சின்னவர் அரண்மனையில்தான் இருக்கிறார்."

"அது எனக்குத் தெரியாதா? நடு நாட்டுக்குச் சென்றிருந்த பெரியவரைப் பற்றித்தான் கேட்கிறேன்."

"ஓ! பெரியவர் நடுநாட்டுக்கா சென்றிருந்தார்? அது எனக்குத் தெரியாது. நேற்று மாலை இளையராணியின் பல்லக்குத் திரும்பி வந்தது. பெரிய அரசர் இன்னும் வரவில்லை. இன்று இரவு திரும்பக்கூடும் என்று செய்தி வந்திருக்கிறது!" என்றான் காவலன்.

இது நல்ல செய்திதான். பெரிய பழுவேட்டரையர் திரும்பி வருவதற்குள்ளே எப்படியும் சக்கரவர்த்தியைப் பார்த்து ஓலையைக் கொடுத்தாக வேண்டும், அதற்கு என்ன வழி?... வந்தியத்தேவனுடைய மூளையில் ஒரு யோசனை உதயமாகிவிட்டது! அந்தக் கணமே அவன் முகத்தில் கவலைக்குறி மறைந்தது; குறும்புப் புன்னகையும் குதூகல மலர்ச்சியும் தோன்றின.

சக்கரவர்த்தியின் அரண்மனையை அணுகுவதற்கு அவன் அதிகமாக அலைந்து திரிய வேண்டியிருக்கவில்லை. பெரிய புலிக்கொடியைப் பார்த்துக் கொண்டே போனான். விரைவிலேயே அரண்மனை முகப்பை அடைந்து விட்டான். ஆகா! இது எத்தகைய அரண்மனை! தேவலோகத்தில் தேவேந்திரனுடைய அரண்மனையையும் உஜ்ஜயினி நகரத்து விக்ரமாதித்யனுடைய அரண்மனையையும் போல அல்லவா இருக்கிறது? அந்த முன் வாசல் மண்டபத்துத் தூண்களில் செய்திருக்கும் சிற்ப வேலைகளின் அற்புதந்தான் என்ன! ஒவ்வொரு தூணிலும் செதுக்கியிருக்கும் குதிரை, முன்கால்களைத் தூக்கிக் கொண்டு அப்படியே பாய்வது போல இருக்கிறதே!

அரண்மனையை அடைவதற்குப் பல பாதைகள் நானா திசைகளிலிருந்தும் வந்தன. ஒவ்வொரு பாதை முடிவிலும் இரண்டு குதிரை வீரர்களும் சில காலாள் வீரர்களும் நின்றார்கள். அவர்களண்டை நெருங்கி வராமலே அவ்வீதிகளில் நடமாடிய ஜனங்களில் பலர் திரும்பிப் போய் விட்டார்கள். ஒருசிலர் அவர்கள் கிட்டே வந்து சற்றே நின்று அரண்மனை முகப்பை எட்டிப் பார்த்துவிட்டும், புலிக்கொடியை அண்ணாந்து பார்த்து விட்டும் போனார்கள். அதிக நேரம் நின்று கூட்டம் சேரும்போலிருந்தால் காவலர்கள் கையினால் சமிக்ஞை செய்து அவர்களைப் போகும்படி செய்தார்கள். கூட்டங்கூடி நின்றவர்களும் இரைந்து



பேசாமல் காதோடு மெள்ளப் பேசிக் கொண்டார்கள்.

வந்தியத்தேவன் மற்றவர்களைப் போல் சிறிதும் தயங்கி நிற்கவில்லை. வேகமாகவும் மிடுக்காகவும் நடந்து சென்று அரண்மனைப் பாதைக் காவலர்களை நெருங்கினான். உடனே இரு குதிரைகளும் முகத்தோடு முகம் உராயும்படி வழி மறித்து நின்றன. குதிரை மேலிருந்தவர்கள், கீழே நின்றவர்கள், அனைவருடைய வேல்களும் முனையோடு முனை பொருந்தி வழியை அடைத்தன.

வந்தியத்தேவன் தன்னுடைய மந்திர மோதிரத்தை நீட்டினான். அவ்வளவுதான்; அதைப் பார்த்தவுடனே அவ்வீரர்களின் முடுக்கும் பெருமிதமும் அடங்கின. ஒருவர் பின் ஒருவராக மூன்று பேர் மோதிரத்தை உற்றுப் பார்த்தார்கள். "சரி; வழி விடுங்கள்!" என்று ஒருவன் சொன்னான். இரண்டு வேல்கள் உடனே அகன்று நின்று வழிவிட்டன. வந்தியத்தேவன் மிடுக்குடன் நடந்து சென்றான்.

ஆயினும், என்ன? இன்னும் எத்தனை காவல்கள் இப்படி உண்டோ? சின்னப் பழுவேட்டரையர் எங்கே இருக்கிறாரோ? எப்படி விசாரிப்பது? யாரிடம் கேட்பது? சின்னப் பழுவேட்டரையரின் அனுமதியின்றிச் சக்கரவர்த்தியைப் பார்க்க முடியாது; இந்தப் பெரிய விஸ்தாரமான அரண்மனையில் நோயாளியான சக்கரவர்த்தி எந்த இடத்தில் இருக்கிறாரோ? அதைத்தான் எவ்விதம் தெரிந்து கொள்வது?....

தனக்குப் பின்னால் சிலர் கூட்டமாக வருவதை அறிந்து வந்தியத்தேவன் திரும்பிப் பார்த்தான். ஆம்; பத்துப் பதினைந்து பேர் கும்பலாக வந்து, காவலர்களருகில் நின்றார்கள். அவர்கள் உயர்ந்த பட்டுப் பீதாம்பரங்கள் தரித்திருந்தார்கள். முத்து மாலைகள், மகர கண்டிகள், காதில் குண்டலங்கள் அணிந்திருந்தார்கள். சிலர் நெற்றியில் திருநீறும் மற்றவர்கள் சந்தனம், குங்குமம், சவ்வாதுப் பொட்டும் இட்டிருந்தார்கள்! ஆ! இவர்களைப் பார்த்தால் புலவர்களைப் போல அல்லவா இருக்கிறது!... ஆம், புலவர்களின் கூட்டந்தான் என்று மறுகணமே தெரிந்து விட்டது.

காவலர்களில் ஒருவன் – அவர்களுடைய தலைவனாயிருக்க வேண்டும், "கவிராயர்கள் வந்திருக்கிறார்கள்! வழி விடுங்கள்!" என்று சொன்னதுடன் ஒரு வீரனைப் பார்த்து, "சின்னப் பழுவேட்டரையர் ஆஸ்தான மண்டபத்தில் இருக்கிறார். அவரிடம் கொண்டு போய்விடு!" என்றான்.

"புலவர்களே! ஏதாவது பரிசு கிடைத்தால்



"போகும்போது இந்த வழியாகவே திரும்பிச் செல்லுங்கள்! பரிசு கிடைக்கா விட்டால் வேறு வழியாகப் போய்விடுங்கள்!" என்று மேலும் அவன் சொன்னதைக் கேட்டு மற்றவர்கள் சிரித்தார்கள்!

சற்று நின்று இந்தச் சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த வந்தியத்தேவன், "பழம் நழுவிப் பாலில் விழுந்தது!" என்று எண்ணிக் கொண்டான். இந்தப் புலவர்களுடனே போனால் சின்னப் பழுவேட்டரையர் இருக்குமிடம் போய்ச் சேரலாம். யாரையும் வழி விசாரிக்க வேண்டியதில்லை. பிறகு, நமது சாமர்த்தியம் இருக்கிறது; அதிர்ஷ்டமும் இருக்கிறது! இவ்வாறு எண்ணியபடியே புலவர் கூட்டத்துடன் சென்றான்.

## இருபத்தாறாம் அத்தியாயம்

## "அபாயம்! அபாயம்!"



ஸ்தான மண்டபத்தில் புலவர்களுக்கு முன்னதாகவே வந்தியத்தேவன் பிரவேசித்தான். அங்கே ஓர் உயர்ந்த சிம்மாசனத்தில் கம்பீரமாக வீற்றிருப்பவர்தான் சின்னப் பழுவேட்டரையராயிருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொண்டான். அவரைச் சுற்றிலும் பலர் கைகட்டி வாய் புதைத்து நின்றார்கள். அன்று வந்த ஓலைகள் பலவற்றை வைத்துக் கொண்டு ஒருவர் நின்றார். கணக்காயர் கணக்குச் சொல்வதற்குக் காத்திருந்தார். காவல் படைத் தலைவர்கள் சின்னப் பழுவேட்டரையருடைய அன்றாடக் கட்டளைகளை எதிர்பார்த்து நின்றார்கள். ஏவிய வேலைகளைச் செய்வதற்குப் பணியாளர்கள் காத்திருந்தார்கள். சிம்மாசனத்துக்குப் பின்னால் நின்று சில ஏவலாளர் வெண் சாமரம் வீசிக் கொண்டிருந்தார்கள். கையில் வெற்றிலைப் பெட்டியுடன் ஒருவன் ஆயத்தமாயிருந்தான்.

மிடுக்கிலும் பெருமிதத்திலும் யாருக்கும் பின்வாங்காதவனான வந்தியத்தேவன் கூடச் சிறிது அடக்க ஒடுக்கத்துடனேதான் சின்னப் பழுவேட்டரையரிடம் அணுகினான்.

பெரியவரைக் காட்டிலும் சின்னவர் வீர கம்பீரத்தில் இன்னும் ஒரு படி உயர்ந்தவராகவே காணப்பட்டார்.

நமது வீரனைப் பார்த்ததும் அவர் முக மலர்ச்சியுடன், "யார், தம்பி, நீ! எங்கிருந்து வருகிறாய்?" என்று கேட்டார்.

வீர வாலிபர்களைக் கண்டால் சின்னப் பழுவேட்டரையரின் கடுகடுத்த முகம் மலர்ந்து விடும். நாடெங்கும் உள்ள வாலிப வீரர்களைத் தம்முடைய காவல் படையில் சேர்த்துக் கொள்வதில் அவருக்கு மிக்க ஆர்வம்.

"தளபதி! நான் காஞ்சிபுரத்திலிருந்து வந்தேன்! இளவரசர் ஓலை கொடுத்து அனுப்பினார்!" என்று பணிவான குரலில் வந்தியத்தேவன் மறுமொழி சொன்னான்.

காஞ்சீபுரம் என்றதும் சின்னப் பழுவேட்டரையரின் முகம் கடுத்தது.

"என்ன? என்ன சொன்னாய்?" என்று மீண்டும் கேட்டார்.

"காஞ்சீபுரத்திலிருந்து இளவரசர் கொடுத்த ஓலையுடன் வந்தேன்!"

"எங்கே இப்படிக் கொடு!" என்று அலட்சியமாய்க் கேட்டபோதிலும் அவருடைய குரலில் சிறிது பரபரப்புத் தொனித்தது.

வல்லவரையன் அடக்க ஒடுக்கத்துடன் ஓலைச் சுருளை எடுத்துக் கொண்டே, "தளபதி! ஓலை சக்கரவர்த்திக்கு!" என்றான்.

அதைப் பொருட்படுத்தாமல் சின்னப் பழுவேட்டரையர் ஓலையை வாங்கி ஆவலுடன் பார்த்தார். பக்கத்தில் நின்றவனிடம் கொடுத்து அதைப் படிக்கச் சொன்னார். கேட்டுவிட்டு, "புதிய விஷயம் ஒன்றுமில்லை!" என்று தமக்குத் தாமே முணுமுணுத்துக் கொண்டார்.

''தளபதி! நான் கொண்டு வந்த ஓலை...'' என்றான் வந்தியத்தேவன்.

"ஓலைக்கு என்ன? நான் கொடுத்து விடுகிறேன் சக்கரவர்த்தியிடம்!"

"இல்லை; என்னையே நேரில் சக்கர வர்த்தியின் கையில் கொடுக்கும்படி...."

''ஓகோ! என்னிடம் நம்பிக்கை இல்லையா? இளவரசர் ஆதித்தர் அப்படி உன்னிடம் சொல்லி அனுப்பினாரோ?" என்ற போது, தஞ்சைக் கோட்டைத் தளபதியின் முகத்தில் எள்ளும் கொள் ளும் வெடித்தன.

''இளவரசர் அவ்வாறு சொல்ல வில்லை; தங்கள் தமையனார்தான் அவ் விதம் கட்டளையிட்டார்!"

"என்ன? என்ன? பெரியவரை நீ எங்கே பார்த்தாய்?"

''வழியில் கடம்பூர் சம்புவரையர் வீட்டில் ஒருநாள் இரவு தங்கியிருந்தேன். அங்கேதான் பார்க்க நேர்ந்தது. இந்த மோதிரத்தையும் அவர்தான் கொடுத் தனுப்பினார்....''

''ஆகா இதை நீ ஏன் முன்னமே சொல்லவில்லை? கடம்பூரில் இரவு நீ தங்கியிருந்தாயா? இன்னும் யார் யார் வந்திருந்தார்கள்?''

"மழநாடு, நடுநாடு, திருமுனைப்பாடி நாடுகளிலிருந்து பல பிரமுகர்கள் வந்திருந் தார்கள்...."

''இரு. இரு! பிறகு சாவகாசமாகக் கேட்டுக் கொள்கிறேன். முதலில் நீயே இந்த ஓலையைச் சக்கரவர்த்தியிடம் கொடுத்து விட்டு வா! அப்புறம் தமிழ்ப் புலவர்கள் வந்து விடுவார்கள். வளவள வென்று பேசிக் கொண்டிருப்பார்கள்... இந்தப் பிள்ளையைச் சக்கரவர்த்தியிடம் அழைத்துப் போ!" என்று அருகில் நின்ற வீரன் ஒருவனுக்குச் சின்னப் பழுவேட்ட ரையர் கட்டளையிட்டார்.

அந்த வீரனைத் தொடர்ந்து வந்தியத் தேவன் மேலும் அரண்மனையின் உட்புறத்தை நோக்கிச் சென்றான்.

மூன்று பக்கங்களில் அலைகடல் முழக்கம் கேட்கும்படியாகப் பரந் திருந்த சோழ சாம்ராஜ்யத்தின் சிங்காசனம் சில காலமாக நோய்ப்



படுக்கையாக மாறியிருந்தது. அந்தச் சிம்மாசனத்தில் பராந்தக சுந்தர சோழ சக்கரவர்த்தி சாய்ந்து படுத்திருந்தார். இராஜ்யாதிகாரங்களையெல்லாம் மற்றவர்களிடம் ஒப்படைத்து விட்டு, மருத்துவச் சிகிச்சை செய்து கொண்டிருந்தாராயினும் சிற்சில முக்கியமான சந்தர்ப்பங்களில் முக்கியமான மனிதர்களுக்கு அவர் தரிசனம் அளித்தே தீரவேண்டியிருந்தது. அமைச்சர்களும் தளபதிகளும் வேளக்காரப் படை வீரர்களும் அவரைத் தினந்தோறும் வந்து தரிசித்து விட்டுப் போவது இராஜ்யத்தின் நன்மைக்கு அவசியமாயிருந்தது.

எத்தனையோ போர் முனைகளில் செயற்கரும் வீரச் செயல்கள் புரிந்து அசகாய சூரர் என்று பெயர் பெற்றவரும், நாடு நகரமெல்லாம் 'சுந்தர சோழர்' என்று அழைக்கப்பட்டவரும், அழகில் மன்மதனுக்கு ஒப்பானவர் என்று புகழ் பெற்றவருமான சக்கரவர்த்தியின் நோய்ப்பட்டு மெலிந்த தோற்றத்தைக் கண்டதும் வந்தியத்தேவனால் பேசவே முடியாமற் போய் விட்டது. அவனுடைய கண்களில் நீர் ததும்பியது. அருகில் சென்று அடி பணிந்து வணங்கிப் பயபக்தியுடன் ஓலையை நீட்டினான்.

சக்கரவர்த்தி ஓலையை வாங்கிக் கொண்டே, "எங்கிருந்து வந்தாய்? யாருடைய ஓலை?" என்று ஈனஸ்வரத்தில் கேட்டார்.

"பிரபு, காஞ்சியிலிருந்து வந்தேன். இளவரசர் ஆதித்தர் தந்த ஓலை!" என்று வந்தியத்தேவன் நாத் தழுதழுக்கக் கூறினான்.

சக்கரவர்த்தியின் முகம் உடனே பிரகாசம் அடைந்தது. அவர் அருகில் திருக்கோவலூர் மலையமான் புதல்வியான சக்கரவர்த்தினி வானமாதேவி வீற்றிருந்தாள். அவளைப் பார்த்து, "தேவி! உன் புதல்வனிடமிருந்து ஓலை வந்திருக்கிறது!" என்று சொல்லிவிட்டுப் படித்தார்.

"ஆகா! இளவரசன் காஞ்சியில் பொன் மாளிகை கட்டியிருக்கிறானாம். நீயும் நானும் அங்கு வந்து சிலநாள் தங்கியிருக்க வேண்டுமாம்!" என்று சொல்லியபோதே, சக்கரவர்த்தியின் முகம் முன்னைவிடச் சுருங்கியது.

"தேவி! உன் புதல்வன் செய்கையைப் பார்த்தாயா? என் பாட்டனார், உலகமெல்லாம் புகழ்பெற்ற பராந்தக சக்கரவர்த்தி, அரண்மனையில் சேர்ந்திருந்த தங்கத்தையெல்லாம் அளித்துத் தில்லை அம்பலத்துக்குப் பொன் கூரை வேய்ந்து, பொன்னம்பலம் ஆக்கினார். நம்முடைய குலத்தில் தோன்றிய பெரியவர்கள் யாரும் தாங்கள் வசிக்கும் அரண்மனையைப் பொன்னால் கட்டியதில்லை. அரண்மனை கட்டுவதைக் காட்டிலும் ஆலயம் எடுப்பதையே முக்கியமாகக் கருதினார்கள். ஆனால் ஆதித்த கரிகாலன் இப்படிச் செய்திருக்கிறான்! ஆகா! இந்தத் தெய்வ நிந்தனைக்கு என்ன பரிகாரம் செய்வது?" என்றார்.

மகனிடமிருந்து ஓலை வந்தது என்பதைக் கேட்டுச் சிறிது மலர்ச்சியடைந்த தேவியின் முகம் மறுபடி முன்னைக் காட்டிலும் அதிகமாக வாடியது. மறுமொழி ஒன்றும் அவளால் சொல்ல முடியவில்லை.

அச்சமயத்தில் வந்தியத்தேவன் தைரியமும், துணிவும் வரவழைத்துக் கொண்டு, "பிரபு தங்கள் திருக்குமாரர் செய்தது அப்படியொன்றும் தவறில்லையே? உசிதமான காரியத்தையே செய்திருக்கிறார். மகனுக்குத் தாயும் தந்தையுமே முதன்மையான தெய்வங்கள் அல்லவா? ஆகையால் தாங்களும், தேவியும் வசிப்பதற்காகத் தங்கள் புதல்வர் பொன்மாளிகை கட்டியது முறைதானே?" என்றான்.

சுந்தர சோழர் புன்னகை பூத்து, "தம்பி! நீ யாரோ தெரியவில்லை. மிக்க அறிவாளியாயிருக்கிறாய். சாதுர்யமாகப் பேசுகிறாய். ஆனால் மகனுக்குத் தாய், தந்தை, தெய்வமே என்றாலும், மற்றவர்களுக்கு இல்லைதானே? எல்லாரும் வழிபடும் தெய்வத்துக்கு அல்லவா பொன் கோயில் எடுக்க வேண்டும்!" என்றார்.

"பிரபு! மகனுக்குத் தந்தை தெய்வம்; மக்களுக்கெல்லாம் அரசர் தெய்வம்.

அரசர்கள் திருமாலின் அம்சம் பெற்றவர்கள் என்று வேத புராணங்கள் சொல்லுகின்றன. ஆகையால் அந்த வகையிலும் தங்களுக்குப் பொன் மாளிகை எடுத்தது பொருத்தமானதே!" என்றான் நம் வீரன்.

சுந்தர சோழர் மறுபடியும் மலையமான் திருமகளை நோக்கி, "தேவி! இந்தப் பிள்ளை எவ்வளவு புத்திசாலி, பார்த்தாயா? நம்முடைய ஆதித்தனுக்கு இவனையொத்தவர்களின் உதவியிருந்தால், அவனைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. அவனுடைய அஜாக்கிரதை சுபாவத்தைப் பற்றியும் விசாரப்பட வேண்டியதில்லை!" என்றார்.



பிறகு, வந்தியத்தேவனைப் பார்த்து, "தம்பி! பொன் மாளிகை கட்டியது உசிதமானாலும் உசிதமில்லாவிட்டாலும் நான் காஞ்சிக்கு வருவது சாத்தியமில்லை. நீதான் பார்க்கிறாயே! எப்போதும் படுத்த படுக்கையாக இருந்து வருகிறேன். நெடுந்தூரப் பிரயாணத்தை மேற்கொள்ளுதல் இயலாத காரியம். ஆதித்தன்தான் என்னைப் பார்ப்பதற்கு இங்கே வந்தாக வேண்டும். அவனைக் காண்பதற்கு எங்களுக்கும் ஆசையாகத்தான் இருக்கிறது. நாளைக்கு மீண்டும் வா! மறு ஓலை எழுதி வைக்கும்படி சொல்லுகிறேன்!" என்றார்.

இச்சமயத்தில், கூட்டமாகப் பலர் தரிசன மண்டபத்தை நெருங்கி வருவதை வந்தியத்தேவன் அறிந்தான். ஆகா! அந்தப் புலவர் கூட்டம் வருகிறது போலும்! அவர்களுடன் ஒருவேளை சின்னப் பழுவேட்டரையரும் வருவார். அப்புறம் தான் சொல்ல வேண்டியதைச் சொல்ல முடியாமலே போய் விடலாம்! நாலு வார்த்தையில் சுருக்கமாக இப்போதே சொல்லிவிட வேண்டியதுதான்! – இவ்விதம் சில விநாடிப் பொழுதில் சிந்தித்து முடிவு செய்து, "சக்கரவர்த்தி! தயவு செய்யுங்கள்! கருணைகூர்ந்து என் விண்ணப்பத்தைக் கேளுங்கள். தாங்கள் அவசியம் இந்தத் தஞ்சையிலிருந்து கிளம்பிவிட வேண்டும். இங்கே தங்களை அபாயம் சூழ்ந்திருக்கிறது! அபாயம்! அபாயம்!..." என்றான்.

அவன் இவ்விதம் சொல்லிக் கொண்டிருக்கும்போதே சின்னப் பழுவேட்டரையர் தரிசன மண்டபத்துக்குள் பிரவேசித்தார். அவரைத் தொடர்ந்து புலவர்கள் வந்தார்கள்.

வந்தியத்தேவன் கடைசியாகக் கூறிய வார்த்தைகள் கோட்டைத் தளபதியின் காதில் விழுந்தன. அவருடைய முகத்தில் கோபக் கனல் ஜ்வாலை விட்டது!

(தொடரும்)

# பேசும் படங்கள் மூன்று வகை



• அபூர்வ சகோதரர்கள்

நமது பேசும் படங்களைச் சாதாரண மாக மூன்று விதமாய்ப் பிரிப்பதுண்டு:– ஆடும் படங்கள், பாடும் படங்கள், ஓயா மல் பேசும் படங்கள் என்று. இந்த வேடிக் கைப் பிரிவினையைத் தவிர, வேறு மூன்று வகையாகவும் பேசும் படங்களைப் பிரிக்கலாம்.

**1. களிப்பூட்டும் படங்கள்:–** நாடோடி வாழ்க்கையில் ஈடு பட்டு அலுப்படைந்திருக்கும் மக்களுக்குச் சிறிது நேரம் வாழ்க்கைத் தொல்லைகளை மறந்து உல்லாசமாகப் பொழுது போக்கு வதற்குச் சாதனமான படங்கள் அவசியம் தேவைதான். ரஸமான கதைப் போக்கு, மனோகரமான காட்சிகள், ஆடல் பாடல் கள், சிக்கலான சந்தர்ப்பங்கள், அவற்றி லிருந்து விடுதலையடையும் கட்டங்கள் ஆகியவை இந்த வகைப்பட்ட பேசும் படங்களில் அதிகமாக இருத்தல் இயல்பு.

ஆனால் 'களிப்பூட்டுதல்' என்ற பெய ரால் மக்களின் மனதை மாசுபடுத்தும் ஆபாசக் காட்சிகள் உள்ள படங்கள் வெளியாவது நாட்டுக்கு எல்லா வகை யிலும் கேடு சூழக் கூடியது.

களிப்பூட்டும் படங்கள் குற்றமற்ற உயர்ந்த முறை யில் தயாரிக்கப்பட வேண் டும்.

இந்த ரகத்தில் தமிழ் நாட்டில் சமீப காலத்தில் வெளியாகியிருக்கும் படங் களுக்குச் "சந்திரலேகா", "அபூர்வ சகோதரர்கள்", "வாழ்க்கை" ஆகியவை சிறந்த உதாரணங்கள் ஆகும். இவை தமிழ் நாட்டில் மட்டுமல்லாமல் ஹிந்தியிலும் எடுக்கப்பட்டு வடநாட்டிலும் வெற்றி யடைந்தன. இது குறித்து நாம் மகிழ்ச்சியும் பெருமையும் அடைய லாம்.

ஆனால் ஸினிமாவைப் போன்ற அபார சக்தியுள்ள சாதனத்தைக் களிப்பூட்டும் கருவி யாக மட்டும் உபயோகப்படுத்துவதில் நாம் பூரண திருப்தி அடைய முடியுமா? அடைய முடியாது; அடை யவுங் கூடாது.

**2. கருத்துள்ள படங்கள்:** சமூக முன் னேற்றத்துக்கும் தேச முன்னேற்றத்துக்கும் பயன்படக் கூடிய கருத்துள்ள ஸினிமாப் படங்களும் அவசியம் தேவை. இவற்றைப் "பிரசார நோக்கங் கொண்ட படங்கள்" என்று சொல்லுவதற்கு நாம் தயங்க வேண்டியதில்லை. ருஷியா தேசத்தில் வெளியாகும் எல்லாப் படங்களும் பிர சார நோக்கங் கொண்டவையே. அமெரிக் காவில் வெளியாகும் படங்களில் பாதிக்கு மேல் பிரசார நோக்கங் கொண்டவை தான். அவரவர்களுடைய தேசமும் அந் தந்த தேசத்தின் மக்களும் முன்னேறி

உயரும் முறையில் பிரசாரக் கருத்துள்ள படங்களை அந்தந்தத் தேசங்களில் எடுக்கிறார்கள். அதற்காக அவர்கள் வெட்கப்படுவதில்லை. சில படங்கள் அப்பட்டமான பிரசாரமாயிருக்கின்றன. வேறு சில படங்கள் நாஸுக்கான உயர்ந்த முறையில் பிரசாரம் செய்கின்றன.

ருஷியாவையும் அமெரிக்காவையும் நோக்கும்போது நம் பாரத நாடு எவ்வளவோ முன்னேற வேண்டியிருக்கிறது. நம் நாட்டுக்குப் பிரசார நோக்கமுள்ள படங்கள் அவசியம் வேண்டும். ஆனால் பிரசாரம் என்ற பெயரால் விஷத்தைக் கக்கித் துவேஷத்தை வளர்க்கும் படங்கள் வெளியாகக் கூடாது.

• சந்திரலேகா

கருத்துள்ள படங்களில் கலந்த பிரசாரம், தேசத்துக்கும் சமூகத்துக்கும் நன்மை தருவதாயிருக்க வேண்டும். நாடு உயர்வதற்கும் மக்கள் உயர்வதற்கும் சாதனமாயிருக்க வேண்டும். உழைப்பை உயர்த்தி, ஊக்கத்தை வளர்த்து, மலை போன்ற கஷ்டங்களைக் கண்டும் மனந்தளராத உள் வலிமையை ஊட்டி, சமூக நீதியை நிலைநாட்டும் உயர்ந்த கருத்துக்கள் அடங்கிய படங்கள் இந்தியாவின் இப்போதைய நிலையில் இன்றியமையாதவை. இந்த நோக்கத்தை ஓரளவு நிறைவேற்றிய தமிழ்ப் படங்களுக்கு, சமீபத்தில் வெளி வந்தவற்றுள், "நல்ல தம்பி", "ஏழைபடும் பாடு" இவற்றை உதாரணமாகக் குறிப்பிடலாம்.

இம்மாதிரி படங்கள் இன்னும் ஏராளமாக வெளிவர வேண்டும்; அவை மற்ற அம்சங்களில் வெற்றிகரமான படங்களாகவும் அமைய வேண்டும்.

ஆனால் இது மட்டும் போதுமா?




**கல்கி கலெக்ஷன்**

**அமரர் கல்கி**

போதாது!

**3. தரம் உயர்ந்த படங்கள்:** வெளி நாடுகளிலே திரையிட்டு நமது புகழை வளர்க்கக் கூடிய சில உயர்தரப் படங்களாவது ஒவ்வொரு வருஷத்திலும் வெளியாக வேண்டும்.

இதைக் கேளுங்கள்: சென்ற சில மாதங்களில் இந்தியா தேசத்துக்கு வெளி நாடுகளிலிருந்து கலாசார கோஷ்டிகள் பல வந்தன. இங்கிலாந்து, அமெரிக்கா, ருஷியா, இத்தாலி, பிரான்ஸ், செக்கோஸ்லோவேகியா முதலிய பல நாடுகளிலிருந்தும் சிறந்த கலைஞர்கள் பலர் வந்தார்கள். அவர்கள் நம்முடைய சிற்பக் கலையின் அற்புதங்களைப் பார்த்து வியந்து பாராட்டினார்கள். நமது சங்கீதத்தைக் கேட்டு உவந்து புகழ்ந்தார்கள். நமது பரத நாட்டியக் கலையைக் கண்டும் கேட்டும் பரவசமடைந்தார்கள். "உங்கள் சிற்பத்துக்கும் சங்கீதத்துக்கும் பரதநாட்டியத்துக்கும் உலகில் இணையில்லை" என்று சொன்னவர்களும் உண்டு. ஏன்? நம் நாடகங்களைப் பார்த்துக் கூட வெளிநாட்டவர்களில் சிலர் தங்கள் சந்தோஷத்தை வெளியிட்டார்கள்.

ஆனால் அப்படி வந்திருந்த கலாசார கோஷ்டியில் யாராவது "உங்கள் ஸினிமாவைப் பார்த்தேன்; நன்றாயிருந்தது!" என்று சொன்னதாக இதுவரையில் நாம் கேள்விப்படவில்லை.

இதற்காக அவர்களை நாம் நொந்து கொள்வதில் பயனில்லை. ஏனெனில் வெளி நாட்டார் கண்டு வியக்கக் கூடிய உயர்தரமான படங்களை இன்னும் நாம் வெளியிடவில்லை.

இத்தகைய உயர்தரப் படங்களுக்கு வெளிநாட்டுப் படங்களைத்தான் நாம் உதாரணம் சொல்ல வேண்டியிருக்கிறது. அமெரிக்காவில் பல பரிசுகள் பெற்ற "Best Years of our Lives" என்ற படத்தையும் ருஷியாவில் வெளியான "The Story of a Real Man" என்னும் படத்தையும் உதாரணமாகச் சொல்லலாம்.

இத்தகைய தரம் உயர்ந்த படங்கள்– வெளி உலகத்தில் நம் நாட்டையும் நம் சமூகத்தையும் நம் ஸினிமாக்கலையையும் உயர்த்திப் புகழ் அளிக்கக் கூடிய படங்கள்– இந்திய மக்களின் வாழ்க்கையில் உள்ள இன்ப துன்பங்களைச் சித்திரிக்க வேண்டும்; அவர்களுடைய இனிய பண்புகளைச் சித்திரிக்க வேண்டும்; இந்தியாவின் புராதனப் பண்பாட்டைச் சித்திரிக்க வேண்டும்; இந்தியாவின் உயரிய பாரமார்த்திக இலட்சியங்களை நல்ல முறையில் வெளியிட வேண்டும்.

பிரபல அமெரிக்க டைரக்டரான பிராங்க் கோப்ரா என்பவர் சென்னையில் நடந்த சர்வதேச பிலிம் விழாவில் கூறியதென்ன?

"உங்களுடைய படங்களில் உலகம் முக்கியமாக எதிர்பார்ப்பது உங்களுடைய பாரமார்த்திகப் பெருமையைத்தான்!" என்றார்.

நம்மிடம் சிறுமைகள் எவ்வளவோ இருக்கத்தான் இருக்கின்றன. அவற்றை நமக்குள் எடுத்துக் காட்டிப் பரிமாறிக் கொண்டால் போதுமல்லவா? குறைகளை எடுத்துக் காட்டி இந்தியாவுக்கு விரோதமான பிரசாரம் செய்ய அன்னியர்கள் பலர் இருக்கிறார்கள். நாமும் எதற்காக அந்த நீசத் தொழிலைச் செய்ய வேண்டும்?

நம்முடைய சினிமா முதலாளிகள் "இந்திய சர்க்கார் படத் தொழிலுக்கு உதவி செய்வதில்லை" என்று ஓயாமல் குறை கூறுகிறார்கள். பிற நாட்டார் வந்திருக்கும் சபைகளிலேயும் தமாஷா வரியைப் பற்றி முறையிடுகிறார்கள்.

எத்தனையோ அரும்பாடுபட்டு அடைந்த சுதந்திரத்தைப் பாதுகாத்துத் தேசத்தை முன்னேற்ற முயன்று வரும் தேசத் தலைவர்களுக்கு நம் ஸினிமா முதலாளிகள் செய்ய வேண்டிய உதவியும் இருக்கிறது; தேசத்துக்கு அவர்கள் செய்ய வேண்டிய கடமையும் இருக்கிறது.

இந்திய ஸினிமா முதலாளிகள் தனிப்பட்ட முறையிலாவது, பலர் ஒன்று சேர்ந்தாவது, இந்திய தேசத்தை உலகத்தின் முன்னிலையில் உயர்த்தக் கூடிய சில படங்களை ஆண்டுதோறும் தயாரித்து வெளியிட வேண்டும்.

அப்போது இந்திய சர்க்காரிடம் படத் தொழிலுக்கு உதவி கோரவும் சலுகைகள் கேட்கவும் நம் ஸினிமா முதலாளிகள் உரிமை பெறுவார்கள். அந்த நிலைமையில் பொதுமக்களும் அவர்களுக்கு வேண்டிய ஆதரவு அளிப்பார்கள்.

**(கல்கி, ஏப்ரல் 6, 1952)**

• சிகிச்சை...



"உமா, என்ன பிரச்னை உங்க கண்ணுல?"

"ரெண்டு கண்ணுமே மைனஸ் பவர். வலது 1.5. இடது 3. கண்ணாடி போடப் பிடிக்கலே. காண்டாக்ட் லென்ஸ் ஒரே உபத்திரவம்!"

"இப்போ சரியாயிடிச்சா?"

"ஓ! போன மாசம் எங்க கோயம்புத்தூரிலயே லேசர் ட்ரீட்மெண்ட் எடுத்துக்கிட்டேன். தொல்லை கம்ப்ளீட்டா போயிடிச்சு!"

"மிஸஸ் மகேசுவரி, உங்க கண் பவர் என்ன"

"எனக்கு ஒரு கண் மைனஸ் ஆறு. இன்னொரு கண் நார்மல்! அதனால ஒரு கண்ணாடில பவர்; இன்னொன்று ப்ளெயின் கிளாஸ். வீட்டுல நடக்கற போதே பாலன்ஸ் இல்லாம விழுந்துடற மாதிரி அவஸ்தை. அதனால இரண்டு வருஷமா கண்ணாடி போடாமயே இருந்தேன்."

"இப்போ?"

"இப்ப நோ பிராப்ளம், மைனஸ் ஆறயும் ஸீரோவுக்குக் கொண்டு வந்துட்டார் டாக்டர். பத்தே நிமிஷம்தான். முத நாள் ராத்திரிதான்

• கண் பரிசோதனை

# மூக்குக் கண்ணாடிக்கு டாடா காட்டுங்கள்!



• திருமதி தேவல்

கொஞ்சம் உறுத்தற மாதிரி இருந்தது. மறுநாள் ஒண்ணுமே இல்லே!"

மிஸஸ் தேவல் ஹேமந்த்துக்கு காண்டாக்ட் லென்ஸ் பிரச்னை. மைனஸ் 5.25. கண்ணாடி அணிந்து கொண்டு வாத்தியாரம்மா மாதிரி காட்சியளிக்கப் பிடிக்கவில்லை!

செக் அப்புக்கு ஒரு தடவை டாக்டரிடம் வந்தபோது, லேசர் சிகிச்சை மூலம் கண்ணாடியோ, கான்டாக்ட் லென்சோ அணிவதைத் தவிர்த்துவிட முடியும் என்று தெரிந்து கொண்டு, லேசர் ட்ரீட்மென்ட் எடுத்துக் கொண்டார். "பத்து நிமிஷம் கூட ஆகலே. ஒரு கண் பண்ணின உடனே அடுத்த கண்ணுக்கும் பண்ணி அரை மணிலே வீட்டுக்கு அனுப்பிச்சிட்டார் டாக்டர். ஐ'ம் வெரி ஹாப்பி நௌ!" என்றார் தேவல்.

கணவர் ஹேமந்த் குறுக்கிட்டு, "கல்யாணம் நிச்சயமான அன்றைக்கு, நான் இவ வீட்டுலேருந்து வெளியே வந்தபோது, பின்னாலயே ஓடி வந்தா. நான் கான்டாக்ட் லென்ஸ் போட்டிருக்கேன். இதை உங்ககிட்ட சொல்லாம மறைக்கறது தப்புன்னு தோணிச்சு. அதான் இப்ப சொல்லிட்டேன்!''ன்னா. இப்போ லேசர்ல சரியாயிடிச்சு... ஏதோ மாஜிக் மாதிரி இருக்கு சார் எனக்கு!" என்றார்.

**கோ**வை ஆர்.எஸ்.புரம் சுப்ரமணியம் சாலையில் இருக்கும் ஐ ஃபவுண்டேஷனின் லேசிக் சென்டரில், நாம் நேரில் சந்தித்தவர்கள்தாம் இவர்கள்.

இந்தியாவிலேயே முதல் முறையாக Lasik 217-C, கருவியைக் கொண்டு வந்து, இந்த மூன்று மாதங்களில் சுமார் 350 பேருக்கு மைனஸ், ப்ளஸ் இரண்டையுமே பத்தே நிமிடத்தில் லேசர் ஒளி பாய்ச்சிக் குணமாக்கியிருக்கிறார் டாக்டர் ராமமூர்த்தி.

பக்கத்திலே இருகூரிலிருந்து வந்திருந்த மில் ஊழியர் பரமேசுவரனுக்கு (மைனஸ் 10) லேசர் சிகிச்சை நடக்கையில் நாம் அருகிலிருந்து பார்த்தோம்.

கண்ணை இமைக்காமல் இருக்க கிளிப் போட்டுவிட்டு, இமை ஓரத்தில் இருக்கும் எண்ணெய்ப் பசை முதற் கொண்டு எடுத்துச் சுத்தம் செய்த பின், கருவிழியின் முன் பாகத்தை ஒரு செலஃபன் தாள் மாதிரி வெகு லகுவாக, மேலிருந்து கீழாக எடுத்துவிட்டு, கருவிழியின் மீது லேசர் கதிர்களைப் பாய்ச்சுகிறார் டாக்டர் சித்ரா. கிட்டத்தட்ட ஒரு நிமிடம்தான். பின்னர், கீழிருந்து மேலாக செலஃபன் தாள் போன்ற கருவிழியின் மேல் பாகத்தை அப்படியே மெதுவாகப் பொருத்தி, சுருக்கம் எதுவும் இல்லாமல் நீவி விட்டு, மறுபடி கண்களைச் சுத்தம் செய்து விடுகிறார். கண்கள் மைக்ரோஸ்கோப்பில் பார்க்க, கைகள் சிகிச்சை பெறுபவரின் கண்களில் அநாயாசமாக இயங்குகின்றன. முழுதும் க்ளீன் பண்ணிய பிறகு, கிளிப்பை எடுத்துவிட்டு, இரண்டு - மூன்று முறை கண்களைத் திறந்து மூடச் சொல்லுகிறார். அவ்வளவுதான்!

இயந்திரம் கம்ப்யூட்டருடன் சேர்ந்து இயங்கி, சிகிச்சை பெறுபவரின் விவரங்களை அப்போதே அச்சிட்டுக் கொடுத்து விடுகிறது.

லேசருக்குப் பயன்படுத்தப்படும் ஊசியின் விலை மட்டும் 4000 ரூபாய் ஆகிறது. டிஸ்போஸபிள். ஒரு கண்ணுக்கு உபயோகித்த பிறகு, அதைத் தூக்கித் தூரப் போட்டு விட வேண்டும்!

லேசருக்குத் தேவையான 'காஸ்' சிலிண்டர் விலை 8000 டாலர்கள். ஒரு நாள் இரண்டு பேருக்கு மட்டுமே உபயோகித்து விட்டு, மீதியை அடுத்த நாளைக்கு அல்லது மறு வாரத்துக்கு உபயோகிக்கலாம் என்று மூடி வைத்துவிட முடியாது. திறந்து விட்டால் முழுதுமாகப் பயன்படுத்தித் தான் தீர்த்ததாக வேண்டும். "அதனால்தான் புதன், வியாழன் இரண்டு நாட்களில் மட்டுமே இந்தச் சிகிச்சைக்கு நபர்களை புக் பண்ணிக் கொள்ளுகிறோம்!" என்றார் டாக்டர் ராமமூர்த்தி.

"இந்த லேசர் கருவியின் விலை என்ன?"

"சுமார் 2½ கோடி ரூபாய். இதற்கு சர்வீஸ்

கான்ட்ராக்ட் மட்டுமே வருடத்துக்கு 60,000 டாலர்கள். ஆனால் இதில் உள்ள கம்ப்யூட்டர் மூலம் அமெரிக்காவிலுள்ள இதன் தயாரிப்பாளர்களை உடனடியாகத் தொடர்பு கொண்டு உதவி பெறும் 'ஆன் லைன்' வசதி இருக்கிறது."

"ஐந்து வருடங்களுக்கு முன் சென்னை சங்கர நேத்ராலயாவில் எக்சைமர் லேசர் சிகிச்சை ஆரம்பித்தார்களே, அதற்கும் இதற்கும் என்ன வித்தியாசம்?"

"எக்சைமர் லேசரில் மைனஸ் 2 முதல் 9 வரைதான் அதிகபட்சமாகச் சரி செய்ய முடியும். அதிலும் சில பின் விளைவுகள் இருந்தன. அதில் ப்ளஸ் பவரைக் குணமாக்க முடியாது. இதிலோ மைனஸ் 25 வரையும், ப்ளஸ் 8 வரையும் குணமாக்கலாம். இவை தவிர, ஹான்சடோம் கருவி இதில் இணைந்து இருப்பது காரணமாக, மைனஸ் ஆகட்டும், ப்ளஸ் ஆகட்டும் – இரண்டையுமே துல்லியமாக நீக்கிவிட முடியும். ஹான்சடோம் இங்கே மட்டும்தான் இருக்கிறது. இந்தியாவில் வேறு எங்கும் இல்லை. கருவிழியின் மேல் உள்ள திரையை அகற்றிவிட்டு, அந்த மேல் பாகத்தைப் பாதிக்காமல், லேசர் ஒளி பாய்ச்சப்படுவதால், கண்களில் பிறகு வலியோ, சிவப்போ, நீர் வடிதலோ இல்லை!"

"எத்தனை வயதுக்குப் பிறகு இந்தச் சிகிச்சையை மேற் கொள்ளலாம்?"

"வோட்டுப் போடுகிற வயது! ஆமாம். பதினெட்டு வயது ஆக வேண்டும். ஏனென்றால், அப்போதுதான் கண்கள் முழுமையாக வளர்ச்சி பெறுகின்றன. சுமார் 70 வயது வரை செய்து கொள்ளலாம்."

லேசர் சிகிச்சைக்கு மறுநாளே, அன்றாட வேலைகளைக் கவனிக்கத் தொடங்கலாம். ஒரு வாரத்துக்குச் சொட்டு மருந்து விட்டுக் கொண்டால் போதும். ஒரு மாதத்துக்குப் பிறகு செக்அப்.

"நாற்பது வயதுக்குப் பிறகு வரும் சாளேசுவரத்துக்கு இந்த லேசர் சிகிச்சை பயன் அளிக்குமா?"

"சாளேசுவரம், கண்களில் உள்ள தசைகள் பலமிழப்பதால் வருவது. ஆனால், சாளேசுவரத்தையும் லாசிக் லேசர் மூலம் குணப்படுத்த முயற்சிகள் நடக்கின்றன. அதற்குத் தகுந்த சாஃப்ட்வேர் சில வருடங்களில் கிடைக்கக் கூடும். அப்போது சாளேசுவரத்திலிருந்தும் விடுதலை கிடைக்கலாம்!"

டாக்டர் ராமமூர்த்தி அளித்த தகவலின் படி, ஆண்கள் 60 -70 சதவிகிதமும், மீதியே பெண்களும் இந்த லேசர் சிகிச்சை செய்து கொள்ளுகிறார்கள்! (கண்ணாடி கீழே விழுந்து உடைவது, தொலைப்பது போன்ற காரணங்கள் இருக்கலாமோ?)

பம்பாயில் இந்தச் சிகிச்சைக்கு 65,000 ரூபாய் ஆகிறது. சென்னையில் கிட்டத்தட்ட பாதி ஆகிறதாம். லேசிக் சென்டரின் ஐ ஃபவுண்டேஷனில், இரண்டு கண்களுக்குமாக 20,000 ரூபாய் ஆகிறது.

கண்கள் சம்பந்தப்பட்ட அத்தனை நோய்களுக்கும், மாறு கண்ணை மாற்றி அமைக்கும் வசதி உட்பட – இங்கே சிகிச்சை அளிக்கப்படுகிறது.



**"என் சம்சாரம் சொல்வது வேடிக்கையாயிருக்குங்க!"**

**"என்ன சொல்றாங்க?"**

**"என் மாமியார் எனக்கு இழைத்த அநீதிகளுக்கு எந்தக் கட்சி மன்னிப்புக் கேட்கிறதோ அதுக்குத்தான் என் ஓட்டுனு சொல்றா!"**

**— சங்கராபரணன்**

சங்கர நேத்ராலயாவின் டாக்டர் பத்ரிநாத், இந்தக் கண் மருத்துவமனையைத் தொடங்கி வைத்துவிட்டு வந்து, இந்தச் சுற்று வட்டாரப் பகுதியிலிருந்து சங்கர நேத்ராலயாவுக்கு வரும் இரண்டாயிரத்துச் சொச்சம் நோயாளிகளுக்கும் தனிப்பட்ட கடிதம் எழுதினாராம், 'இனி நீங்கள் கோவை ஐ ஃபவுண்டேஷனிலேயே சிகிச்சை மேற் கொள்ளலாம்!' என்று.

இதுவே தமது குரு அளித்த மிகப் பெரிய பாராட்டு என்று அடக்கமாகச் சொன்னார் டாக்டர் ராமமூர்த்தி.

— சாருகேசி

# 12

# இன்று வாழலாம் வா!

ஜீவாவின் மனம் எப்போதோ பறந்து. சென்னையில்...! கவனமாகவே காரைச் செலுத்தினான். வேண்டும் போது வாக னங்களுக்கு வழி விட்டான். முன் பின் னாகச் செலுத்திப் பார்த்தான். எதிர் பார்த்தது போலவே எவருமே பின் தொடரவில்லை.

அதிகாலை தாம்பரம் சமீபம் ஒரு பெட்ரோல் பங்க்கிலிருந்து போன் செய் தான். அ(எ)ப்போதும் விழித்திருக்கும் ஆத்மா!

"கண்டுபிடித்தீர்களா பாஸ்?"

"அது ஓர் ஹோட்டல்! பார்க் டவுன் ஏரியாவில். கலபமாகத் தப்பிக்க ஏக பை-லேன்கள் அங்கே. பெயர் ஏஷியன் ஸ்டார் ஹோட்டல்."

''தங்கி யிருப்பது யார்? குப்தாவா?" என்றான் ஆவலு டன்.

''தெரியவில்லை ஜீவா. இரவு. நெருங்கி விசாரித்தால் உஷாராகிப் பறந்து விடுவான்! விடியட்டும். வெளியே தரிசனம் தரு கிறானா பார்ப்போம்..."

அவன் வீடு. காவல் இருந்த கான்ஸ்டபிள் கேட் டைத் திறந்து விட்டான். வீட்டினுள் அனைத்து விளக்குகளும் எரிந்து கொண் டிருந்தன. பாவம் ஷீலா. தூங்காமலே நரக இரவு அனுபவித்திருப்பாள்...

படீரென்று கதவு திறந்தது. ஷீலா! ஓயாமல் அழுததில் வீங்கியிருந்த கன்னம். சிவந்திருந்த கண்கள். பாய்ந்து வந்தாள். "ஜீவா!" என்று வெடித்த கேவலுடன்.

"நம் மகனை...."

அழுகையில் குலுங்கிய ஷீலாவை மிக இறுக்கமாக அணைத்துக் கொண்டான்.



தக்க இடைவெளி விட்டு பூவினால் வருடு வது போல் மிக மென்மையாக அவன் காதில் கிசுகிசுத்தான்.

"உஷ்! ஏதும் பேச வேண்டாம்... ஜஸ்ட் ரிலாக்ஸ்.... என் வார்த்தையில் உனக்கு நம்பிக்கை உண்டுதானே.... குப்தாவின் பயமுறுத்தல் இது.... நம் மகனுக்கு எதுவுமே ஆகாதுடா.... எல்லா ஏற்பாடும் செய்து விட்டேன்.... இன்று இரவுக்குள் கௌதமை அழைத்து வந்து விடுவேன்.... உனக்கு என்னைப் பற்றித் தெரியும்தானே... எல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன் ஷீலா..."

**கா**லை 7:00. போன் ஒலித்தது.

"ஜீவாதானே?"

குப்தாவின் குரல்தான்! சட்டென்று ஜீவாவிடம் பாவமற்ற முகம்; உணர்ச்சியற்ற குரல். "சொல் குப்தா!" என்றான்.

"என்னை மன்னித்து விடு ஜீவா! உன் மகனைப் பிடித்து வைத்துக் கொண்டதற்கு கோபப்படாதே!"

"கோபம் இல்லை!"

"இப்போது உனக்கு என்னைப் பற்றி எல்லாம் தெரிந்திருக்கும்.... அந்தப் பாழாய்ப் போன துறையில் உயிரைக் கொடுத்து வேலை செய். திறமை முழுவதையும் காண்பி. என்ன பலன்? அல்ப சொல்பமாக ஓர் இங்க்ரிமெண்ட்டும், ஒரு வெற்றுப் பட்டயமும் தருவார்கள்! ஆனால் இங்கே நாம்தான் ராஜா. பெரும் பணம் பார்க்க லாம். என்னுடன் வந்து சேர்ந்து விடு ஜீவா.



உனக்கு வானமும் வசப்படும். சொர்க்கத்தைக் காண்பிக்கிறேன், வா!"

"..........................................."

"உன் மௌனம் புரிகிறது. எனக்கு வேறு வழியில்லை நண்பா. உன் போன்ற திறமையாளர்கள் எனக்கு மிகத் தேவை. அதனால்தான் அப்படி நெருக்கி விட்டேன். கவலைப்படாதே. உன் மகன் பத்திரமாக! விடியோ கேம்ஸ் பார்த்துக் கொண்டிருக்கிறான்."

"நான் என்ன செய்ய வேண்டும்?"

"சிம்ப்பிள்! இன்று மாலை டாக்டர் ஜலாலை அழைத்து வந்து என்னிடம்



***எமதர்மன்: என்ன இது... நம்ம கிங்கரர்கள் உடல் முழுக்க காயம்பட்டு வராங்க...?***

***சித்ரகுப்தன்: ஆயுள் முடிந்த சிலரை இழுத்துவரப் போன இடத்தில்... குண்டு வெடிப்பில் இவங்களும் சிக்கிக்கிட்டாங் களாம்!***

– பெங்களூர் அ. சங்கரன்

ஒப்படைத்து விட்டு உன் மகனை அழைத்துச் செல்லலாம்!"

இது எப்படிச் சாத்தியமாகும் என்று விழித்தான் ஜீவா.

"நீ என்னுடன் சேர்ந்ததற்கான அச்சாரமாக உன் முதல் முயற்சி இது! நான் எங்கே என்று பிறகு சொல்கிறேன்."

"செய்கிறேன்!" என்றான் அழுத்தமாக.

"ஒரு சந்தேகம்? திருச்சியில் அந்த ஒட்டுத் தாடி என்னிடம் பேசியதை நீ எப்படி அறிந்து கொண்டாய்?"

"அதுவா!" சிரித்தான். "உன் ஆடையில் சிறிய மைக் ஒன்று ஒட்ட வைத்திருந்தேன்! பின் போனில் பேசி ஆளனுப்பித் தீர்த்ததும் நான்தான்!"

போனை வைத்தான். புருவம் முடிச்சிட யோசித்தான். மறுபடி போன் ஒலித்தது. எடுத்தான். ஆத்மாதான்!

"ஜீவா! அந்த ஹோட்டலில் குப்தா இல்லை!"

"பின்?"

"முன்பு எக்மோர் லாட்ஜில் சந்தித்ததாகச் சொன்னாயே...."

"தாஸா?"

"அந்தத் தடியனேதான்! கண்காணிக்கும் சிஐடி போலீஸார் கண்களில் ஓரிருமுறை பட்டிருக்கிறான்! லோகல் போலீஸை அமர்த்தியதும் நல்லதுதான். தாஸைப் பார்த்ததுமே அடையாளம் கண்டுகொண்டனர். ஆந்திரா, தமிழ்நாட்டில் கைவரிசை காண்பிக்கும் பலே கிரிமினலாம்!"

"ஐசி. உங்களுக்கு குப்தா முக்கியம். அதைவிடப் பல மடங்கு எனக்கு என் மகன் முக்கியம். அவனுக்குச் சந்தேகம் வந்து விட்டால்–"

ஆத்மா இடைவெட்டி, "டோன்ட் வொர்ரி! எட்டியே இருக்கிறார்கள். அதுவும் மஃப்டியில்."

குப்தா செய்த போன் பற்றிச் சொன்னான்.

"என்ன ஒரு சிக்கல்! டாக்டரைத் தட்டில் வைத்துக் கொடு என்கிறானே.... அவரை வைத்துக் கொண்டு என்ன விளையாட்டு நினைத்திருக்கிறானோ....? என்ன செய்யப் போகிறாய் ஜீவா?"

"யோசித்துக் கொண்டிருக்கிறேன்! முதலில் அந்த தாஸைச் சந்திக்கப் போகிறேன்!"

"என்ன?" என்று அதிர்ந்தார் ஆத்மா.

ஜீவா மிக்க யோசனையிலிருந்தான். தாஸ் தடியனை எதிர்கொள்ள வேண்டும்.... எப்படி? எப்படி? தாஸ் மிக மிகப் பலசாலி. உடலால் மோதி ஜெயிக்க முடியாது. அவன் நிலையிலிருந்தால் என்ன செய்வோம்? சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தான்.

பரணிலிருந்த அந்த சூட்கேஸை இறக்கினான். தூசு தட்டினான். திறந்தான். அதனுள் பல சைஸ்களில் சர்க்யூட் போர்டுகள், வினோத உபகரணங்கள், சிறு மைக்குகள், பிற எலக்ட்ரானிக்ஸ் பகுதிகள், புல்லட்டுகள், இன்னும்.... இன்னும்.... ஜீவாவின் கண்கள் பற்றிக் கொண்டிருந்தது. கவனமுடன் விளையாடும் விரல்கள். பரவசமுடன் துள்ளும் மனம். எவ்வளவு நாட்களாயிற்று....

கிளம்புகையில் ஷீலா அருகே வந்தாள். அவள் முகத்தில் கவலையின் கீற்றல்கள். புன்முறுவலுடன் அவளை அருகே இழுத்துக் கொண்டான். நம்பிக்கை தரும் குரலில்

சொன்னான்.

"கவலைப்படாதே ஷீலு. மகன் பத்திரமாக இருக்கிறானாம். இன்று இரவுக்குள் வந்து விடுவான்! வரட்டுமா?" ஷீலாவின் கன்னத்தில் தட்டிக்கொடுத்து விட்டுப் புறப்பட்டான.

ஓர் ஆட்டோவில் பயணித்து வால் டாக்ஸ் ரோடிலேயே இறங்கிக் கொண்டான். நடக்கத் துவங்கினான்.

நிறைய சந்துகள். நிறைய லாட்ஜுகள். உலவும் குருட்டுப் பிச்சைக்காரன். லாட்டரி விற்பனையாளன். தள்ளு வண்டியில் புள்ளி வாழை. நடமாடும் இஸ்திரி வண்டி. மாமாக்கள். எவரெவரோ தென்பட்டார்கள். இவர்களில் யார் சிஐடி போலீஸாரோ....

ஏஷியன் லாட்ஜில் ஓர் உத்தி செய்தான். வேண்டுமென்றே 'ஒரிய' மொழியில் விசாரித்தான் ஜீவா! ரிசப்ஷனிஸ்ட் அட்சரம் புரியாமல் விழித்தாள். சமீபத்தில் 'குடி' புகுந்தவர்கள் பட்டியல் வாங்கிப் பார்த்தான். தாஸ் பெயர் இல்லை. உடைந்த ஆங்கிலத்தில் தாஸை விவரித்தான்; தடியன் என்பதை அபிநயித்துக் கேட்டதும் பலன் இருந்தது....

முதலாம் மாடி. மூன்றாம் அறை. கதவில் ஒலித்தான். காத்திருந்தான். வா தாஸ். வந்து திற. என் செல்ல மகனைக் கடத்திய உன்னை என்ன செய்யலாம்? எதுவும்... எதுவும் செய்யலாம்! தோன்றிய இறுக்கத்தை மறைத்துக் கொண்டான்.

கதவைத் திறந்த தாஸ், "நீயா!" என்று வியந்தான். "உன்னை யார் இங்கு வரச் சொன்னது?" என்று உறுமினான்.

"மிக அவசரமான - தலையாய - பிரச்னை ஒன்று தோன்றி விட்டது!"

"உள்ளே வா!" என்றான் வேண்டா வெறுப்பாக. கதவைச் சாத்தினான். தாஸிடம் படு அலட்சியம்; தன் உடல் வலு மேல் அவ்வளவு நம்பிக்கை. ஜீவாவிடம் சோதனையிட்டான். ஜீவா மௌனமாக ஒத்துழைத்தான்.

ஒரு துப்பாக்கி இரு கத்திகள் கிடைத்ததும் தாஸ் முறுவலித்தான். பிறகு விலகி, அந்த ஆயுதங்களை மேசை மேல் பரப்பினான். அவைகளை ஏக்கமுடன் பார்த்தான் ஜீவா.

"இப்போது சொல்! என்ன பிரச்னை?" என்ற தாஸ் முகத்தில் திடும் பிரகாசம்! தன் துப்பாக்கி உருவி குறி பார்த்தான். "ஹேய் ஜீவா! ஃப்ராடு மகனே... எப்படி என் இருப்பிடம் கண்டுபிடித்தாய்....?"

முட்டாள் தடிப் பயல் விழித்துக் கொண்டு விட்டான்! தாக்கத் தருணம் வந்து விட்டது. இடைவெளி ஐந்து அடி.

"பதில் சொல். மூன்று எண்ணி விட்டுச் சுட்டு விடுவேன்!"

உயர்ந்திருந்த ஜீவாவின் வலக் கையின் ஆட்காட்டி விரலில் ஒரு மோதிரம். மோதிரத்தில் கல் இருக்கும் இடத்தில் சிறு ரிமோட் பொத்தான்! அதைக் கட்டை விரலால் அழுத்தியதும் -

மேசை மேலிருந்த ஜீவாவின் ஒரு கத்தியின் பிளாஸ்டிக் கைப்பிடி படீரென்று வெடித்தது! தாஸ் அதிர்ச்சியுடன் திடுக்கிட்டான்! இதற்காகத்தானே ஜீவா காத்திருந்தான்...



"ஐயோ! தலையில் என்ன இவ்வளவு பெரிய கட்டு?"

"டெபாசிட் போயிட்ட ஆத்திரத்தில், 'என் எழவெடுத்த தமிழ் மக்களே'ன்னு பொதுக் கூட்டத்தில் பேச்சைத் துவக்கிட்டேன்!

— உ. ராஜாஜி

இரண்டு அனாயாச அகன்ற ஸ்டெப்களில் இடைவெளி கணிசமாகக் குறைய... உடனே உயர்ந்த வலக் காலால் தட்டி விடப்பட்ட துப்பாக்கியைக் காட்ச் பிடித்தான்! இப்போது தாஸைக் குறிபார்த்த ஜீவா,

"நீ சற்று அசைந்தாலும் சுட்டு விடுவேன்!" என்றான் உறுதியாக. "மாமிச மலை மாதிரி இருக்கிறாய்...! ஒரு சிறு தந்திரம்; பட்டாசுச் சமாச்சாரத்துக்குப் பயந்து விட்டாயே! ஓ.கே. என் மகன் இருக்குமிடம் சொல்..."

"உன் மிரட்டலுக்குப் பணிய வேறு ஆளைப் பார்!"

உண்மைதான்! இந்தத் தடியனை அடித்து உண்மை வரவழைப்பது கடினம்.



**"நீங்க ஊருக்குப் போற ரயிலு 8½ மணிக்குப் புறப்படப் போகுது; இப்பவே மணி எட்டு அஞ்சாச்சே, எப்படி ரயிலைப் பிடிப் பீங்க?"**

**"நான் போற ரெயில்லே வெடிகுண்டு இருக்கிறதா ஸ்டேஷனுக்கு போன் பண்ணிச் சொல்லிடு!"**

**– வீ.எஸ். கணேசன்**

---

முடியாது என்பது வேறு விஷயம். எனவே... எனவே....

தயங்காமல் தாஸின் காலைப் பார்த்துச் சுட்டான்!

ஓவென்ற அலறல். முட்டிச் சில்லு சிதைந்துப் பெருகும் ரத்தம். அந்த மாமலை மனிதன் பயந்து நடுங்குவதை சுவாரசிய முடன் பார்த்தான். இவன் காலை உடைத்தது, ஒரு சமூக சேவை!

"என் மகன் எங்கேடா?" என்று மறுபடி துப்பாக்கி உயர்த்தினான்.

"சொ... சொல்லிடறேன்! நீலாங்கரையில் ஒரு வீட்டில்!" என்றவன் முகவரி சொன் னான்.

"எத்தனை பேர் காவல்?"

"ஒருவன்தான்!"

மீட்பது சுலபம்தான் என்று நிம்மதியான ஜீவா, "குப்தா எங்கே?"

"இப்போதைய அவன் விலாசம் தெரி யாது. போனில்தான் தொடர்பு."

"சரி. திரும்பு தாஸ்!" என்றான். துப் பாக்கியின் பின்புறம் எவ்வளவு உபயோகம்! தாக்குண்ட சில வினாடிகளில் மயக்க மானான் தாஸ்...!

போனில் ஆத்மாவிடம் விவரம் சொன் னான்.

"குட் ஜீவா! அங்கே வேவு பார்க்கும் சிஐடிக்களை உடனே அனுப்புகிறேன். தாஸை அவர்கள் பார்த்துக் கொள்வார்கள்! பிறகு, நம் ஆட்களை மாறுவேடத்தில் கமுக்கமாக அனுப்பி உன் மகனை மீட்கச் செய்கிறேன். உன் மகன் விடுதலை உறுதி யாகி விட்டது! இனி என்ன? டாக்டர் ஜலாலை அழைத்து வரக் கேட்கும் குப்தாவைக் கை கழுவி விட வேண்டியது தான்!" என்றார் விசனமுடன்.

"நோ!" என்றான். ஜீவா அப்படி நினைக்கவில்லை. குப்தா பிடிபடாமல் இந்த 'ஆபரேஷன்' முடியாது. அவன் ஒரு நிரந்தரத் தலைவலி. ஜீவா சொன்னால், ஜலால் உடன் வரச் சம்மதிப்பார். லேசாக ரிஸ்க் இருக்கிறது. ஜலால் என்ற தூண்டில் புழு இல்லாமல் குப்தாவைப் பிடிக்க முடியாது. இன்று விட்டால் என்றும் இல்லை. அவனை எப்படி வெல்லலாம்...?

நேரம் பரபரப்பாக நகர...

மதியம் மூன்று மணியான போது கௌதம் வந்து சேர்ந்தான்! அப்போது ஷீலாவின் முகத்தில் தோன்றிய வர்ணிக்க இயலாத அந்த உணர்ச்சியைக் காண... இறைவனை உணர்ந்தது போன்ற சிலிர்ப்பு ஜீவாவுக்கு!

மகனிடம் மாறாத அதே விளையாட்டு; துள்ளல்; பொங்கும் உற்சாகம். வாட்டம் ஏதுமில்லை. சிறு கீறல் கூட இல்லை.

"நல்ல அங்கிள்! ஐஸ்க்ரீம், சாக்லேட், கேக் நிறையக் கிடைச்சுது டாடி! டீவி, விளையாட்டு... ஒரே ஜாலிதான்!"

"கொஞ்சமாவது பயந்தானா பாருங்கள்! வாரிசு அப்படியே உங்களை உரித்து வைத் திருக்கிறது!" என்றாள் பெருமிதமுடன்.

**மா**லை. போன் வந்தது! உடனே புர பசருடன் புறப்பட உத்தரவிட்டான். குப்தா ஓர் உஷார் பார்ட்டி! தன் இருப்பிட முகவரியைப் பகுதி பகுதியாகத்தான் சொல் வானாம்! அவன் பேச்சிலிருந்து தாஸ் அறைக்குள் மடக்கி முடக்கப்பட்டதும், கௌதம் மீட்கப்பட்டதும் குப்தாவுக்கு இன் னமும் தெரியவில்லை என்பது தெரிந்தது.

காரில் ஜலாலுடன் சென்றான். முதலில் அடையாறில் ஒரு ஹோட்டல். அங்கே குப்தாவின் போன்! சைதாப்பேட்டையில் ஒரு டிரக் ஸ்டோர் வரச் சொன்னான். அந்த ஸ்டோரில் மறுபடி போன். மற்றொரு செய்தி. அடுத்த நிறுத்தம், பரங்கிமலை அரிசி மண்டியாம். இப்படியே பயணித்து....

மாலை மங்கிக் கொண்டு வந்தது. இறுதி நிறுத்தம் வந்தார்கள். மடிப்பாக்கம் – கௌரிவாக்கம் சாலையிலிருந்து மிகவும் விலகியிருந்த ஒரு 'திடீர்' புறநகர்ப் பகுதி அது. அதிலும் தனியான ஒரு வீடு. சுற்றிலும் பொட்டல் வெளி. குப்தா கண்ணில் படா மல் எவருமே நெருங்க முடியாது.

கதவு திறந்த குப்தா முகத்தில் சாடிஸ சிரிப்பு. அவன் வலக் கையில் துப்பாக்கி! "வெல்கம் புரபசர்! வா நண்பனே!" என்

நான் அழுத்தம் திருத்தமாக.

வீட்டுக்குள் வந்தனர். 'கவர்' செய்தவாறே குப்தா அருகே வந்தான். தன் இடக் கையால் ஜீவாவிடம் சோதித்தான்.

சிக்கிய அவன் ஆயுதங்களைத் தொலை வில் வீசிக் கடாசியதும், "புரபசர்! நீங்கள் அந்த சோபாவில் உட்காருங்கள்! ஆல்ரைட், ஜீவா! நீ சாகத் தயாராகு! பெரும் பணம் கொடுத்து, உன்னை என்னுடன் வைத்துக் கொள்ள இருந்தேன்...! ஆனால், உன் வித்தையை என்னிடமே காட்டி விட்டாய்! தாலின் என் எங்கேஜ்டாகவே இருந்தது... ஏதோ பழுது என்றுதான் முதலில் நினைத் தேன். இப்போது புரிந்து விட்டது. அவனை எப்படியோ பிடித்து விட்டாய்..."

"நீ என்ன சொல்கிறாய் குப்தா?"

"நடிக்காதே நரிப் பயலே! உன் மகன் மீட்கப்பட்டதை தொலைவிலிருந்த என் வேறொரு ஆள் பார்த்து விட்டான்! உன்னை விட பெரிய நரி நான்! தெரிந்த தாகவே காண்பித்துக் கொள்ளாமல் உனக்குப் போன் செய்தேன். எனக்கு இந்த பெருமைமிகு டாக்டர் மிகவும் தேவை! ஏனெனில், இந்நேரம் முக்கிய வழிகளை, தடங்களை அடைகாக்க ஆத்மா ஏற்பாடு செய்திருப்பார்! ஜலால்தான் என் பாஸ் போர்ட்! அவரை வைத்துக் கொண்டுதான் தப்பிக்கப் போகிறேன். அது அப்புறம். அதற்கு முன் உனக்கு விடுதலை! இந்த உலகத்திலிருந்தே!" துப்பாக்கி முனை உயர்ந் தது. சற்றே முன் வந்தது. எந்த நொடியிலும் ஜீவாவின் சாவு...

திக்குச்சி கிழித்தாற்போல் ஜீவா சிரித் தான். அது ஒரு சமிக்ஞை! உடன் "ஹாண்ட்ஸ் அப்!" என்று புரபசர் ஜலால் குரல் எழுந்தது!

குப்தா தன்னையுமறியாமல் வியப்புடன் பக்கவாட்டில் பார்த்தான். அங்கே சோபாவிலிருந்த ஜலாலின் கையில் துப்பாக்கி!

குப்தா கவனம் சிதறிய அரிய வினாடி கள்! அவை ஜீவாவைச் சாவிலிருந்து பிரித்து எடுக்கவல்லவை.

ஜீவா மின்னல் வேகத்தில் குப்தா மீது பாய்ந்திருந்தான். அவன் கண்களில் ஒரு விசேஷ ஜொலிப்பு வந்திருந்தது. ஏதோ ஒரு ஆதி கால ஜீனின் மிச்சத்தில் இருந்து எழுந்த முரட்டு வலுவில் கொடுத்த மூன்றே குத்துக்களில் –

குப்தா வீழ்ந்தான்!

"நீ மயக்கமாவதற்கு முன் ஒன்று தெரிந்து கொள் குப்தா! மனித மனம் பற்றி எனக்குக் கொஞ்சம் தெரியும்! சதா, சிக்கலான விஷயங்களையே ஆராயும் 'சிக்கல்' மூளை உனக்கு! அது தான் எளிய விஷயம் எட்டாமல் ஏமாந்தாய்! உன் குறி, கவனம் ஆபத்தான என் மீதுதான்; ஒரு வயதான கம்ப்யூட் டர் மேதைதானே என்று அலட்சிய மாக இருப்பாய் என்று எதிர்பார்த் தேன். திடுமென்று அவர் துப்பாக்கி காண்பித்தால் அதிர்ச்சி அடைவாய் என்றும் கணக்கிட்டேன். கடைசி யில் நீ வீழ்ந்தது ஒரு வெற்று துப் பாக்கியால்!"

சிரித்தவாறு தாக்க, குப்தா மயக்க மானான். பிறகு வெளியே சென்று, ஒரு போன்.

அரைமணியில், ஆத்மாவின் ஆட்கள் வந்து சூழ்ந்து கொண்ட னர்!

ஜீவாவின் இல்லம். அவன் முகத்தில் நிம்மதி. ஷீலா முகத்தில் நிறைவு; மகிழ்ச்சி. கௌதமிடம் விளையாட்டு. போன் ஒலித்தது. எடுத்தான்.

"நான்தான்!" என்றார் ஆத்மா. "திரும்ப வருகிறாயா ஜீவா? ரெகுலர் ஏஜெண்ட் போல இல்லை! வேலை வேறொரு 'ரகசிய' ரூபத்தில்! உனக் காகவே! ஸ்பெஷலாகவே! என்ன சொல்கிறாய்?"

"நாளை சொல்கிறேன்!" என்று வைத்து விட்டான். நாளை என் பதற்கு 24 மணி நேரம் இருக்கிறது. நாளை பற்றி இன்று தெரியாது. நாளை எதுவும் நடக்கலாம். யார் கண்டது? சூரியன் கூட மேற்கில் உதிக்கலாம்! ஆனால், இன்று நிஜம். குடும்பம் சூழ்ந்த இந்தக் கணம் இனிமை. ஜீவா வாய் திறந்த போது, ஷீலா இடைமறித்தாள்.

"போனில் யார்?"

"போனை மற!"

"சரி. ஏதோ சொல்ல வந்தீர் களே..."

"ஆம்!" என்று ஷீலாவை இன்ப முடன் அணைத்துக் கொண்டான். "சொல்லட்டுமா ஷீலா டியர்?"

"ம்!" என்றாள் பரவசமாக.

"இன்று வாழலாம் வா!" ●

(முற்றும்)

● மாம்பழத்திலிருந்து மட்டுமல்ல; மாங்காயிலிருந்து கூட 'ஜூஸ்' தயாரிக்கலாம். பிரஷ் ஜூஸ்களில் நன்றாக வேகவைத்தபின்பு தேவையான அயிட்டங்களை சேர்த்து மற்ற பழங்களை 'ஜூஸ்' செய்வதைப் போல செய்யலாம். அது மாம்பழத்தில் ஜூஸ் செய்ததைப் போன்றே இருக்கும். – சோ. இராஜேந்திரன்

மகாராஷ்டிரம் மற்றும் கோவா பிராந்தியத்தின் போஸ்ட் மாஸ்டர் ஜெனரல் பதவி வகிக்கும் முதல் பெண்மணி, அபர்ணா மொஹிலே. அண்மையில் "மாமியார்" பிரமோஷனைப் பெற்றிருக்கும் இவர், இதற்கு முன் சென்ஸார் போர்டு தலைமைப் பதவியிலும் இருந்ததால், தமிழ்க்கலை உலகத்தோடும் ஓரளவு பரிச்சயம் இருக்கிறது. அவருடன் நாம் உரையாடிய போது...

"புதிய பதவியில் 'செட்டில்' ஆகிவிட்டீர்களா?"

"லேட்டஸ்ட் பதவி (மாமியார்) சரியாகப் பரிச்சயமாகவில்லை; கல்யாணமான கையோடு பிள்ளையும் மருமகளும் ஹனிமூன் கிளம்பி விட்டார்களே! அலுவலகப் பதவியில் ஓரளவு 'செட்டி'லாகி விட்டேன்."

"இந்த நாற்காலியை ஒரு பெண்மணியான நீங்கள் அலங்கரித்த பின்னும், போஸ்ட் 'மாஸ்டர்' ஜெனரல் என்றே அழைக்கப்படுவது விநோதமாயில்லை?"

"அட ஆமாம்! சேர்மன் கூட சேர்பர்ஸனாகிவிட்டதே. இதற்கும் விரைவில் ஓர் உபாயம் கண்டு பிடித்தாக வேண்டும்!"

# "கடிதங்களுக்கும் உயிர் உண்டு!"

## — போஸ்ட் மாஸ்டர் ஜெனரல்

"இந்தப் பதவியில் நீங்கள் சந்தித்த சவால்கள், உங்கள் சாதனைகள் என்று எதைக் குறிப்பிட்டுச் சொல்வீர்கள்?"

"Hybrid Mail! இதன் வழி, இங்கிருக்கும் ஒருவர், ஃபோன் வசதியே இல்லாத மற்றவருக்கு, 'ஸாடிலைட்' மூலமாகச் செய்தி அனுப்ப முடியும். அதை, மறுமுனையிலுள்ள போஸ்ட் ஆபீஸ், தங்கள் போஸ்ட்மேன் மூலம், குறிப்பிட்ட நபருக்கு உடனடியாகத் தெரியப்படுத்தும். தந்தியைவிட இது வசதியானது; துரிதமானது. இதைப் பிரபலப்படுத்த முயல்கிறோம். 'Mail Monitoring Service' ஒன்றையும் துவக்கியுள்ளோம். அந்தந்த ஏரியாவுக்குரிய ஏதாவது பத்து கடிதங்களைப் பற்றி, போஸ்ட்மேன்கள் அறியாமல், குறிப்பெடுத்து வைத்துக் கொள்வோம். பிறகு அவை எப்போது 'டெலிவர்' ஆகின்றன என்பதை விசாரிப்போம்; இது 'தபால்காரர்'களுக்கு ஒரு மறைமுக 'செக்!' போஸ்ட் ஆபீசுகளுக்கும் அதிகாரிகள் அடிக்கடி திடீர் விசிட் செய்து கண்காணிக்க வேண்டும் என்பதில் கண்டிப்பாயிருக்கிறேன். அலுவலகங்களில், ரம்மியமான வேலைச் சூழலும் கம்ப்யூட்டர் போன்ற நவீன வசதிகளும் இருக்க வேண்டுமென்பதும் என் எண்ணம். சுமுகமான உறவுகளில் நான் அதிக கவனம் செலுத்துகிறேன்."

"அப்படியும் ஏன் அடிக்கடி போஸ்டல் ஸ்டிரைக் வருகிறது? அதிகப்படி அலவன்ஸ் கேட்டு வேலை நிறுத்தம் நிகழ்கிறது?"

"இன்று விலைவாசி ஏறிக் கிடக்கையில் எவ்வளவு கொடுத்தாலும் போத மாட்டேனென்கிறது; எவ்வளவு கொடுத்தாலும், அதிருப்தியாளர்கள் எல்லா இடங்களிலும் ஊடுருவி இருப்பார்கள். அதனால்தான் அங்குமிங்குமாகச் சில பிரச்னைகள் தலைதூக்குகின்றன."

"வாஷி, மீரா ரோட் போன்ற பகுதிகளில், டெலிவரி செய்யப்படாத கடிதங்கள் மலை போல் குவிந்திருக்கின்றனவாமே?"

"இப்போது நிலைமை சீர் செய்யப்பட்டு வருகிறது. இதற்குக் காரணம், திட்டமிடாத விஸ்தரிப்புகள்தான். இந்தப் புதிய பகுதிகளில், பில்டர்கள் தங்களிஷ்டத்துக்குக் கண்ட இடங்களிலெல்லாம் கட்டடங்களைக் கட்டி விடுகின்றனர். நகரமைப்புத் திட்டத்தின்படி நிர்மாணிக்கப்பட்டிருந்தால், போதுமான தபால் ஆபீசுகளும், தபால் துறை ஊழியர்களும் ஒதுக்கப்பட்டிருப்பார்கள். இப்போதோ, ஒழுங்கற்ற விஸ்தரிப்பால், தபால் இலாகாவின் வேலைப் பளு பன்

மடங்காகி, இந்த இடங்களில் போஸ்டிங்கே ஒரு தண்டனை என தபால்காரர்கள் நினைக்குமளவுக்கு மோசமாகிவிட்டது."

"தபால்கள் வந்து சேர்வதற்குக் குறைந்த பட்சம் பதினைந்து நாட்களாவதால், டோம்பிவிலியில் எல்லோரும் தங்கள் வீட்டு அட்ரசைக் கொடுக்காமல் ஆபீஸ் அட்ரசையே உபயோகிக்கிறார்களாமே?"



"அப்படியா? பல ரிடையர்டு போஸ்டல்காரர்கள் டோம்பிவிலியில்தான் வசிக்கிறார்கள்; அவர்கள் கூட ஒன்றும் சொன்னதில்லையே! இருந்தாலும், நீங்கள் சொல்வதால், நானே ஒரு தபாலை அங்கே அனுப்பி சோதித்துப் பார்க்கிறேன்."

"மெயின் போஸ்ட் ஆபீசுகளில் கூட,

## அபர்ணா மொஹிலே பேட்டி

ஸ்டாம்புகள், போஸ்டல் ஆர்டர்கள் அக்னாலட்ஜ்மெண்ட் கார்டுகள் கிடைக்கவில்லை என்கிறார்களே?"

"இது தாற்காலிகமானதுதான். கார்டு, கவர்களெல்லாம் விலை ஏறிவிட்டனவா? புதியவை வர சில காலம் பிடிக்கும்; நாஸிக் பிரிண்டிங் பிரெஸ்ஸில் ஏதாவது பாதிப்பென்றால், இங்கே ரெவின்யு ஸ்டாம்புகள் போன்றவை கிடைக்க தாமதமாகும்."

"வேலை நேரத்தில் சிலர் குடித்துவிட்டு வருகிறார்களாமே? ஜோகேஷ்வரியில் இந்த தகராறு ஊதிவிடப்படுகிறதே?"

"நான் லீவில் இருந்தபோது எழுந்த பிரச்னை இது. சம்பந்தப்பட்ட அதிகாரி அதை விசாரித்து வருகிறார். தபால்காரர்களைத் தங்கள் குடும்பத்தில் ஒருவராய் இன்றளவும் பலர் நினைப்பது, அவர்கள் நன்னடத்தையால்தான்; புனா போன்ற பெரிய நகரங்களிலும் தீபாவளி, சங்கராந்தி போன்ற சமயங்களில் தபால்காரர்களை வீட்டுக்குள் அழைத்து இனிப்பெல்லாம் வழங்குவர். நல்லவர் நூறு பேர் இருந்தால், அல்லாதவர் யாராவது ஒருவர் கெட்ட பேர் வாங்கித் தந்து விடுகிறார்கள்."

"மெட்ரோ'க்களுக்கென பிரத்யேகமாக வைக்கப்பட்டிருக்கும் நீலநிறப் பெட்டிகளில் போடப்படும் தபால்களை இரண்டே நாட்களில் 'டெலிவரி' செய்வதாகச் சொன்னீர்கள். ஆனால் மும்பையில் எல்லா தபால்களும் ஒன்றாகத்தான் கலக்கப்படுகிறதாமே?"

"இல்லை; எல்லாவற்றுக்கும் தனிப் பைகள் உண்டு. காட்டாங்குளத்தூர் கடிதத்தை நீல நிறப் பெட்டிக்குள் போடும் பாமரர் பலர் நம்முன் உண்டு. இது போன்ற சந்தர்ப்பங்களில் ஏதாவது நிகழ்ந்திருக்கலாம்."

"1993 -ல் நடந்த "The Post - The Best Choice" போட்டி முடிவு அறிவிக்கப்படவேயில்லை என்று எங்கள் பத்திரிகையில் கோபாலகிருஷ்ணன் குமுறியிருக்கிறாரே?"

(உடனே உதவியாளரை ஃபோனில் அழைத்து, விசாரித்துவிட்டு) முடிவுகள் அறிவிக்கப்பட்டு விட்டனவாம். அதன் பின்னரும் போட்டிக்கான அறிவிப்புகள் வந்து விட்டனவாம். உலகெங்கிலுமிருந்து பலர் கலந்து கொள்வதால், வெற்றி பெற்றவர்களுக்கு மட்டும் தனிப்பட்ட முறையில் செய்தி தெரிவிக்கப்படுமாம்."

"எல்லோரும் அறியும் வண்ணம் அறிவிப்பதுதானே நியாயம்?"

"உண்மைதான்; இது பற்றி மேல் மட்டத்துக்குத் தெரிவிக்கிறேன்."

"நினைவில் நிற்கும் வண்ணம், உங்கள் பணிக்காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் ஏதேனும்...?"

"அகமதாபாத்தில் அப்போது பயங்கரக் கலவரம்; முழு "பந்த்"! நான் தைரியமாக, தபால் இலாகா ஊழியர்களை எல்லாம் வேலைக்கழைத்து சகஜ நிலையை நிலை



"டார்லிங்! என் மேல நீங்க உயிரையே வெச்சிருக்கீங்களே, என்ன காரணம்?"

"வேறென்ன.. என் நடிப்புத் திறமைதான்!"

— எஸ்.எஸ். பூங்கதிர்

நாட்ட முற்பட்டேன். ஒரு பெண்ணின் வீரத்தைக் கண்டு, மற்றவர்களெல்லாம் 'நாங்கள் வளையலா போட்டுக் கொண்டிருக்கிறோம்?' எனக் கேட்டவாறே வேலைக்கு வந்து விட்டனர். இதுவே நான் ஆணாக இருந்திருந்தால் இதைச் சாதித்திருக்க முடியுமா என்பது சந்தேகம்தான். பிரிதொருமுறை டில்லியில் கோரமான விமான விபத்து. வழி நெடுகிலும் அவலம்; மோசமான பாதை; மழைத் தூறல் வேறு! நானும், நண்பர் ஒருவரும் தபால்களைத் (air-mail) தேடி அலைந்தோம். அப்போது ஒருவர் கோபமாக 'இங்கே மனிதர்கள் செத்து மடிகிறார்கள்; உங்களுக்கு அந்தக் காகிதங்களைப் பற்றித்தான் கவலையா?' எனக் கத்தினார். நண்பர் நிதானமாக 'இந்த உடல்களில் உயிர் இல்லை; ஆனால் இந்தக் கடிதங்களில் இன்னும் உயிர் இருக்கிறது; அவை தகுந்த நேரத்தில் பட்டுவாடா செய்யப்படாதிருந்தால் அவையும் இறந்து விடுமே (dead letter)? அவற்றைக் காப்பது எங்கள் கடமை அல்லவா!' என்றாரே பார்க்கலாம்! நான் அசந்து விட்டேன். கடிதங்களுக்கு உயிர் உண்டு, காலவரை உண்டு என்ற உண்மை என்னை உறையச் செய்தது!"

*"சென்ஸார் போர்டில் இருந்திருக்கிறீர்களே! அங்கே நிகழ்ந்த சுவையான சம்பவம் ஏதாவது."*

"'ஏக் பார் ஃபிர்' என்றொரு படம்; ஒரு பெண்ணுக்கு நல்ல வசதியான கணவன்; ஆனால் இருவர் 'அலைவரிசை'யும் ஒத்துப் போவதில்லை; அதனால், கருத்தொருமித்த வேறொரு காதலனைத் தேடி, அவனோடு மணமுடிக்கிறாள் இப்பெண்; பெண்கள் அனைவருக்கும் இந்த தீம் 'ஓகே'யாக இருந்தது; ஆனால் ஆண்கள் அனைவருக்கும் இது மிக 'ஆபாச'மாகத் தெரிந்தது!"

*"குடும்பம், 'கேரியர்', இரண்டையும் எப்படி சமாளிக்கிறீர்கள்?"*

"என் மாமியாரும் கணவரும் கொடுத்த ஊக்கம்தான்! ஒரு கால கட்டத்தில், 'நான் வேலைக்குப் போவதால் என் குழந்தைகள் பாதிக்கப்படுவார்களா? நான் 'ரிஸைன்' பண்ணிவிடவா?' என்று ஒரு சைல்ட் ஸைக்கியாட்ரிஸ்டிடம் கேட்டேன். அவர், 'வீட்டில் இருந்து கொண்டு, மாமியார், அக்கம் பக்கத்தார் என்று வம்பு வளர்த்துக் கொண்டும், கிட்டி பார்ட்டிகள் என்று ஊர் சுற்றிக் கொண்டும் இருக்கும் தாய்மார்களைக் காட்டிலும் நீங்கள் செய்வது எவ்வளவோ மேல்! தன் தாய் ஓர் உயர்ந்த பதவியை வகிக்கிறாள் எனும் போது, இப்போதில்லாவிட்டாலும், வளர்ந்தபின் நிச்சயம் குழந்தைகள் பெருமைப் படுவார்கள்' என்றார். அது உண்மைதான்! வீட்டில் இருந்தால் சின்னச் சின்ன விஷயங்கள் கூட எரிச்சலை வரவழைக்கின்றன. இங்கே வந்தால் எல்லாம் மறந்து, புது உற்சாகம் பிறக்கிறது! என் கணவர் கஸ்டம்ஸ் அதிகாரியாக டில்லியில் இருக்கிறார். நான் இங்கே! எங்கள் இலாகா (தபால்) தான் நேசப் பாலம் வளர்க்கிறது!"

பேட்டி : **ஜெயஸ்ரீராஜ்**



"இருபது சதம் தள்ளுபடி'ன்னு போட்டிருக்கு. ஆனா நீங்க தள்ளுபடியே செய்யலையே?"

"துணியை டெய்லர்கிட்ட கொடுத்து அளந்து பாருங்க, அப்புறம் தெரியும்!"

— பா. பர்வதா

# பிதர்களுக்கு சிராத்தம் ஏன்? அவசியம் செய்ய வேண்டும்



சிராத்தம் போன்ற சடங்குகள் உண்மையில் பிராண ஜீவனுக்காகவே செய்யப்படுகின்றன. ஜீவனுடைய பிராண அதிர்வுகள் அதைப் பிராண லோகங்களுடன் அல்லது பூலோகத்துடன் தளைப்படுத்துகின்றன. அந்த அதிர்வுகளை நீக்குவதற்கு இந்த சடங்குகள் ஜீவனுக்கு உதவுகின்றன. இதனால் ஜீவன் சைத்திய சாந்தத்தில் ஓய்வெடுக்க விரைவாகச் செல்வது இயலும்.

—ஆதாரம் வைகறை 1991-92



இத்துடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்.

# ஐமுவின் ஒற்றுமை நிலைக்குமா? நீடிக்குமா?

● கோபி. நாகராஜன், கலிங்கியம்.

*? 'ஆயிரம் கோடிக்குத் தேர்தல் செலவு ஏற்பட கருணாநிதிதான் காரணம்' என்று கூறி வோட்டுக் கேட்ட ஜெயலலிதா, தி.மு.க அரசைக் கலைக்க வேண்டும் எனக் கூறி மீண்டும் ஒரு தேர்தல் செலவுக்கு வித்திடுவதேன்?*

! அதானே! கொஞ்சம் போனால் "இன்னொரு தேர்தல் செலவு எதற்கு...? மத்திய ஆட்சியே என்னால்தான் நிறுவப்பட்டது; அதனால் மாநில அதிகாரமும் என்னிடம்தான் வர வேண்டும். தேர்தலே தேவையில்லை" என்று கூட அவர் பேசலாம்.

● ராஜ சிம்மன், சென்னை-43, ❐

*? சென்ற வார தலையங்கத்தில் பா.ஜ.க அணுகுண்டு தயாரிப்பைக் கைவிட வேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறீர்களே... பயங்கரவாத நாடான பாகிஸ்தானைப் பக்கத்திலேயே வைத்துக் கொண்டு, பாதுகாப்பைப் பற்றி கவலைப் படாமல், 'புத்தம் சரணம் கச்சாமி' என்று இருக்கச் சொல்கிறீர்களா?*

! அணுகுண்டு தயாரிப்பினால் பயங்கரவாதத்தை வென்று விட முடியும் என்று நீங்கள் நினைத்தால், உங்களுக்காகப் பரிதாபப் பட வேண்டியதுதான். அணுகுண்டு தயாரிக்கப் பட்ட நாள் முதல் இன்று வரை அது பிரபஞ்சத்தில் எங்குமே வெற்றி பெற்றதில்லை. மிரட்டலுக்குக் கூட உதவவில்லை என்பதே உண்மை. ஆனால் அதைத் தயாரிப்போருக்கு நிறைய அபவாதத்தைத் தேடித் தந்திருக்கிறது.

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

*? தூர்தர்ஷன், சன் டீ.வி, விஜய் டீ.வி, ராஜ் டீ.வி... செய்திகள் வழங்குவதில் எந்த டீ.விக்கு முதலிடம் தரலாம்...?*

! தூர்தர்ஷன் - ரேடியோ நியூஸில் கலர்ப் பொடி - 40%; சன் டீ.வி. - உதய சூரிய உக்கிரம் அதிகம் என்பதால் எழுபது சதவிகிதம் கொடுத்தாலும் 20% மைனஸ் பண்ண வேண்டியிருக்கு; ராஜ் டீ.வியும் விஜய்யும்... ஜஸ்ட் பாஸ்; The first mark goes to Star News!

● ஜோ. பன்னீர்செல்வம், சென்னை-84

*? பன்னாட்டு வர்த்தக நிறுவனங்களுக்கு நிபந்தனைகள் விதிக்க வேண்டும் என்று கூறியுள்ளாரே ஜார்ஜ் பெர்னான்டஸ்?*

! சொல்லிட்டுப் போகட்டுமே! அதையும் தேசிய ஆட்சித் திட்டத்தில் சேர்த்து விட்டால் போச்சு! அப்புறம் வசதியா மறந்துடலாம்.

● சத. ராஜா, சிதம்பரம்.

*? கலைஞரைவிட ஜெயலலிதா அரசியலில் தமது மூளையைத் திறமையுடன் பயன்படுத்துகிறார் என்பதை ஏற்றுக் கொள்வீர்களா?*

! ஆமாம்; எல்லா தவறான விஷயங்களுக்கும் பயன்படுத்துகிறார்!

● வசந்தாகாந்த், கருப்பம்புலம்.

*? தேர்தல் தோல்வி பாடமாக அமைந்தது காங்கிரசுக்கா? ஐக்கிய முன்னணிக்கா?*

! தோற்றவர்களுக்குத்தான் பாடமா என்ன? வெற்றி பெற்ற பி.ஜே.பி.க்கும்கூட மகத்தான பாடம்தான்.

● என். பாலகிருஷ்ணன், மதுரை-1

*? பொதுவாக டாக்டர்களின் கையெழுத்து மோசமாக இருக்கிறதே...?*

! 'அதனாலென்ன? தலையெழுத்து பிரமாதமாக இருக்கிறதே போதாதா!

● பா. ரவிச்சந்திரன், அசூர்.

*? ரஜினி இனி என்ன செய்ய வேண்டும்?*

! ஓர் இமாலய வெற்றிப் படம்!



• ஏமாற்ற எதிர்பார்ப்பு!



• செலவுக்கு வழி!



• மின்னல் பிரவேசம்

● கே. அனிதா, கோவை - 42.

*? ஐ.மு. வின் ஒற்றுமை நிலைக்குமா? நீடிக்குமா?*

! அது பாபுவை எப்படி சமாளிக்கிறார்கள் என்பதைப் பொறுத்த விஷயம். பாபுவைத் தக்க வைத்துக் கொண்டால் ஐ.மு. நிலைக்கும். பாபு பிய்த்துக் கொண்டு போனால் மற்றவர்களுக்கும் அப்படி ஒரு ஆசை வந்து விடும்.

● கே.ஆர். உதயகுமார், சென்னை-1.

*? வரவிருக்கும் தமிழக பட்ஜெட் எப்படி இருக்கும்?*

! தேர்தல் தோல்வி தந்த பயத்தில், மக்களின் அத்தியாவசிய உபயோகப் பொருட்களின் விலை கூடாது. ஆனால், மறைமுக வரிகள் கண்ணுக்குத் தெரியாமல் கழுத்தைப் பிடிக்கலாம்.

● பி. அனிதா பிரியன், பேளுக்குறிச்சி.

*? இனி குடை இல்லை; பம்பரம்தான் கட்சி சின்னம் என்கிறாரே வைகோ?*

! சாட்டை யார் கையில் என்பது எல்லோருக்கும் தெரிந்ததுதானே.

● எல். கோபாலகிருஷ்ணன், வேலூர்-6.

*? ஆங்கிலம், ஹிந்தி இரண்டு மொழிகளுமே தெரியாதவர்கள் சிலர் நாடாளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்களே... இவர்கள் அங்கே போய் என்ன செய்வார்கள்?*

! எல்லாம் தெரிந்தவர்கள் மட்டும் என்ன செய்து கிழிக்கிறார்கள்?

● வெ. சந்திரா, விழுப்புரம்-2.

*? ஜால்ரா ஓர் முக்கியமான இசைக் கருவி. அப்படியிருக்க, 'ஜால்ரா' என்ற சொல்லைச் சிலர் நக்கலாகப் பயன்படுத்துகிறார்களே? கேவலமில்லையா?*

! 'ஐஸ் வைத்தல்', 'வெண்ணெய் அடித்தல்' - இவற்றால் இந்தப் பொருள்களின் மகிமை குறைந்து விட்டதா என்ன!

● எம். பிச்சைக்கனி, திருமால்பூர்.

*? இன்றைய தமிழக அரசியலில் கதாநாயகன் யார்? காமெடியன் யார்...? வில்லன் யார்...?*

! இங்கு அரங்கேறுவது 'வில்லன் ஹீரோ' சப்ஜெக்ட்... ஸாரி! 'வில்லி ஹீரோயின்' சப்ஜெக்ட்!

● எஸ். ராமசுப்பிரமணியன், தூத்துக்குடி-1.

*? புதுப்புது இசையமைப்பாளர்கள், புதுப் புது இயக்குனர்கள்... ஜொலிப்பது யார்?*

! எந்தத் துறையிலும் திறமையும் தனித் தன்மையும் உள்ளவர்கள் ஜொலிப்பார்கள். சமீபத்தில் சினிமாவுக்கு வந்திருக்கும் நித்யஸ்ரீயின் குரல் இதற்குச் சிறந்த உதாரணம். 'ஜீன்ஸ்' படத்தில் அவர் பாடியிருப்பதைக் கேட்டீர்களா...? தாராளமாய்ச் சொக்குப் பொடி சேர்த்த



• திட்டமிட்ட ஜோசியம்...



• எதிர்காலத் திட்டம்...



• வசதியாய் மறக்க....



• சமாளிக்க முடியுமா?

கோடைக்கால மின்னல்!

● சி.தெ. ரஜினி அருள், மணக்காடு.

*? ஓர் அரசியல்வாதி சிந்திப்பதற்கும் யோசிப்பதற்கும் என்ன வேறுபாடு?*

! யோசிக்காமல் தவறு செய்வார்கள்; பிறகு சிந்தித்துத் தப்பிக்கப் பார்ப்பார்கள்.

● ஏரலான், சென்னை-4.

*? அரசியலே வேண்டாம் என்று கூறிய கமல் ஹாசன் கருப்புச்சட்டை அணிந்து தி.க.வில் போய்ச் சேர்ந்தது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?*

! நானும் பார்த்தாயிற்று, சினிமா நடிகர்கள் எல்லாருமே ஓர் உச்சிக்குப் போன பிறகு ஏற்படக் கூடிய சரிவைத் தாங்க முடியாதவர்களாக இருக்கிறார்கள். அப்போது அவர்களுக்கு ஒரு பற்றுக்கோல் வேண்டியிருக்கிறது. கமலைப் பொறுத்த மட்டில் இந்த ஊன்றுகோல் தி.க என்று தீர்மானித்திருந்தால் நாம் ஆட்சேபிக்க முடியாது; ஆனால் சீக்கிரமே ஏமாற்றம் அவரைக் கவ்வும் என்று எதிர்பார்க்கலாம்.

● அ. ராஜாரஹ்மான், கம்பம்.

*? இன்னும் ஆறு மாதங்களில் தமிழக சட்டசபைக்குத் தேர்தல் வந்து விடும் என்று ராமதாஸ் கூறியிருப்பது பற்றி...?*

! அ.தி.மு.க. கூட்டணி அதற்கு சதித் திட்டத்தை வகுத்துச் செயல்படுகிறது போலும்.

**☐ ரூ. 50 பரிசு பெறுபவர்:**
**ராஜசிம்மன்,**
**பல்லாவரம், சென்னை-43**
**(முழு விலாசம் அனுப்பவும்)**

# ரோமில் ரோமனாக இரு!

என் மனைவி ஓர் அசாதாரணமான பெண். திருமணமாகி 48 ஆண்டுகள்; அதற்கு முன்பே அவளை எனக்குத் தெரியும். மேல் படிப்புக்காக என் மாமா என்னை அழைத்துச் சென்றார்கள். அவர்கள் வீட்டில் எனக்கான பெண் இருப்பது எனக்குத் தெரியும். ஆனால் எனக்கு அந்த எண்ணம் லவலேசமும் இல்லை; மேற்படிப்பு படிக்க வேண்டும் என்ற எண்ணம் தான் என்னை உந்திக் கொண்டிருந்தது. என் மாமா பெண் சீதா அப்போது விளையாடுகின்ற சிறு பெண்.

பின்னால் என் தாய் சொல்லக் கேட்டிருக்கிறேன். என் மாமா திருமணம் செய்து கொண்டு பெண்களைப் பெற்றபோதே, "என் மாமா மகனுக்குத்தான் என் பெண்ணைக் கொடுக்கப் போகிறேன்'' என்று சொல்வார்களாம்.

''இது என்னை கட்டுப்படுத்துமா?'' என்று என் தாயை நன்கு கேட்டுவிட்டுத்தான் நான் அங்கே போனேன். ஆனால் போன இரண்டாண்டுகளில் எல்லாமே தலைகீழாக மாறிவிட்டது!

சீதா என்ற என் மாமா மகள் அழகு தேவதையாக வளர்ந்திருந்தாள்! பெரிய குடும்பம். அவளுக்கு முன் மூன்று மூத்த சகோதரர்கள். அவளுக்குப் பின் மூன்று இளைய சகோதரிகள். வீட்டுக்கு மூத்த பெண் அவள். எல்லா வீட்டு வேலைகளையும் நிர்வகிக்கும் பொறுப்பு அவளுடையது. ஆகவே ஆறாவது வகுப்புடன் நிறுத்தி விட்டாள். என் மாமாவும், மாமியும் சொந்த ஊரான வைத்தீஸ்வரன் கோயிலில் புதிய வீடு கட்டிக் கொண்டிருந்ததால் வீட்டில் எல்லாவற்றையும் இவள் பொறுப்பில் விட்டு விட்டு அடிக்கடி போய் விடுவார்கள். கல்லூரிக்குச் செல்லும் எங்களுக்கு உணவு பரிமாறுவது இவள்தான்.

"இன்னொரு இட்லி போட்டுக் கொள்ளுங்கள்" என்பாள்.

"நான் வேண்டாம், வேண்டாம்" என்று கைகளால் மறைப்பேன். இதுதான் நாங்கள் பேசிக் கொள்ளும் பாஷை. தேவை இருக்கும் போது, அது சம்பந்தமாக அவளுடன் பேசுவேன். அதற்கு மட்டும் பதில் சொல்லிவிட்டு, அவள் ஓடி விடுவாள்.

இப்படி நடந்து கொண்டிருந்தபோதே நான் என் தாயிடம் போய், "நான் அவளைத் திருமணம் செய்து கொள்கிறேன்" என்று சொல்லி விட்டேன். "முன்பு பிடிக்கவில்லை என்று சொன்னாயே?" என்று கேட்டு விட்டுச் சிரித்தார்கள்.

''இப்படி வயது வந்த பெண்ணைத் தனியாக விட்டு விட்டுப் போகிறோமே?" என்று என் மாமி, மாமாவிடம் கேட்டிருக்கிறார்கள்.

"என் மாமா மகன் நல்ல பையன்" என்று என் மாமா சொல்லி இருக்கிறார்கள்.

எனவே என் மனைவியுடன் நான் வாழ்ந்த 48 வருடங்களும் அதற்கு முன் அவளைத் தெரிந்து கொண்ட இரண்டாண்டுகளையும் சேர்த்தால் கடந்த 97 மே மாதம் பொன் விழா கொண்டாடினோம் என்றே






சொல்ல வேண்டும். அதற்குச் சில ஆண்டுகள் முன்பு எங்கள் அறுபதாண்டு மணி விழாவை ஹூஸ்டன் மீனாட்சி அம்மன் கோவிலிலும், இந்தியாவிலும் இருமுறை கொண்டாடினோம்.

குடந்தையில் ஐந்தாண்டுகள், கிண்டி பொறியியல் கல்லூரியில் நான்காண்டுகள் என்று நான் வேலை பார்த்தேன். அப்போது நான் வேதியியலில் இரண்டு முதுகலைப் பட்டங்கள் பெற்றிருந்தேன். உயர் அதிகாரிகளுக்கு கொடுக்கப்படும் தனி வீடு எனக்குக் கொடுத்திருந்தார்கள். நான் மேல் படிப்புக்கு புல்பிரைட் அறிஞர் (Fulbright Scholar) என்ற திட்டத்தின் கீழ் அமெரிக்க அரசால் தேர்ந்தெடுக்கப்பட்டேன். இரண்டு பையன்களையும், ஓர் ஒன்றரை வயதுப் பெண் குழந்தையையும் என் மனைவியின் பொறுப்பில் விட்டு விட்டு நான் கிளம்பினேன். ஓராண்டில் என் அண்ணன் மகனைப் பொறியியல் கல்லூரியில் எங்கள் பொறுப்பில் சேர்த்ததனால், அவனையும் கவனித்துப் படிக்க வைக்கும் பொறுப்பு அவளுக்குச் சேர்ந்தது.

இரண்டாண்டுகளில் படிப்பு - பரீட்சை என்று எல்லாவற்றிற்கும் முற்றுப்புள்ளி வைத்து ஆராய்ச்சியைத் துவங்கிய போது, எனக்கு ஓர் எண்ணம். "இன்னும் இரண்டாண்டுகளில் டாக்டர் பட்டம் எடுத்து ஊர் திரும்புவோம். அப்போது நாம் அமெரிக்காவைப் பற்றிச் சொன்னால் நம் மனைவிக்கு எதுவும் புரியாதே. எனவே அவளை இங்கு இரண்டாண்டுகள் அழைத்து வந்தால் அவளுக்கு நல்ல அனுபவமாயிருக்குமே" என்ற எண்ணம்.

அமெரிக்காவில் குளிர் நாற்பது டிகிரி வரை கீழே போகும், என்று பலரும் சொன்ன போது எனக்கு அதிசயமாக இருக்கும். எப்படி மனிதன் அவ்வளவு குளிரில் - ஐஸ் பெட்டிக்குள் இருப்பதைப் போல இருந்து - வாழ முடியும்?" என்பது போன்ற சந்தேகங்கள். சின்ன வயதில் கடல் எப்படி ஒரு கரை - திருக்குளப்படிகள் போன்ற படிக்கட்டுக்கள் - இல்லாமல், தண்ணீர் நிற்கிறது என்று தோன்றுமே, அதுபோன்ற சந்தேகங்கள்!

அது மட்டுமின்றி திரும்பி வந்து நான் அமெரிக்காவைப் பற்றிச் சொன்னால், என் மனைவி எதுவும் புரிந்து கொள்ள முடியாது! ஆதலால் "போதும் அமெரிக்கா! சாப்பிட வாருங்கள்!" என்பாள். பல சமயம் நான் எழுதிய கதைகளை எழுதி முடித்ததும் நான் அவளிடம் படித்துக் காட்ட ஆர்வமாகச் செல்வேன். அவள், "எனக்கு வேலை கிடக்கிறது! தோசைக்கு அரைக்க வேண்டும். வீடு கூட்டப்படாமல் இருக்கிறது!" என்பது போன்ற பொன் மொழிகளை உதிர்ப்பாள். எனவே அவள் அமெரிக்காவைப் புரிந்து கொள்ளாவிட்டால்... நிலைமை எப்படி இருக்கும் என்று சிந்தனை ஓடியது.

ஆனாலும் இதைவிட பெரிய விஷயமாக - தியாகமாக - எனக்குப்பட்டது, அவள் அங்கே இருந்து கொண்டு ஒரு பெரிய குடும்பத்தை நிர்வகித்த பொறுப்புதான். குழந்தை வளர்ந்திருப்பாள் என்று எண்ணம் ஓடும்; பையன் படிக்கிறானா? என்று கேள்வி ஓடும். அவளுக்கு நான் எதுவும் செய்து விடவில்லை. நான் எழுதிய கதைகளுக்கு வந்த 'அன்பளிப்'பில் அவ

**டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி**

ளுக்கு ஒரு 'தொங்கட்டான்' – காதணி வாங்கிப் போட்டது ஒன்றுதான் நான் செய்தது. என் மாமா அவர்கள் எல்லாச் செலவுகளையும் செய்து என் மனைவியைக் கன்னிகாதானமாக எனக்குக் கொடுத்துத் திருமணம் நடத்தினார்கள்.

இளம் மனைவி. நமக்காக உழைக்கும் பெண். அவள் பொறுப்பில் குழந்தைகள், குடும்பம். கல்யாணம் கார்த்திகை என்று அவள் போகக் கூட முடியாது என்ற சுமை மிகுந்த நினைவுகள்.

அப்போது ஒரு வாசகம் படித்தேன். அது என் மனைவிக்குப் பொருத்தமான எழுத்துக்கள். அவளுக்குக் கடிதம் எழுதினேன்.

"தந்தது உன் தன்னை
கொண்டது என் தன்னை
யார் கொலோ சதுரர்?
யாது நீ பெற்றது என்பால்?"

நீயோ உன்னை எனக்கு முழுமையாகக் கொடுத்து விட்டாய். என்னையோ நீ ஆட்கொண்டு விட்டாய். இதில் யார் வெற்றி பெற்றார்கள்? நீ என்ன பெற்றாய் என்னிடமிருந்து? – இதுதான் அதன் பொருள். இதை ஆண்டவனிடம் கேட்கிறார் பக்தர்.

ஒரு முடிவுக்கு வந்தேன்.

"நாம் எதுவும் நம் மனைவிக்குச் செய்து விடவில்லை. நாம் அவளுக்குச் செய்யக் கூடிய, மிகப் பெரிய காரியம் அவளை இங்கு அழைத்துக் கொண்டு வந்து காட்டுவதுதான். இதுதான் நான் திருப்பிச் செய்யக்கூடிய காரியம்."

உடனே நான் அயல்நாட்டு மாணவர்களுக்கான ஆலோசகரிடம் இதற்கான அனுமதி பெற்றேன். அவர்களே ஓரளவு கடன் உதவியும் செய்தார்கள். மிகுதி என் பணத்தைப் போட்டு அவளுக்கு விமான டிக்கெட் வாங்கி அனுப்பினேன்.

அவள் வருவது ஒன்றும் அப்படி சுலபமாயில்லை. குழந்தைகளைத் தனியே விட்டு விட்டு வருவது என்பதில் அவளுக்குத் தயக்கம். எனினும் என் உறவினர்கள் எனக்கு எழுதினார்கள். "நீ வீட்டைப் பற்றி – மனைவியைப் பற்றி நினைத்துக் கொண்டிராதே. சனி ஞாயிறில் இப்படி வெளியூர் என்று எங்காவது போய் வருவாயானால் இந்த எண்ணம் – மனைவி தாகம் ஏற்படாது" என்று.

என் மனைவி அமெரிக்கா வருவது எனது சுய தேவைகளுக்காக அல்ல என்பதைப் புரிய வைப்பது கஷ்டமாக இருந்தது. கடைசியில் அவர்கள் பிரம்மாஸ்திரத்தையும் உபயோகித்துப் பார்த்திருக்கிறார்கள். அதாவது "விமானத்தில் லண்டனில் அல்லது ஐரோப்பாவில் மாறி ஏற வேண்டும். நீ அங்கே காணாமல் போய் விடுவாய்!" என்று. இப்படி யாராவது பயமுறுத்தினால், அந்தச் சமயங்களில் அவள் ஏதும் பதில் பேச மாட்டாள். "நான் பார்த்துக் கொள்கிறேன்!" என்று அமைதியாகப் பதில் சொல்வாள். "வயிரமுடைய நெஞ்சு வேணும் அது வாழு முறைமையடி பாப்பா" என்ற பாரதியின் பாட்டுத்தான் எனக்கு அவளைப் பற்றி நினைவுக்கு வரும்.

அவள் சிகாகோ விமான நிலையத்தில் வந்து இறங்கிய போது கண்டேன். எலும்பும் தோலுமாய் இருந்தாள். எனக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. அவள் இங்கே வருவதற்கிருந்த எதிர்ப்பில், "நீ உனக்கு வேண்டிய சில துணிமணிகளை மட்டும் எடுத்து வா. மற்றவை இங்கு பார்த்துக் கொள்ளலாம்" என்று எழுதி இருந்தேன்.

ஒரு சமயம் இந்தியப் பாடம் சொல்லிக் கொடுக்கும் மூன்று அமெரிக்கப் பேராசிரியர்களை வீட்டுக்கு விருந்துக்கு அழைத்திருந்தேன். அவர்கள் வந்தார்கள். உணவு வகைகளைப் பார்த்து விட்டு, "ஓ! இட்லி!" என்றார்கள்! "இட்லிப் பானை கொண்டு வந்தாயா?"

"இல்லை" என்றாள் என் மனைவி.

"பின் எப்படி இட்லி செய்தாய்?"

"கடைகளுக்குப் போனேன். அங்கே உடைத்த முட்டையை வேகவைக்கும் (EGG POACHER) தட்டு இருந்தது. அங்கே இட்லி தட்டில் ஆறு வட்டங்களும் அந்த வட்டத்தில் உடைத்த முட்டையை வேகவைக்கும் கிண்ணங்களும் இருந்தன. அதை எடுத்துக் கொண்டு வந்து கிண்ணங்களில் ஆணியால் ஓட்டை போட்டேன். அதன்மீது ஈரத்துணியைப் போட்டு இட்லி சுட்டேன்!" என்றாள்.

"ஆ!" என்றார்கள் பேராசிரியர்கள். "இத்தனை நாள் இது எங்களுக்குத் தெரியாமல் போச்சே!" என்றார்கள் ஒரே குரலில். இப்படி அவள் பல புதுமையான அணுகு முறைகளைக் கையாண்டாள். எனது மூத்த மகன் பல்கலைக்கழகம் சென்ற போது அவனுக்கு வேண்டிய வத்தல் குழம்பு, சாம்பார், என்பனவற்றையெல்லாம் வீட்டிலேயே கண்ணாடி பாட்டில்களில் போட்டு நீராவியில் வைத்து சீல் செய்து அனுப்புவாள். தக்காளி மலிவாக விற்கும் காலத்தில் தக்

காளியை சில் செய்யக் கற்றுக் கொண்டாள்.

"அதிகம் படிக்கவில்லையே, புதுமையை எப்படி ஏற்றுக் கொள்வாள், அமெரிக்க கலாசாரத்தை எப்படிப் புரிந்து கொள்வாள்?" என்று நான் யோசித்ததுண்டு.

வீட்டில் அப்போது இரண்டாவது மகன் அசோகனும், எனது மகள் கமலாவும் உயர்ந்த பள்ளியில் படித்துக் கொண்டிருந்தார்கள். அந்த வயதில் சனி, ஞாயிறில் பல இடங்களில் பள்ளி இளைஞர்கள் கலந்து கொள்ளும் பார்ட்டிகளும் நடனங்களும் இருக்கும். எல்லா இளைஞர்களும் பெண்களும் தாமே காரை ஓட்டிக் கொண்டு சென்று இரவு பன்னிரண்டு மணி சுமாருக்கு வீடு திரும்புவார்கள்.

இந்த விஷயம் நம் வீட்டுக்கு வந்த போதுதான் எனக்கு அதிர்ச்சி காத்திருந்தது.

"அப்பா, இரவு வர பன்னிரண்டு மணி ஆகும்" என்றாள் என் மகள்.

நான் சொன்னேன். "அம்மா! இதெல்லாம் நமக்குச் சரிவராது. என்ன செய்வாயோ எனக்குத் தெரியாது. நீ வீட்டுக்கு ஒன்பது மணிக்கெல்லாம் வந்துவிட வேண்டும்" என்றேன்.

"அது எப்படி முடியும்? அப்போதுதான் 'டான்ஸ்' ஆரம்பமாகும். எல்லோரும் இருப்பார்கள். நான் மட்டும் கிளம்பி வந்தேனானால் எல்லோரும் என்னை ஒருவிதமாகப் பார்ப்பார்கள்."

"அதெல்லாம் முடியாது...."

"அப்பா, எதற்காகக் கவலைப்படுகிறீர்கள்?" என்றாள் கண்கலங்க.

"உன் பாதுகாப்புதான்."

"உங்கள் நண்பர் பிரின்சிபாலுடைய மகன்தானே என் சினேகிதி ஆன். அவளுடன்தானே போகிறேன். என்ன பயம்? நான் வேண்டுமானால் போன் நம்பரைக் கொடுத்து விட்டுப் போகிறேன். கூப்பிடுங்கள்."

"இதோ பாரம்மா! நான் இந்தியாவில் வளர்ந்தவன். பெண்களை எல்லாம் பொழுது சாயறதுக்குள்ளே வீட்டுக்கு வந்து விட வேண்டுமென்று சொல்வார்கள். நாங்கள் எல்லாம் அதற்குத்தான் பழக்கப்பட்டிருக்கிறோம்" என்றேன். என்னிடம், விவாதத்தைக் காரணகாரியம் காட்டித் தொடர விஷயமில்லை என்பது புரிந்தது!

என் மகள் அழ ஆரம்பித்தாள். பின்னாலிருந்து ஒரு பெண் புலியின் உறுமல் கேட்டது. வேறு யாருமல்ல என் மனைவி சீதா




தான்.

"இதோ பாருங்கள்! நீங்கள்தானே எழுதுவீர்கள், ரோம் நகரில் இருக்கும்போது ரோமன் போல இருக்க வேண்டும் என்று. இப்போது என்னடா என்றால் இந்தியா அது இது என்கிறீர்கள். அவள்தான் பத்திரமாய்ப் போய் வருகிறேன் என்கிறாளே அதற்குப் பின் என்ன?"

"அது பாரு. நாளைக்கு ஒண்ணு..." என்று நான் இழுத்தேன்.

"அவ ஒண்ணும் குழந்தையில்லே. அவன் (அசோகன்) போயிட்டு ராத்திரி ரெண்டு மணிக்கு வர்றான். இவ போறேன்னா போகக் கூடாது? இது என்ன, ஆணுக்கொரு சட்டம், பெண்ணுக்கொரு சட்டம்? இந்த வீட்டில்..." என்றாள் சீதா.

என்னால் பதில் பேச முடியவில்லை. என் தவறை உணர்ந்தேன். மனிதன் எப்படிப் பழக்க வழக்கங்களுக்கு அடிமையாகி இருக்கிறான் என்பதை உணர்ந்தேன். யதார்த்தங்களை, எப்படிப் பெண்கள் புரிந்து கொள்கிறார்கள், அதை ஏற்றுக் கொள்கிறார்கள் என்பதைக் கண்டு வியந்தேன். என் மகள் காரை எடுத்துக் கொண்டு கிளம்பி விட்டாள்.

எதையும் ஆழமாக உணர்ந்து அதைச் சாதாரணமாக – இயல்பாக – எடுத்துக் கொள்ளும் குணம் அவள் நோய்வாய்ப்பட்ட போதும் தெரிந்தது. வலியையோ, கஷ்டத்தையோ ஒருவரிடம் சொல்ல மாட்டாள்.

"தந்தது உன்தன்னை
கொண்டது என் தன்னை"

என்ற பாட்டை என் வாய் முணுமுணுத்தது.

(தொடரும்)

# வட்டமேஜை

## “நல்ல விஷயங்களையும் இடையிடையே கூறுகிறேன்!”

**– எஸ். வி. சேகர்**

✉ செட்டி நாட்டைப் பற்றி, 'ஏ' டு 'இசட்' தெரிந்து கொள்ள விரும்புபவர்களுக்கு கல்கி இதழ் ஒரு பொக்கிஷம்! வெல்டன் கல்கி!
மன்னார்புரம்,
அ. கஹைறுல் ரஹ்மான்.

✉ 'ஆஹா' என வியக்க வைத்த "அரண்மனை", 'அடடா' என சப்புக் கொட்ட வைத்த "சமையல்", 'ஹா' என பெருமூச்சு விட வைத்த 'கல்யாணம்', 'வாவ்' என பாராட்ட வைத்த 'செட்டிநாடு ஸ்பெஷல்' படைத்தது ஒரு சரித்திரம்!
சுப்பராயர்புரம்,
மணிமதியண்ணன்.



✉ மாமியாரை மண்ணெண்ணைக்கு ஒப்பிட்டுப் பார்க்கும் இந்தக் காலத்தில், "எம் மாமியாரை பூப்போட்டுக் கும்பிடணும் ராசா!" என்று லட்சுமி ஆச்சி கூறியது நெகிழ்ச்சி!
பெங்களூர்-47, மு. புஷ்பராசன்.

✉ குண்டு நகர எம்.பி. சி.பி. ஆரின் பேட்டி அவரது துணிச்சலைக் காட்டியது. இவராவது கோவையை அமைதி ஆக்குகிறாரா பார்ப்போம்!
தூத்துக்குடி-1,
சிவராமசுப்பிரமணியன்.

✉ நீண்ட இடைவெளிக்குப் பிறகு மகேந்திரன் இயக்கும் சாசனம் படத்தைப் பார்க்கும் ஆவலை அவரது பேட்டி மூலம் இன்னும் அதிகரித்து விட்டீர்கள்.
சென்னை-1, கே.ஆர். உதயகுமார்.

✉ 'செட்டியார் முறுக்கா, சரக்கு முறுக்கா?' என்பது போல, செட்டி நாட்டுச் செய்திகள் சிறப்பா, அதைத் தொகுத்தளித்த கல்கியின் பாங்கு சிறப்பா? என பட்டிமன்றமே நடத்தலாம் என்கிற அளவிற்கு செட்டிநாட்டுச் செய்திகள், பிரபலங்கள், பழக்க வழக்கங்கள், பழமையின் வாசனைகள் என அத்தனையையும் திரட்டி செட்டிநாட்டு உணவைப் போலவே இயற்கை மணம் மாறாமல் சுவைபடப் பரிமாறி யிருந்த விதம் அருமை!
கபிஸ்தலம்,
ஆர். இரவிகுலரகுவர்மன்.

✉ கானாடு காத்தானில் உள்ள ராஜா அண்ணாமலைச் செட்டியாரின் அரண்மனை புகைப் படங்களைப் பார்த்து, வியப்பில் ஆழ்ந்தேன்!
கோவை – 6,
கோ. கல்யாணசுந்தரம்.

✉ 'மினிமம் கேரண்டி' டைரக்டர் இராம. நாராயணன், கல்கண்டு லேனா தமிழ்வாணன், சினிமா கதாசிரியர் பஞ்சு அருணாசலம், டைரக்டர் எஸ்.பி. முத்துராமன் ஆகியோரைப் பற்றி 'செட்டிநாடு ஸ்பெஷலில்' எழுதாமல் விட்டு விட்டீர்களே!
ஈரோடு, கதி. அருணாசலம்.

✉ தி.மு.க. ஆட்சியின் மெத்தனப் போக்கே அதன் வீழ்ச்சிக்குத் தலையாய காரணம் என்பதைத் தலையங்கம் தெளிவாகவே சுட்டிக் காட்டுகிறது. பேஷ்!
மேலகிருஷ்ணன் புதூர்,
ஆர்.கே. வெங்கேசன்.

✉ தலையங்கத்தில், பா.ஜ.வுக்குக் கொடுத்துள்ள அறிவுரைகள், அக்கட்சிக்குக் கொடுத்துள்ள முன் எச்சரிக்கையும்கூடத்தான்!
தஞ்சாவூர்-2,
ஆடுதுறை கோ. ராமதாஸன்.

✉ வி.ஐ.பி.களின் வீடுகளையும் அவர்கள் வீட்டுத் திருமணங்களையும் மட்டும் பார்த்து வியந்து நகரத்தார் ஸ்பெஷல்' மலரில் எழுதியிருக்கிறீர்கள். பெரும்பாலான நகரத்தார்கள், வீட்டின் மேற்கூரையையும் நிலையையும் விற்றுத்தான் திருமணம் செய்கிறார்கள். அதுவும் காலம் கடந்த பின்; இரண்டாந்தாரமாக! கல்லூரியில் படிக்க வசதியும் வாய்ப்பும் இல்லாத காரணத்தால் பெண்கள் ஒயர்க்கூடை பின்னியும் பலகாரம் செய்தும், சமையல் வேலைக்குச் சென்றும் வயிற்றைக் கழுவுகிறார்கள். ஆண்கள் கடைகளில் எடுபிடி வேலை செய்கிறார்கள். இவர்கள் இன்னமும் வறுமையை மறைத்துக் கொண்டு பழம் பெருமை பேசுவதுதான் கொடுமை.
மன்னார்குடி, கரு. மீனாள்.

✉ கல்கி (15.3.98) தராசு கேள்வி பதில் பகுதியில் "எஸ்.வி. சேகர் விடற ஆபாச ஜோக்குகளால தேச பக்தி கொச்சையாகிப் போய்விடும்" என்ற உங்கள் உன்னதமான பதிலைப் படித்தேன். 1974ம் ஆண்டிலிருந்து இன்றுவரை நகைச்சுவை என்ற அடிப்படையில்தான் நாடகம் போட்டு வெற்றி அடைந்து கொண்டு வருகின்றோமே தவிர ஆபாசத்தை வியாபாரமாக்கும் எண்ணம், செயல் இரண்டும் எனக்கோ என் குழுவினருக்கோ கிடையாது. என் நாடகங்களில் உள்ள ஆபாசம் மட்டுமே கண்ணுக்குத் தெரிந்த தங்களுக்கு, நான் என் நாடகத்தின் இடை இடையே கூறிக் கொண்டு வரும் பல நல்ல விஷயங்களும் கண்ணில் படும் என்ற நம்பிக்கையுடன்...
சென்னை-28, எஸ்.வி. சேகர்.

## நேற்று சித்தி, இன்று அம்மா, நாளை...?

**ல**க்ஸ்-ஜீ சினிமா அவார்டு வாங்க வந்த கமலுக்கு மட்டும் இந்த விஷயம் தெரிந்திருந்தால், மயக்கம் போட்டிருப்பார்! ''சாச்சி (சித்தி) 420'' என்ற பட்டத்தை மும்பையின் பிரபல குஜராத்திப் பத்திரிகை ஜெயலலிதாவுக்கே ஏகபோகமாக வழங்கியிருந்தது. கமலை (தாமரை) ஆதரிக்கும் குஜராத்தியருக்கு, ஜெயலலிதா முதலில் விதித்த நிபந்தனைகள் கதிகலங்க வைக்க, வாஜ்பேயி பிரதமராவதற்கு இந்த 'சாச்சி 420' முட்டுக்கட்டையாகி விடுவாரோ என்று பதறி எழுதியிருந்தன. ஆனால் மறுநாளே நிலைமை சரியாக, ''அம்மா'' தந்த் ஒத்துழைப்புக்கு நன்றி தெரிவித்தன. இன்று ஆதரவை ''இந்தா'' என வழங்கிவிட்டு, நாளையே சமதா (கட்சி), மம்தா (பானர்ஜி), (ஜெய)லலிதா எல்லோருமாகச் சேர்ந்து, வாஜ்பேயியை ''தை...தா'' என்று ஆட்டி வைக்காமலிருக்க வேண்டுமே என்று எல்லோருக்கும் உள்ளூரக் கவலைதான்!

## தேறுதல் மொழிகள்

''**நா**ங்கள் பாகிஸ்தான் அம்பாஸிடருக்கு அளித்த வரவேற்பையும், முஸ்லிம் சகோதரர்களுக்கு வழங்கிய சலுகைகளையும் கண்டு சலித்து, எங்கள் ''ஹிந்துத்வ'' வாக்காளர்கள் வோட்டுப் போடாமலிருந்ததால்தான் நாங்கள் தோற்க நேர்ந்தது; அவர்களைச் சமாளிக்க எங்களுக்குத் தெரியும்'' என்றொரு பாணத்தை வீசிவிட்டு, தாக்கரே, தம் தம்பி ஸ்ரீகாந்த் தாக்கரே எடுக்கும் சினிமாபட பூஜைக்குச் சென்றுவிட்டார்; மனோகர் ஜோஷியோ, தோல்விக்கு தார்மீகப் பொறுப்பேற்று ராஜினாமா கடிதத்தைக் கொடுத்தார். (அட, கவர்னரிடமெல்லாம் இல்லைங்க; தாக்கரே விடம்தான்). அதைத் தாக்கரே கிழித்துக் குப்பையில் போட்ட கையுடன், ஜோஷி, ''மந்திரி சபையில் எந்த மாற்றமுமில்லை! எங்கள் திட்டங்களை எல்லாம் விளம்பரப் படுத்தாததால் வந்த வினைதான் இது! அடுத்த தேர்தலுக்குள் பீற்றித் தள்ளி, வென்றுவிடுவோம்'' என்று சமாதானம் சொல்கிறார். பிரமோத் மஹாஜன்? ''அரசியலும் கிரிக்கெட்டும் ஒன்றுதான்; 'டக்' அடிக்கும் பாட்ஸ்மேன் பின்பு

## மும்பை மசாலா:

ஃபீல்டிங்கில் பிரகாசிப்பதில்லையா? அது போல் நானும் தேர்தலில் தோற்றாலும், மத்தியில் ஆட்சி நிறுவுவதில், திட்டங்கள் வகுத்துச் செயல்படுத்துவதில் கவனம் செலுத்துவேன்'' என்றிருக்கிறார். இப்போதெல்லாம் கீழே விழுந்தாலும் சந்தனம் ஒட்டிக் கொள்வதாகத்தான் எல்லோரும் சொல்லிக் கொள்கிறார்கள்.

## 'Holy' அற்ற 'Holi'

**வ**சந்த காலத்தை வரவேற்கு முகமாக ஹோலிப் பண்டிகை கொண்டாடப்பட்ட நிலை மாறி, இன்று, பலர் வாழ்வின்



## ஜெ.வுக்குக் கிடைத்த புது பட்டம்!



• மீனா குமாரி



• மனீஷா கொய்ராலா

என்றொரு புத்தகம்; எழுதிய மோகன் தீப் தம்மைப் புகழ்பெற்ற திரைப் பத்திரிகையாளர் என்று சொல்லிக் கொள்கிறார். மறைந்த நடிகை மீனாகுமாரி யின் சொந்த வாழ்க்கையில், அவருக்கிருந்த (கள்ள) தொடர்புகளை எல்லாம் வேலைமெனக்கெட்டு ஆராய்ச்சி செய்து, (எத்தனை உண்மையோ?), 266 பக்கங்கள் கொண்ட புத்தகமாக வெளியிட்டிருக்கிறார். இந்தக் குப்பைக்கு விலை ரூ.200/- ஆனானப்பட்ட திரைப் பெரிசுகளை எல்லாம் விட்டுவிட்டு, மீனா குமாரியின் இளைய பதிப்பாக வர்ணிக்கப்படும் மனீஷா கொய்ராலாவை விட்டுப் புத்தக வெளியீட்டு விழாவை நடத்திய போதே பலரும், சரி, 'மஞ்சள்' பக்கங்களைக் காமாலைக்காரர்கள்தானே வெளியிடப் பொருத்தமானவர்கள் என்று பேச ஆரம்பித்து விட்டார்கள்!

வசந்தங்களைப் பறிக்கும் கொடுமையாகி வருகிறது. தெரிந்தவர்கள், நண்பர்கள் மீது 'குலால்' போன்ற கலர்ப்பொடிகளைத் தூவி, பீச்சாங் குழலில் தண்ணீர் நிரப்பி விளையாடிய காலம் போய், பஸ்ஸிலும் ரயிலிலும் பயணிக்கும் அப்பாவிகள் மீதெல்லாம் கல்லும், சாக்கடை நீர் நிரம்பிய பலூன்களும் வீசப்படுவதும் ஆசிட், கெரஸின், பெயிண்ட் முதலான திரவங்களடைத்த பிளாஸ்டிக் பைகளால் வேண்டாதவர்கள் குறிபார்க்கப்படுவதுமாக ஏக ரகளை! அதுவும், ஹோலியன்று வழங்கப்படும் 'பாங்' என்ற மதுபானத்தை எக்கச்சக்கமாகக் குடித்து விட்டு, போவோர் வருவோரை எல்லாம் வம்புக்கிழுப்பதும், பெரியோர் பெண்டிர் என்ற பாகுபாடு இல்லாமல் தரக்குறைவாக விமர்சிப்பதும், ஆடிப்பாடி வாகனங்களை வழிமறிப்பதும், எதிர்த்தோர் மீது குப்பை கூளங்களிலிருந்து, செருப்பு, உடைந்த பாட்டில்கள் வரை கையில் கிடைத்ததை வீசுவதுமாக... அப்பப்பா... இருவருக்குக் கண் பார்வையே போய் விட்டது! இந்தக் கலாட்டாக்களைக் கண்டு, மன்மதன் தானாகவே தீக்குளித்திருப்பான்; புனிதத் தன்மை இல்லாவிட்டால் போகட்டும்; மனிதத் தன்மை கூடவா இல்லாமல் போக வேண்டும்?

## மஞ்சள் மகிமை

'இன்வெஸ்டிகேடிவ் ஜர்னலிசம்' நல்லதுதான்; ஆனால் எதைத் தோண்டித் துருவுவது என்ற விவஸ்தை இல்லாமலிருப்பதா? "Simply Scandalous- மீனாகுமாரி"

## "வாவ்"வா? "ஹாவ்"வா?

எத்தனை நாட்களுக்குத்தான் லோக்கல் ஸ்போர்ட்ஸ் ஸ்டார்களை வைத்துக் கொண்டு, கூல் ட்ரிங்க்ஸையும், காலணியையும் விற்பதாம்? மாறுதலுக்கு 'ஆஸி'களை துணி விற்க வைக்கப்போகிறார்கள், "பெர்ஸப்ட்" விளம்பரதாரர்கள். "வா" சகோதரர்களை 'வா, வா'வென்று அழைத்திருக்கிறார்கள் "எஸ்.குமார்" நிறுவனத்தினர். இந்தியாவின் சலீல் அகோலா, ராபின்சிங் இருவருடனும் ஸ்டீவ் வா, மார்க் வா இருவரும் எஸ். குமார் விளம்பரத்துக்கு மாடலாக ஒப்பந்திக்கப்பட்டிருக்கிறார்கள். மஹா பெரிய ரகசியமாக இருந்த இந்த விஷயம், மீடியாக்காரர்களுக்கு 'லீக்'காக, மற்ற விளம்பரக் கம்பெனிகள் பொறாமைத் தீயில் சாம்பலாக, அகோலாவுக்கு இது தெரிய வந்தபோது, "ஏதோ இரண்டு ஆஸ்திரேலியர்கள் என்ற மட்டில்தான் என்னிடம் சொல்லி வைத்திருக்கிறார்கள்; அது 'வா' வா? வாவ்!" என்கிறார்.

மும்பையிலிருந்து:

**ஜெயஸ்ரீராஜ்**

# சி.டி.ஸ்கான் என்பது என்ன?

சி.டி. ஸ்கான் என்பது மருத்துவ உலகில் பிரபலமாகி விட்ட ஒரு விஷயம். மருத்துவ உலகின் பல பிரிவுகளுக்கு முக்கிய மாக நரம்பியலுக்கு அது செய்து வரும் தொண்டு கொஞ்ச நஞ்சமல்லை.

எக்ஸ்-ரே கருவி, கம்ப்யூட்டர் இரண்டுக்கும் பிறந்த தொழில் நுட்பக் குழந்தைதான் இது என்று சி.டி.ஸ்கானை குறிப்பிடலாம்.



அதாவது கம்ப்யூட்டரோடு இணைந்த எக்ஸ்-ரே கருவி. கம்ப்யூடரைஸ்ட் டோமோக்ராஃபி என்பதன் சுருக்கம் தான் சி.டி..

எக்ஸ்-ரே கருவி ஒரே இடத்தில் இருந்து கொண்டு கதிர்களைப் பாய்ச்சும் இல்லையா? ஆனால் சி.டி.. ஸ்கானரைப் பொறுத்தவரை அதிலுள்ள எக்ஸ்-ரே கருவி, உடலின் எந்தப் பகுதி பரிசோதிக்கப் பட வேண்டுமோ, அதை சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கும். சும்மா சுற்றுவதில்லை. சுற்றிக் கொண்டே உடலின் பாகங்களை படமெடுத்துத் தள்ளும். தொடர்ச்சியாக எடுக்கப்படும் இந்தப் படங்கள் ஒரு கம்ப்யூட்டருக்குள் செலுத்தப் படுகின்றன. உடனே இவை கம்ப்யூட்டர் திரையில் தெரியத் தொடங்குகின்றன.

சின்னத் திரையில் இவை ஒவ்வொரு படமாகத் தோன்றும் என்பதல்ல. ஒரே சமயத்தில் குறிப்பிட்ட பாகம் பல்வேறு கோணங்களில் தெளிவாகத் தெரியும். வெளியே, உள்ளே, குறுக்கு வெட்டுத் தோற்றம், நெடுக்கு வெட்டுத் தோற்றம்... இப்படி.

இதைப் பார்க்கும் டாக்டருக்கு நோயாளியின் குறிப்பிட்ட பாகம் மற்றும் அதன் குறைபாடுகள் பற்றி ஒரு 3-D எஃபெக்டோடு விவரங்கள் தெரியும். பிறகென்ன, சிகிச்சையைத் தொடங்க வேண்டியது தான்.

முக்கியமாக மூளைப் பகுதியில் எங்காவது கட்டி ஏற்பட்டு, அதனால் அங்கு ரத்தம் செல்வது தடைப்பட்டிருந்தாலோ, இதன் காரணமாக அந்தப் பகுதியில் உள்ள பிற ரத்தக் குழாய்கள் தாறுமாறாகச் செயல்பட்டுக் கொண்டிருந்தாலோ, சி.டி. ஸ்கான் அதை உள்ளங்கை நெல்லிக்கனியாக காட்டிக் கொடுத்து விடும். உடனே சிகிச்சையைத் தொடங்கி விடுவார் டாக்டர்.

சி.டி. ஸ்கானின் உபயோகம் மூளையோடு நின்று விடுவதில்லை! நுரையீரல் பரிசோதனைக்கும் உதவுகிறது. சில சமயம் வயிற்றுப் பகுதி மற்றும் மார்புப் பகுதியில் உள்ள பருத்த ரத்த நாளங்கள், நடுநடுவே ஒரு பலூன் போல வீங்கிக் கொள்ளலாம். இதை மருத்துவர்கள் கண்டறிய, உடுக்கை இழந்தவன் கைபோல உதவிக்கு வரத் தயார்

என்கிறது சி.டி. ஸ்கான்.

குடல், சிறுநீரகம் மற்றும் நுரையீரல் புற்றுநோய்களையும் கண்டுபிடிக்க இது கை கொடுக்கிறது.

நம் மூளையில் எக்கச்சக்கமான நரம்புகள் உண்டு என்பதும் இவையெல்லாம் சிறிய, அழகானதொரு பெட்டியில் (மண்டை ஓடு தாங்க!) இருக்கின்றன என்பதும் நமக்குத் தெரியும். இந்தப் பெட்டி முழுவதும் நரம்புகளால் அடைக்கப்பட்டிருப்பதால், கொஞ்சம் அதிகப்படி சுமை இதில் சேர்ந்தால்கூட மூளை மக்கர் பண்ண ஆரம்பித்து விடும். மூளைக்கட்டி என்பது இப்படியொரு அதிகப்படி சுமைதான். வளர்ந்து கொண்டே போகும் இந்தக் கட்டியை "இருந்துவிட்டுப் போகட்டுமே" என்று மூளை திசுக்களால் அனுமதிக்க முடிவதில்லை. அவ்வளவு இட நெருக்கடி. இதனால் மூளையில் உள்ள திசுக்கள் அழுத்தப்படுகின்றன அல்லது காயம் அடைகின்றன. தொடக்கத்தில் மெதுவாக இடம் பெறும் இந்தச் சம்பவங்கள் விரைவில் கடும் தலைவலி என்று மாறி பக்கவாதத்தில் முடியலாம். சில சமயம் பார்வை பழுதுபடும். இல்லாத ஒலிகளையெல்லாம்கூட நம் காது கேட்கும்! சுற்றுப்புறத்திலேயே இல்லாத மணங்களையெல்லாம் மூக்கு முகரும்!

இப்படிப்பட்ட கோளாறுகள் ஒரு நோயாளியிடம் தென்படுகிறது என்றால் டாக்டரின் மூளையில் பளிச்சென்று மின்னல் அடிப்பது 'மூளைக்கட்டி' என்பதுதான். அதை உறுதி செய்து கொள்ள அவரது கை விறு விறு என்று எழுதும் சோதனை 'சி.டி.ஸ்கான்' என்பதுதான்.

புற்று நோயா என்பதை அறிந்து கொள்ள, சந்தேகிக்கப்படும் உடல் பகுதியிலிருந்து ஒரு சிறு பகுதியை எடுத்து மைக்ரோ ஸ்கோப்பின் மூலமாக, அதை பரிசோதிப்பார்கள். இதை 'பயாப்ஸி' என்று சொல்வது வழக்கம். நம் உடலின் எந்தப் பகுதி என்பதைப் பொறுத்து இந்த பயாப்ஸிக்காக டாக்டர் பல்வேறு உபகரணங்களைப் பயன்படுத்த வேண்டியிருக்கும். சில சமயம் ரிமோட்டால் கட்டுப்படுத்தப்படும் ட்யூப், சில சமயம் கத்தி, சில சமயம் மிக மெல்லிய ஊசி செருகப்பட்ட சிரிஞ்சு இப்படி. இந்த அவஸ்தைகள் எல்லாம் இல்லாமலேயே உடலின் பலவித பாகங்களில் புற்றுநோய் தொடங்கியுள்ளதா இல்லையா என்பதை சி.டி.ஸ்கான் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது என்பது எவ்வளவு மகத்தான விஞ்ஞான முன்னேற்றம்!

— ஜி.எஸ்.எஸ்



"முதலாளி! நம்ம சரக்கு மாஸ்டருக்கு நாலுமாச சம்பள பாக்கியை உடனே குடுத்துடுங்க!"

"ஏன்?"

"உங்க மேல இருக்கற கோபத்துல முழு பூசணிக்காயை சாம்பார்ல போட்டிருக்கான்!"

– கொங்கணாபுரம் வே. செந்தில்



"அந்த சர்வர் என்ன சொல்லிட்டுப் போறார்?"

" 'எதுப்பா சூடா இருக்கு'ன்னு கேட்டதுக்கு, 'நாலு மாச சம்பள பாக்கியாலே தொழிலாளர்கள் எல்லோருமே சூடா இருக்கோம்'னு பதில் சொல்லிட்டுப் போறார்!"

– வி.சி.கிருஷ்ணரத்னம்



"மன்னருக்கு என்ன அவ்வளவு சந்தோஷம்? குட்டிக்கரணம் எல்லாம் அடிக்கறாரு?"

"எதிரிநாட்டு மன்னன் தன் படை எடுப்பைத் தள்ளி வெச்சுட்டானாம். அதைக் கேட்டதும் மன்னருக்கு ஒரே ஆனந்தம்."

– அரிச்சந்திரன்

## காதல் டைரிக் குறிப்பு :

**நான் உன் மேல் கொண்டுள்ள பிரியத்தை என் வார்த்தைகளும் செய்கைகளும் பரிபூரணமாக உணர்த்தி விட்டதாக நான் நம்பவில்லை.**

'உன்னை நான் நேசிப்பதால்தான் உன்மேல் எனக்கு அக்கறை' என்று பிருந்தாவிடம் வெளிப்படையாகச் சொல்வதற்கு இது சரியான சந்தர்ப்பம்தானா என்று யோசித்தான் அரவிந்த்.

ஏன் தள்ளிப் போட வேண்டும்?

காதலை வெளிப்படுத்த ஓரளவாவது பழகியிருக்க வேண்டும். பழகியாயிற்று. தனிமை வேண்டும். இதோ அந்தத் தனிமை. இந்தத் தனி அறையில் நானும் அவளும் மட்டும்தானே இருக்கிறோம்.

நிறுவனத்தின் பிரச்னையைப் பற்றிப் பேசி முடித்தாயிற்று. என் முடிவால் அவள் ஏமாற்றம் அடைந்தாலும் என்மேல் கொஞ்சமும் வருத்தம் கிடையாதென்று தெளிவாகச் சொல்லி விட்டாள்.

இப்போது 'என் மேல உங்களுக்கு என்ன அரவிந்த் இவ்வளவு அக்கறை?' என்று ஒரு தூண்டில் கேள்வியும் கேட்டு விட்டாள்.

என் மனத்தின் உண்மையான உணர்வுகளை நான் வெளிப்படுத்த வேண்டும் என்கிற நோக்கத்தில் அவளே இந்தக் கேள்வி மூலம் வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறாள்.

இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளாவிட்டால் நான் முட்டாள்! என் மனத்தில் போல, அவள் மனத்திலும் இதே தவிப்பு இருக்கலாம். நான் அவளை நேசிப்பதாகச் சொல்ல வேண்டும் என்று அவள் எதிர்பார்க்கலாம். என் மனதை அறிந்து கொள்ளும் துடிப்பை அடக்கி வைத்து இயல்பாக இப்படிக் கேட்டிருக்கலாம்.

விளைவைப் பற்றி பிறகு யோசித்துக் கொள்ளலாம். நான் இவளை நேசிப்பது உண்மை. அந்த உண்மையைச் சொல்ல இனியும் தயங்க வேண்டியதில்லை.

"என்ன அரவிந்த்! நான் ஏதாவது கஷ்டமான கேள்வி கேட்டுட்டேனா என்ன? என்ன என்மேல இவ்வளவு அக்கறைன்னு கேட்டேன். அதுக்கு ஏன் இவ்வளவு யோசிக்கிறீங்க?" என்றாள் பிருந்தா இயல்பாகச் சிரித்தபடி.

தொண்டை வரைக்கும் வார்த்தைகளை சேகரித்து வைத்துக் கொண்ட அரவிந்த் உதடுகளை ஈரப்படுத்திக் கொண்டான்.

எங்கே, எங்கே அந்த முதல் வார்த்தை?

"அது வந்துங்க பிருந்தா..."

ஏன் வெறும் காற்று மட்டும் வருகிறது?

"நான் சொல்லட்டுமா?" என்றாள்.

அவள் விழிகளை ஊடுருவிப் பார்த்தான்.

"நீங்க எடுத்த தீர்மானத்தாலதான் எனக்கு இங்கே வேலை போகப் போகுதுன்னு உங்களுக்கு ஒரு குற்ற உணர்ச்சி.



# நான் உன்னை சுவாசிக்கிறேன்

கிட்டுப் பேசறீங்க. கரெக்ட்டா?'' என்றாள் பிருந்தா.

உடைத்த சோடாவில் பொங்கின நுரை மெதுமெதுவாக வடிவது போல... காதலை இதோ இந்த நிமிடத்தில் சொல்லிவிட வேண்டும் என்று நினைத்த துடிப்பு அடங்கிப் போனது.

அவன் தலை ஆமோதிப்பாக அசைந்து, ''ஆமாம்'' என்று ஓசை வராமல் உதடுகள் முணுமுணுத்தன.



''ஓகே அரவிந்த். நீங்க கேட்ட மாதிரி என்னோட சர்ட்டிஃபிகேட்ஸ் பயோ-டேட்டா எல்லாம் உங்களுக்கு அனுப்பி வைக்கிறேன். உங்க மூலமா எனக்கு வேலை கிடைச்சா அதில ஆட்சேபிக்க என்ன இருக்கு?''

''சரி'' என்றான் சுரத்தில்லாமல்.

''ஏற்கெனவே உங்ககிட்ட சொல்லிருக்கேன். நிர்வாகத்தோட அணுகுமுறை பிடிக்காமல் பல வேலைகளை நான் உதறியிருக்கேன். எனக்கு என்னோட சில கொள்கைகள் ரொம்ப முக்கியம். இப்போ இந்தக் கம்பெனில நாலாயிரம் சம்பளம் வாங்கறேன். இதைவிடச் சம்பளம் கொஞ்சம் குறைஞ்சாலும் கூட பரவால்லை. ஆனா என் வேலை எனக்குப் பிடிக்கணும். நிர்வாகமும் எனக்குப் பிடிக்கணும்.''

''உங்களுக்குப் பிடிச்ச மாதிரி நிர்வாகம் இருக்கணும்னா எப்படி இருக்கணும் பிருந்தா?''

''என்னை முழுசா நம்பி பொறுப்புகளை ஒப்படைக்கணும். பொறுப்பு கொடுத்ததுக்கப்புறம் சந்தேகப்படக்கூடாது. நான் சுதந்திரமா செயல்படறதுக்கு அனுமதி இருக்கணும். என்னை டீஸண்ட்டா நடத்தணும். என் பதவிக்கு உரிய மரியாதையை அவசியம் கொடுக்கணும். நேர்மை, உழைப்பு இது ரெண்டும் எனக்குப் பிடிச்ச விஷயங்கள். நான் வாங்கற சம்பளத்துக்காக மட்டும் கடனேன்னு வேலை பார்க்கறது எனக்குப் பிடிக்காது. என் சொந்த நிறுவனம் மாதிரி நினைச்சி அதோட முன்னேற்றத்துக்காகக் கடுமையா உழைப்பேன். என் முழு திறமையையும் பயன்படுத்துவேன். அதே சமயம் நேர்மையைக் கைவிட்டு தப்பான வழிகள்ல நான் இறங்கவே மாட்டேன்.''

எனக்கு வேற வேலை கிடைக்கறதுக்கு உதவி செய்றதுதான் அதுக்குப் பிராயச்சித்தம்னு நீங்க நினைக்கிறீங்க. அதனாலதான் என் மேல அக்கறை எடுத்துக்

"இப்படிப்பட்ட ஒரு மானேஜர் கிடைக்கிறதுக்கு எந்தக் கம்பெனியா இருந்தாலும் கொடுத்து வெச்சிருக்கணும் பிருந்தா. கொஞ்ச நாள் பழக்கத்திலேயே உங்களைப் பத்தி நான் புரிஞ்சி வைச்சிருக்கேன். நீங்களும் சொல்லிட்டீங்க. அதனால உங்களுக்குச் சரியா வரும்னு நினைக்கிற இடத்தில மட்டும் உங்க வேலைக்கு முயற்சி செய்யறேன்."

டெலிபோன் ஒலித்தது. அரவிந்திடம் 'ஒரு நிமிடம்' சொல்லி அதை எடுத்து அலுவலகம் தொடர்பாக அவன் பேசத் துவங்கினான்.



"இந்தத் தேர்தலிலும் தான் நம்ம தலைவர் தோத்துட்டாரே, அப்புறம் எதுக்குப் பாராட்டு விழா?"

"தொடர்ச்சியா அஞ்சு தேர்தலிலும் டெபாஸிட் வாங்கி இருக்காரே, அதுக்குத்தான்!"

– மலர் சூர்யா

பேச்சு திசைமாறிப் போய்விட்ட நிலையில், காதலைப் பற்றி இப்போது பேசுவது அபத்தமாகத் தோன்றியது அவனுக்கு.

அவள் பேசி முடித்து வைத்ததும், எழுந்து கொண்டான்.

"நான் புறப்படறேன்."

அவளும் எழுந்து கொண்டு, "சரிங்க" என்றாள்.

"சர்ட்டிஃபிகேட்ஸ் சீக்கிரத்தில அனுப்புங்க. ஐ வில் கீப் இன் டச் வித் யூ."

"வெல்கம்."

வெளியேறி விட்டான் அரவிந்த்.

**லா**ல்சந்த் வீட்டின் ஆடம்பரமான முகப்பைப் பார்த்ததுமே பிரமித்துப் போய் நின்று விட்டான் அரவிந்த்.

அதை பங்களா என்று சொல்லக் கூடாது. மாளிகை என்றுதான் சொல்ல வேண்டும்.

கோட்டை மாதிரியான உயரமான கருங்கல் காம்பௌண்ட்டும், அகலமான கேட்டும், புல்வெளியும், தோட்டமும், போர்ட்டிகோவில் நின்ற நான்கு வகை படகுக் கார்களும், கிரானைட் போர்த்தின சுவர்களும், யூனிஃபார்ம் அணிந்து நடமாடிய வீட்டின் ஊழியர்களும் விழிகளை விரிவடையச் செய்தன.

வந்து விசாரித்த நபரிடம் சந்துரு இந்தியில் பேசியதும், இவர்கள் இருவரையும் வீட்டுக்குள் அழைத்துச் சென்று அலங்காரமான நீள்செவ்வக ஹாலில் வசதியான சோபாக்களில் உட்கார வைத்து விட்டுப் போனான்.

"சந்துரு, இப்படி ஒரு பங்களாவை நான் பார்த்ததே இல்லை" என்றான் அரவிந்த் கிசுகிசுப்பான குரலில்.

"பம்பாய்ல இதைவிட மூணு மடங்கு பெரிசா ஒரு பங்களா இவருக்கு இருக்கறதா சொல்றாங்க அரவிந்த்."

"என்ன தொழில் எல்லாம் செய்றாரு இவரு?"

"ஒரே ஒரு தொழில்தான். சினிமாவுக்கு பணம் ஃபைனான்ஸ் பண்றது. தமிழ், தெலுங்கு, ஹிந்தின்னு எல்லா மொழிப் படங்களுக்கும் பணம் கொடுக்கறார். இப்பக் கொஞ்ச நாளாத்தான் சொந்தமா படம் தயாரிக்கிற யோசனை வந்திருக்கு."

"வட்டி வாங்கியே இவ்வளவு சம்பாரிச்சுட்டாரா?".

"வீட்டுப் பத்திரத்துக்கும், நகைக்குமே ரெண்டு வட்டி, மூணு வட்டி வாங்கறாங்க. இவரு ஃபிலிம் ரைட்ஸ்னு ஒரே செக்யூரிட்டில கொடுக்கறப்போ நாலு, அஞ்சின்னு தோது பார்த்து வசூல் பண்றாரே, ஃபிலிம் ரைட்ஸ் என்ன பெரிய செக்யூரிட்டியா? எத்தனை படம் முழுசா முடியாம தொங்கல்ல விழுந்துடும் தெரியுமா? அந்த நெகடிவை வெச்சுக்கிட்டு என்ன செய்றது? ரொம்ப ரிஸ்க்கான பிஸினஸ். அதனால அதிக வட்டி."

"என்னைப் பத்தி விவரமா சொல்லிட்டே இல்லே?"

"சொல்லிட்டேன். பத்து லட்சம் இவருக்கு ஒரு தூசு மாதிரி அரவிந்த். ஒரு சம்பிரதாயத்துக்குத்தான் ப்ராஜெக்ட் ரிப்போர்ட் எல்லாம் உன்னைக் கொண்டு வரச் சொல்லிருக்காரு. நாலு வரி கூட படிச்சிப் பார்க்க மாட்டாரு பாரேன்."

"பின்னே எந்த நம்பிக்கையில தருவார்?"

"நான்தான் சொன்னேனே... அவருக்கு ஒரு டைரக்டரைப் பிடிக்கிறதுக்கு என் தயவு தேவைப்படுது. உன்னோட ரெண்டு நிமிஷம் பேசினாலே போதும். நீ நம்பிக்கையான ஆளா இல்லையான்னு கணிச்சிடுவாரு."

"நான் வேஷம் போடலாமில்லையா?"

"அதைப் பத்தி அவருக்குக் கவலை இல்லை. அவர் வசூல் பண்றதுக்கு நேர்மையான வழிகளும் வெச்சிருக்கார். மோசமான வழிகளும் வெச்சிருக்கார். ஒருத்தன் நிலைமை மோசமாகி திருப்பிக் கொடுக்க முடியாத சூழ்நிலைன்னு புரிஞ்சா இரக்கப்படுவாரு. வேணும்னு ஏமாத்தறான்னு தெரிஞ்சி போச்சுன்னா, அவன் தொலைஞ்சான். கொடுத்த பணம் தனக்கு வரலைன்னாலும் அதைவிட நாலு மடங்கு அந்த ஆளுக்கு நஷ்டம் வர்ற மாதிரி செஞ்சிடுவாரு."

"எப்படி?"

"அதெல்லாம் எதுக்கு உனக்கு?"

"சும்மாதான் கேட்டேன்."

"ஒரு அடியாள் படையே வெச்சிருக்கார் அரவிந்த். கையை வெட்றது, காலை வெட்றது, ஆசிட் அடிக்கிறது, வீட்டை அடிச்சி நொறுக்கறதுன்னு சகலமும் கச்சிதமா செய்வானுங்க."

"என்ன சந்துரு இது. இந்தத் தொழிலுக்கு இதெல்லாம் தேவைப்படுதா?"

"மோசமான ஆளுங்களுக்கு அவங்க பாணியிலதானே பதிலடி கொடுத்தாகணும்?"

அரவிந்த் பெருமூச்சு விட்டான்.

ஒரு வேலையாள் வந்து கண்ணாடிக் கோப்பைகளில் மிதக்கும் ரஸகுல்லா கொண்டு வந்து வைத்து, "சேட்டு போன் பேசிட்டிருக்கார். இப்ப வந்துடுவார்" என்று சொல்லிச் சென்றான்.

சில நிமிடங்களில் பிரௌன் நிற ஸஃபாரி உடை அணிந்த லால்சந்த் வந்து, "வாங்கோ சந்துரு" என்றார்.

இருவரும் எழுந்து கைகூப்பியதும், சந்துரு அரவிந்தை அறிமுகப்படுத்தி வைத்தான்.

"உக்காருங்கோ. ஸ்வீட் சாப்பிடலை?" என்று அமர்ந்தார்.

"இருக்கட்டும்."

"பரவால்லே. சாப்பிட்டுக்கிட்டே பேசலாம். எடுங்கோ."

(தொடர்ச்சி 90-ம் பக்கம்...)

அது ஒரு கனவுக் காட்சி. 'காதலா காதலா' படத்திற்காக படமாகிக் கொண்டிருந்தது. முருகப் பெருமான் வேடத்தில் கமல் அமர்ந்திருக்க, தெய்வானையாக ரம்பா. "திருப்பரங்குன்றத்தில் நீ சிரித்தால் திருத்தணி மலை மீது எதிரொலிக்கும்" - என்று பாடிக் கொண்டே வருகிறார்.

**கமல்** : "எங்கேயோ கேட்ட பாடலாக இருந்தாலும் கேட்க இனிமையாகத்தான் இருக்கிறது. எங்கே என்னை வாழ்த்தி, ஒன்று இரண்டு என்று வரிசைப்படுத்தி ஒரு பாடல் பாடு..."

**ரம்பா** : "வரிசைப்படுத்திப் பாட நான் என்ன அவ்வையாரா?"

# பரபரப்பை உருவாக்கும் சிம்ரன்!



**கமல்** : "ம் பாடு" என்று சிணுங்க,

ரம்பா கூச்சப்பட்டுக் கொண்டே, "ஏக் தோ தீன் சார் பாஞ்ச்... ஏக் தோ தீன்" என்று பாட, கமல், "நிறுத்து. தமிழ்க் கடவுளை வாழ்த்தி இந்திப் பாடலா?" என்று முறைக்க, கட் சொன்னார் இயக்குனர் சிங்கீதம் சீனிவாசராவ். "படம் முழுவதும் இப்படிப் பட்ட நகைச்சுவை தான். வயிறு குலுங்

கச் சிரித்துக் கொண்டேயிருக்கலாம்'' - என்றார். வசனகர்த்தா கிரேஸிமோகன். வில்லனும் இவர்தான். வசனத்தில் இல்லீங்க. படத்தில் வரும் வில்லனே கிரேஸிதான்.

**ச**த்யராஜ் ஏக சோகம் ப்ளஸ் குழப்பத்தில் இருக்கிறார். சோகத்துக்குக் காரணம் அவரது அப்பாவின் மரணம். குழப்பத்திற்குக் காரணம் வரிசையாய் அவர் நடித்த படங்களின் தோல்வி. தம் மானேஜர் பெயரில் ஆரம்பித்திருந்த ராஜ் பிலிம்ஸ் இன்டர்நேஷனல் தயாரிப்பு நிறுவனம் மூடப்பட்டது. இதற்கெல்லாம் ஒட்டுமொத்தக் காரணமாக சத்யராஜின் நண்பர்கள் சொல்வது, இதைத்தான்: ''பெரியார் திடலுக்குள்ள யார் காலை வெச்சாலும் அவங்களோட கேரியர் குளோஸ் ஆயிடும்'' என்று சென்டிமெண்டாகப் போடுகிறார்கள். ஆனாலும், சத்யராஜ் இதையெல்லாம் இதுவரை நம்பாமல்தான் இருந்தார்...

**ம**னோஜ் - கியான் இரட்டை இசையமைப்பாளர்களை நினைவிருக்கிறதா? சரியான வாய்ப்புகள் இல்லை என்றதும் இருவரும் பிரிய நேர்ந்தது. கியான் பம்பாய் சென்று விட - மனோஜ் சென்னையிலேயே 'சமீரா' என்கிற பெயரில் டப்பிங் தியேட்டர் கட்டி இங்கேயே காலூன்றி விட்டார். டப்பிங் தியேட்டர் மூலம் வந்த வருவாயை 'என்றென்றும் காதல்' படத்தில் இன்வெஸ்ட் பண்ணி தயாரிப்பாளராகியிருக்கிறார். கூடவே - 'என்றென்றும் காத'லை இயக்கும் பொறுப்பும் மனோஜ்பட்நாகர் என்கிற பெயரில் இவருக்குத்தான்! விஜய் - ரம்பா நடிக்கும் இப்படம் பெரும்பாலும் வெளிநாட்டிலேயே படமாக்கப்பட இருக்கிறது. இசையமைப்பாளர் மனோஜ் உருவாக்கும் படத்திற்கு இசை வேறொருவர். அவர் தேவா.

**து**பாய் சென்று இரண்டு வாரம் அலைந்து தமக்குப் பிடித்த லொகேஷனை யெல்லாம் முடிவெடுத்து வந்தவருக்கு என்ன தோன்றியதோ, 'பாரசீக ரோஜா'வை மலரவிட விருப்பமின்றி இருக்கிறார் சேரன். காரணம் என்ன? 'பாரசீக ரோஜா' என்று பெயர் வைத்து விட்டு டைட்டிலுக்கேற்ற கதையைத் தேடிப் பார்த்தார். ஹோட்டலில் ரூம் போட்டு டிஸ்கஷனும் செய்து பார்த்தார். கதைதான் கிடைக்கவில்லை. துபாயிலிருந்து ரிட்டனாகி பொள்ளாச்சிக்கு பஸ் ஏற இப்போது தம்மைத் தயார்படுத்திக் கொண்டிருக்கிறார். துணைக்கு முரளியும் மீனாவும். 'பொற்காலம்' ஜோடிக்கேத்த கதை ஒன்றைத்தான் மறுபடியும் தேடிக் கொண்டிருக்கிறார்.



• விஜய் - ரம்பா : என்றென்றும் காதல்...

**கோ**டம்பாக்கத்தின் 'ஹாட் டஸ்ட் கதாநாயகி' என்கிற பெயர் எடுக்க சிம்ரன் படாதபாடுபடுகிறார். கிசுகிசு எழுதினால் எட்டி உதைப்பேன் என்றார். 'அவள் வருவாளா' படப்பிடிப்பில் புரடக்ஷன் பாயை வம்புக்கிழுத்து கன்னத்தில் அறைந்தார். ரஜினியின் அடுத்த படத்தில் சிம்ரன்தான் நாயகி என்று செய்தி பரப்பிய தம் மானேஜருக்கு கல்தா கொடுத்தார். ''பரபரப்பு''க்கு அலைகிறார் என்று அவர் பேரில் குற்றம்சாட்டுகிறார்கள்.

சிம்ரன் பரபரப்புக்கென்று பிரத்யேக முயற்சி செய்ய வேண்டுமா என்ன...? ○

— மஹந்த்

(87-ம் பக்கத் தொடர்ச்சி...)

இவர்கள் எடுத்து நாசூக்காக ஸ்பூனால் வெட்டிச் சாப்பிட, அவர் செல்போனில் யாரையோ தொடர்பு கொண்டு ஹிந்தியில் சில வார்த்தைகள் ரகசியக் குரலில் பேசிவிட்டு வைத்தார்.

"அப்புறம்? சொல்லுங்கோ சந்துரு! நீங்க எப்போ படம் டைரக்ட் பண்ணப் போறீங்கோ?"

"இல்லை சேட்டு. எனக்கு அப்படி ஐடியாவே இல்லை. ஒளிப்பதிவுலயே இன்னும் நிறைய சாதிக்க வேண்டியிருக்கு. டைரக்ஷன் பெரிய வேலை."

"பாலுமகேந்திரா சார் பண்ணலையா?"

"அது அவங்கவங்க ஆர்வத்தைப் பொறுத்தது."

"கரெக்ட்டு. நமக்கு இன்ட்ரெஸ்ட் இல்லாத வேலை செய்ய முடியாது."

"சேட்டு, அரவிந்த் ப்ராஜெக்ட் ரிப்போர்ட் கொண்டாந்திருக்கார். அதைக் கொடு அரவிந்த்."

அரவிந்த் அழகாக ஸ்பைரல் பைண்டிங் செய்த தனது ப்ராஜெக்ட் ரிப்போர்ட் ஃபைலை அவரிடம் கொடுத்தான்.

வாங்கி சும்மா நான்கு பக்கங்களைப் புரட்டிவிட்டு, "இந்த விவரம் எல்லாம் எனக்கு அநாவசியம். தம்பி, உங்களுக்கு இந்த பிரிண்ட்டிங் தொழில்ல அனுபவம் இருக்கா?" என்றார்.

"அனுபவம் இல்லை சார். ஆனா தொழில் தெரியும். நான் இந்தத் தொழில் ஆரம்பிக்கணுங்கற ஐடியாலதான் டிப்ளமா இன் பிரிண்ட்டிங் டெக்னாலஜி படிச்சேன்."

"அச்சா? எதுக்கு செகண்ட் ஹாண்ட் மிஷின் வாங்கறீங்கோ? புதுசா வாங்கலாமே?"

"முதல்ல இந்த மிஷின்ல தொழிலை நிலைநிறுத்திட்டு அப்புறம் புதுசு போடலாம்னு நினைக்கிறேன். எடுத்ததும் புதுசுன்னா இன்வெஸ்ட்மெண்ட் ஹெவியா தேவைப்படும். அதனாலதான்...."

"மொத்தம் என்கிட்டேர்ந்து எவ்வளவு வேணும்?"

"பத்து லட்சம் தேவைப்படுது சார்."

"எப்படித் திருப்பிக் கொடுப்பீங்க?"

"முதல் ஆறு மாசத்துக்கு திருப்பித் தர முடியாது சார். ஏழாவது மாசத்திலேர்ந்து அசலும் வட்டியும் திருப்பித் தர ஆரம்பிக்கிறேன். ரெண்டு வருஷத்திலே மொத்தமும் முடிச்சிடுவேன்."

"ட்வெண்ட்டி ஃபோர் இன்ஸ்டால்மெண்ட்ஸ்! பேங்குல மாதிரி டிம்னிஷிங் பேலன்ஸ் கணக்கு வெச்சிக்க முடியாது தம்பி. நாலு வட்டி ஆகும். ஒரு நிமிஷம்..." - பாக்கெட்டிலிருந்து கால்குலேட்டர் எடுத்து தட்டி கணக்குகள் போட்டார். நிமிர்ந்தார், "முதல் ஆறு மாசம் நீங்க திருப்பித் தர வேணாம். ஆனா வட்டி உண்டு. கணக்குப் பார்த்தா மாசம் கிட்டத்தட்ட தொண்ணூத்தி ரெண்டாயிரம் வீதம் இருபத்தி நாலு மாசம் நீங்க திருப்பித் தரணும். அதில உங்களுக்கு பிரச்னை எதுவும் இல்லையே?"

அரவிந்த் நான்கு வட்டி என்றதிலேயே மலைத்துப் போய் மௌனமாக அமர்ந்திருந்ததால், பதில் சொல்லத் தடுமாறினான்.

(தொடரும்)

---

**"நான் வேலைக்குச் சேர்ந்து பத்து வருசத்துக்குப் பிறகு முதல்முறையா நேற்று லஞ்சம் வாங்கும்போது மானேஜர் பார்த்துட்டார்."**

**"ஐயய்யோ! அப்புறம் மானேஜர் என்ன சொன்னார்?"**

**" 'இப்போதாவது திருந்தினியே'ன்னார்."**

**- க. சரவணக்குமார்**





***"என்னது! இந்தியாவிலேயே பெரிய கட்சி ஜனதாவும் தமிழக ராஜீவ்காங்கிரஸும்தானா?"***

***"ஆமா! நாடாளுமன்றத் தேர்தலில் நூறு சதவீத வெற்றிபெற்றது அந்த ரெண்டு கட்சியும் தானே?"***

***- உ. ராஜாஜி***

# வழக்குகளை நடத்த பணம் தேவையில்லை !

# வருடக்கணக்காய் அலைய வேண்டியதில்லை !!

# நியாயத் தீர்ப்பை விரைந்து வழங்கும்



# மக்கள் நீதிமன்றம்

- "மக்கள் நீதி மன்றம்" - உங்கள் நலன்கருதி அமைக்கப்பட்ட நீதி மன்றம்.
- "மக்கள் நீதிமன்றம்" சட்டபூர்வ அங்கீகாரமுடையது.
- சமரசம் செய்துகொள்ள முடியாத குற்ற வழக்குகளைத் தவிர, நீதிமன்றங்களில் நடப்பிலிருக்கின்ற மற்ற வழக்குகள் அனைத்தையும் மக்கள் நீதிமன்றங்களுக்கு கொண்டு வரலாம்.
- நீதிமன்றத்தில் வழக்காக தாக்கல் செய்யப்படாத எந்த பிரச்சினைக்கும் இங்கே தீர்வு காணலாம்.
- சம்பந்தப்பட்ட நீதிமன்ற அதிகார எல்லைக்குட்பட்ட மக்கள் நீதிமன்றத்திற்கு உங்கள் வழக்குகளை கொண்டு வரலாம்.
- மக்கள் நீதிமன்ற தீர்ப்பு, நீதிமன்றத்தின் தீர்ப்பாக கருதப்படும். இந்த தீர்ப்பு இறுதியானதாகும்; மேல் முறையீடு கிடையாது.
- மக்கள் நீதிமன்றத்தில் முடிவடைந்த உரிமையியல் வழக்குகளில் செலுத்திய நீதிமன்றக் கட்டணம் திருப்பித் தரப்படும்.
- எவ்வித செலவுமின்றி வழக்கை நடத்திட - விரைவில் தீர்ப்பை பெற்றிட, உங்களை அழைக்கிறது 'மக்கள் நீதிமன்றம்'.
- மக்கள் நீதிமன்றத்தின் கதவுகள் உங்களுக்காகவே திறந்திருக்கின்றன. செலவில்லை, காலதாமதமில்லை - வழக்குகள் விரைவில் நல்ல முடிவுகளாகும்.

## மேலும் விபரங்கள் அறிய

- ➡ சென்னை உயர்நீதிமன்ற வளாகத்தில் இயங்கும் மாநில சட்டப்பணிகள் ஆணைக்குழு.
- ➡ அந்தந்த மாவட்ட நீதிமன்ற வளாகத்தில் இயங்கும் மாவட்ட சட்டப்பணிகள் ஆணைக்குழு.
- ➡ அந்தந்த வட்டாரங்களில் உள்ள நீதிமன்ற வளாகங்களில் இயங்கும் வட்ட சட்டப்பணிகள் குழுவை அணுகுங்கள்.



தமிழ்நாடு மாநில
சட்டப் பணிகள் ஆணைக்குழு,
உயர்நீதிமன்ற வளாகம்,
சென்னை - 600 104.

DIPR.348.DISPLAY.98

# குறையொன்றுமில்லை

'**தா**ள முடியாத நான்கு துக்கங்களில் ஒன்று புத்ர சோகம்' என்கிறது சாஸ்திரம். அதனால்தான் துரோணாசார்யர் கூட, புத்ரன் இறந்து விட்டான் என்றதுமே வில்லையும் அம்பையும் கீழே போட்டு விட்டார்.

அப்போதுதான் பகவான் அந்த இடத்திலே 'நிறுத்து. அடி.' என்றார். அடிக்கச் செய்தான் பரமாத்மா; அடித்தான் அர்ஜுனன்; விழுந்தார் துரோணாசார்யர்!

இந்த இடத்திலே அர்ஜுனன் இதை நடத்தினானா? பரமாத்மா இதை நடத்தினானா?

**அவன்**தான் காரணம்! துரோணரை முடிப்பதற்காக எவ்வளவு நாடகமாடினான் குருக்ஷேத்திரத்திலே! அவன் நாடகம் கொண்டாடப்படுகிறது.

தன்னை ஆச்ரயித்து, தன் பக்தனாய் இருந்த அர்ஜுனனை ரக்ஷிப்பதற்காக அவன் செயல்பட்டான்.

கோவிந்த பட்டாபிஷேகத்தின் போது 'அர்ஜுனனை ரக்ஷிக்கிறேன்' என்று அவன் அப்பாவுக்கு 'வாக் தானம்' பண்ணினான் பகவான். இந்திரனுக்கு 'வாக் தானம்' பண்ணினான். அந்த வாக் தானத்தைக் கடைசி வரையில் காப்பாற்றினான். 'இந்தத் திருவடி பூலோகத்தில் பட்டுக்கொண்டிருக்கிறவரையில் உன் பிள்ளையை யாராலும் அசைக்க முடியாது' என்றான்.

அதே மாதிரி, பகவான் இருக்கிற





வரையில் அர்ஜுனனை யாராலும் ஒன்றும் பண்ண முடியவில்லை.

பகவானின் அடிச்சோதி வைகுண்டத்துக்குப் போன பிற்பாடு எழுபதாயிரம் கோபஸ்த்ரீகளையும் அழைத்துக் கொண்டு அர்ஜுனன் வருகிறான்... நடுவழியில் திருடர் கூட்டம் வந்து வழி மறிக்கிறது. அப்போது அவர்களோடு சண்டை போடுகிறான் அவன். கையிலே காண்டீபம் இருக்கிறது. அதால் அடிக்கிறான். அடித்தால், அவர்களுக்கு ஏதோ வைக்கோலால் அடிப்பது மாதிரிதான் இருக்கிறது! ஏன்...? அர்ஜுனனுக்கு சக்தி போய் விட்டது!

அப்படியானால் இத்தனை நாளாக அவனிடம் இருந்த சக்தி என்ன சக்தி...?

பகவத் சக்தி! பகவானுடைய சக்தி அது! கிருஷ்ண பலம்தான் அர்ஜுனனுக்கு இருந்தது.

அவன் இல்லாமல் போனான். இவனுக்கு எதுவுமே இல்லை!

ஆகையினால், பகவான் நினைப்பதை சாதிப்பவன் என்பதுதான் சத்யகாமத்வம் என்கிற உத்தமமான குணம்.

விஜ்வரத்வம் – அவனை நினைப்பவர்களுக்கு ரோகத்தைக் கொடுக்காமல், பிறவி நோயைக் கொடாமல் காப்பாற்றும் குணம்.

சத்யகாமத்வம் – அவன் எண்ணம் ஒருநாளும் பழுதுபடுவதில்லை என்பது. பரமான, விஷ்ணுவான அவனை சத்யகாமன் என்று யார் யார் நினைக்கிறார்களோ, சத்யகாமன் என்று யார் யார் உபாசிக்கிறார்களோ அவர்களுடைய எண்ணம் ஒருநாளும் பழுதுபடுவதில்லை. அவர்களுக்கும் சத்யகாமத்வம் ஏற்பட்டு விடுகிறது. பகவான் அப்படியிருக்கிறான் என்று நாம் நினைத்தோமானால், நமக்கும் அந்த குணத்தை பகவான் கொடுத்து விடுகிறான். நாம் பகவானுக்கு என்ன பண்ணுகிறோமோ, அதைக் காட்டிலும் பல மடங்கு நமக்கு அவன் கொடுத்து விடுகிறான்.

ஒரு சின்ன உதாரணம், மஹரிஷி பராசரர் சொல்கிறார் :

கோபஸ்த்ரீகளுக்கிடையேயிருந்து பரமாத்மா அந்தர்தியானமாகி விட்டான். மறைந்து விட்டான்! மறைந்தவுடனே இவர்களுக்கெல்லாம் பைத்தியம் பிடித்தது போல இருந்தது! ஒருத்தி என்ன பண்ணினாள்... இன்னொருத்தியின் ஜடையைப்

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

## அருள்வாக்கு



## பட்டிக்காட்டிலும்

வ்யாதி குணமான பிற்பாடு ஓய்வு எடுத்துக் கொண்டு கொஞ்சம் கொஞ்சமாகப் புது ரத்தம் பிடித்துத் தேற வேண்டிய (Convalescence) பீரியடில்தான் ரொம்பவும் ஜாக்ரதையாயும், கடும் பத்தியமாயும் இருக்க வேண்டும். அப்படி, பிரிட்டிஷ் ஆட்சி என்ற வ்யாதி போய் ஸ்வதந்த்ர சக்தியில் ஆரோக்யம் பெறுவதற்கு முற்பட்டதான நடு கட்டத்தில் இருக்கிறோம். இப்போது கொஞ்சம் ஏறுமாறாக மக்களின் புத்தியோ மக்கள் ப்ரதிநிதிகளின் புத்தியோ போக இடங்கொடுத்தாலும், எழுத்தளவில் கிடைத்த ஸ்வதந்த்ரம் வாஸ்தவமாக நம்மை வளர்க்கிற ஜீவசக்தியுள்ள ஸ்வதந்த்ரமாக ஆகாமல் போய் விடும். இப்போதோ "கொஞ்சம் ஏறுமாறு" என்ன, "ரொம்பத் தாறுமாறாகவே" போகக் கூடுமோ என்று பயப்படும்படியாக, வயஸு வந்த எவரானாலும் வயஸு வந்த எவருக்கானாலும் நிர்வாஹத்தில் பொறுப்புத் தந்து அதிகார ஸ்தானத்தில் உட்கார்த்தி வைத்து விடலாம். படிப்பு – ஸொத்து – அநுபவம் – நடத்தை முதலான எந்தத் தகுதிக்கும் அவச்யமில்லை என்று பண்ணி வருகிறார்கள்.

இதில் ப்ரத்யக்ஷமாகத் தெரிகிற ஒரு தீமை: இப் புது ஜனநாயகத் தேர்தல்கள் ஏற்படுவதற்கு முன், நாட்டில் சில உத்யோகஸ்தர்களிடம் மாத்திரம் லஞ்சம் வாங்கும் பழக்கமும், பொய் வாக்குறுதி கொடுத்து ஏமாற்றும் வழக்கமும் இருந்தன. வோட்டும் எலெக்ஷனும் ஆரம்பித்த பிற்பாடோ, லஞ்சமென்பதையே

பிடித்து இழுத்து, 'காளிய சர்ப்பமே இது!' என்று அவள் தலை மேலே ஏறி நின்று நாட்டியம் ஆட ஆரம்பித்து விட்டாள்! ஒரு கோபஸ்த்ரீ, இன்னொரு கோபஸ்த்ரீயைப் பிடித்துக் கீழே தள்ளி, அவள் மேலே ஏறி நின்று, 'நீ பூதனை, நான் கிருஷ்ணன்' என்கிறாள்.

இப்படி, அவதார காலத்திலே பகவான் பண்ணியதையெல்லாம் இவர்களும் பண்ணுகிறார்கள்! இப்படிப் பண்ணியபடி போய்க் கொண்டேயிருந்தபோது ஒரு கல்லின் மேல் நிறைய பூவெல்லாம் சிந்தியிருக்கக் கண்டார்கள். ஒரு கோபஸ்த்ரீ இன்னொரு கோபஸ்த்ரீயைப் பார்த்துக் கேட்டாள், "இங்கே ஏன் பூவெல்லாம் விழுந்திருக்கிறது....?"

அதற்கு அவள் சொல்கிறாள் : "இது தெரியலையா உனக்கு...? இந்த இடத்திலே கண்ணன் ஒரு கோபஸ்த்ரீயை உட்கார வைத்து, தலை வாரிப் பின்னி, பூச்சூட்டி மகிழ்ந்திருக்கிறான்! ஒரு கோபஸ்த்ரீக்கு கிருஷ்ணனே தலைவாரி பூ வைத்து அழகு பார்த்திருக்கிறான்! அந்தப் பூவெல்லாம் கீழே சிதறியிருக்கு...." என்கிறாள்.

முதலாமவள் கேட்கிறாள் : "அடடா! இங்கே கோபஸ்த்ரீக்குப் பூ வைத்து அழகு பார்த்தானா....? அவள் பாக்யம்தான் என்ன!"

"அது தெரியலையா உனக்கு....? ஜன்மாந்திரத்திலே அவள் தானே சென்று, புஷ்பங்களையெல்லாம் பறித்து வந்து, அதைக் கொண்டு பகவானுடைய திருவடியிலே அர்ச்சனை பண்ணியிருக்கிறாள். அதனால்தான் பகவான் இப்போது அவளுக்குப் புஷ்பத்தைச் சூட்டி மகிழ்கிறான்."

தானே சென்று பூக்களைப் பறித்தல் என்பது ஆழ்வார்களுடைய அனுஷ்டானம்! பெரியாழ்வார் தானே திருப்பூக் குடலையை மாட்டிக் கொண்டு, தானே போய் புஷ்பத்தைப் பறித்து, மாலை கட்டி, வடபெருங்கோயிலுடையானுக்கு – அந்த ஸ்ரீவில்லிபுத்தூரிலே சமர்ப்பிப்பார். அதே மாதிரி, தொண்டரடிப்பொடியாழ்வார் புஷ்பவனத்திலிருந்து தானே புஷ்பத்தை எடுத்துக் கட்டி பகவானுக்கு அர்ப்பணிப்பார். பூர்வாசிரமத்திலே, அந்த உயர்ந்த உப்பிலியப்பன் சந்நிதிக்கு அருகில் இருக்கும்படியான தேவனார் வளாகத்திலே அவரே சென்று, திருக்குடலையிலே புஷ்பத்தைப் பறித்துக் கொண்டு வருவார்.

புஷ்பத்தைப் பறிப்பதற்குக் கூட ஒரு நியமம் உண்டு. அதே மாதிரி அதை சமர்ப்பிக்கறதுக்கு ஒரு நியமம். நிதானமாக சமர்ப்பிப்பார்கள். புஷ்பம் பட்டு விட்ட தென்றால் எங்கே அவன் திருவடி நோகுமோ, கன்னிப் போய் விடுமோ என்று பயந்து, மெல்லெனச் சமர்ப்பிப்பார்கள்.

'பஞ்செனச் சிவக்கும் மென்கால் தேவியைப் பிரித்த பாவி...!' – சீதா பிராட்டியினுடைய திருவடி எப்படிப்பட்டது என்றால், பஞ்சு என்று சொன்னாலே சிவந்து போய்விடுமாம்! அவ்வளவு மிருதுவானது!

# லஞ்சம் நுழைந்தது எப்படி..?

கேள்விப்பட்டிராத பட்டிக்காட்டில்கூட ஸர்வ ஜனங்களும் லஞ்சம் வாங்குவதற்கு இடம் ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறது. விஷயம் தெரிந்த படிப்பாளிகளை ஏமாற்றுவதைவிடப் படிப்பறியா பாமர ஜனங்களை ஏமாற்றுவது ஸுலபம். அவர்களிடம்தான் காசாகவே துணிந்து லஞ்சம் கொடுக்கவும் அதிக இடமுண்டு. ஆனதால் அபேக்ஷகர்களும் அரசியல் கட்சிகளும் செய்யும் ஏமாற்றும் பொய்யும் அதிகமாகும். இது ஒரு பக்கம் இருக்க, அந்தப் பொது ஜனங்களுமே அபேக்ஷகர்களிடமிருந்தும் அரசியல் கட்சிகளிடமிருந்தும் பலவிதமான ஆதாயங்களைப் பெறுவதற்காக ஏமாற்றுவதற்கும் பொய் சொல்வதற்கும் ஊக்கப்பட்டு வருகிறார்கள். இப்படிப்பட்ட ஜனநாயகத்தால் நமக்கு க்ஷேமமா, க்ஷாமமா?

"எந்தத் தகுதியும் வைக்காததால் இதுவே நிஜமாக ஸர்வ ஜனங்களையும் (தேர்தலில்) நிறுத்தி வைக்க உதவும் உண்மையான ஜனநாயக முறை" என்கிறார்கள். ஆனால் இதில் இப்படி ஏகத்தாறாகப் பணம் செலவழிக்கும்படி பண்ணியிருப்பதால், நடைமுறையில் பணம் கொழுத்தவர்களைத் தான் அதிகம் நிறுத்தி வைப்பதாக ஆகுமென்று தோன்றுகிறது. ஒவ்வொரு ஊரிலும், ஒவ்வொரு கட்சியிலும் த்யாகம், திறமை, தூய்மை நிறைந்தவர்கள் இருந்தாலும்கூட, அவர்களை விட்டுவிட்டு, பணபலம் படைத்தவனைத்தான் நிறுத்துவது என்று ஆனால் அப்புறம் ஜனநாயக தத்வம், நல்ல நிர்வாஹம் இரண்டுமே என்ன ஆவது?

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

பஞ்சு என்று சொன்னாலே சிவக்கக்கூடியது மஹாலக்ஷ்மியின் பாத ஹஸ்தம். அப்படிப்பட்ட ஹஸ்தத்தினால் (திருக்கரங்களால்) பிடித்தாலே பகவானுடைய திருவடி கன்னிப் போய்விடுமாம்! அப்படியானால் அது இன்னும் எவ்வளவு மென்மை! அதிலே போய் வீசி வீசி புஷ்பங்களையெல்லாம் முள்ளும் மொக்குமாகப் போடலாமா...?

ஆகையினாலே, ரொம்ப ஜாக்கிரதையாக புஷ்பங்களைக் கட்டி, அதைப் பிரோக்ஷித்து, சுகந்தத்துடன் கூடியவற்றைத் தான் பகவானுக்குச் சமர்ப்பிக்க வேண்டும்.

சில புஷ்பங்களெல்லாம் கூடாது என்று சாஸ்திரம் சொல்லியிருக்கிறது. 'கூடாது' என்றால் பகவானுக்குப் பிடிக்காத புஷ்பம் அது என்று ஆகிவிடாது! அந்தப் புஷ்பங்களிடத்திலே பகவானுக்கு த்வேஷம் கிடையாது. பின் ஏன் அந்தப் புஷ்பங்களையெல்லாம் சாஸ்திரம் வேண்டாம் என்று சொல்கிறது என்று கேட்டால், பராசர பட்டர் சொல்கிறார்:

பாகவதோத்தமர்களுடைய நிலையை உத்தேசித்து! சில புஷ்பங்களிலே முள் நிறைய இருக்கும். அதைப் போய்ப் பறித்தால் கையிலே குத்தி, ரத்தம் வந்து விடும்! இவர்கள் கையிலே குத்தி ரத்தம் வரக் கூடாது என்பதற்காகத்தான் முள்ளில்லாத புஷ்பங்களை பகவானுக்குச் சமர்ப்பிக்க வேண்டும் என்று சாஸ்திரம் சொல்கிறதே தவிர, பகவானுக்குப் பிடிக்காத புஷ்பம் என்பது கிடையாது!

ஆகையினாலே, அந்த கோபஸ்த்ரீ அப்படி ஏற்றமுடையதான புஷ்பங்களைப் பறித்து பகவானுக்கு அர்ச்சனை பண்ணியிருக்கிறாள். அதனால் இப்போது அவனே அர்ச்சிக்கப்படுகிறான். பகவானாலேயே அர்ச்சிக்கப்பட்டிருக்கிறாள்!

அந்த மாதிரிதான், 'விஷ்ணு: சத்யகாமன்' என்று நாம் சொன்னோமானால், எங்கும் பரவியிருக்கிற அந்த விஷ்ணு, நமக்கு சத்யகாமத்வத்தைக் கொடுத்து விடுவான். நம்முடைய எண்ணம் ஒருநாளும் பரிபவப்படாது. இதை வேண்டுமானால் பரீட்சை பண்ணிப் பார்க்கலாம்... பரீட்சைக்காக அல்ல... "ஹே பிரபோ! உன்னிடத்திலே காமியமாகத்தான் கேட்கிறேன். இந்தக் கோரிக்கை இல்லாமல் என்னால் இப்போது வாழ முடியாது. குடும்பத்தை ரக்ஷிக்கிற பொறுப்பு எனக்கு இருக்கிறது – அதையும் நீயே ரக்ஷிப்பவன்தான் – ஆனால், என் அஞ்ஞானத்தினாலே நான்தான் ரக்ஷிப்பதாய் நினைத்துக் கொண்டிருக்கிறேன். ஆகையினாலே, இப்போது நான் நினைப்பதை நீ நடத்தி வைக்க வேண்டும்..." என்று பிரார்த்தனை பண்ண வேண்டும். 'ஓம் விஷ்ணவே நம : ஓம் சத்யகாமாய நம:' என்ற இந்த இரண்டு நாமாவைத் திரும்பத் திரும்ப 1008 தடவை சொல்ல வேண்டும்.... அப்படிச் சொல்லிவிட்டு ஒன்றை மனத்தில் நினைத்தால் அது கட்டாயம் நடக்கும்.

(தொடரும்)

## காதில் விழுந்தவை:



# மூட்டை மூட்டையாக மூப்பனாருக்கு வந்த புகார்கள்!

● தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் தங்கபாலு தலைக்குக் கத்தி வந்து விடும் போலிருக்கிறது. அன்பரசு, பிரபு போன்ற பாரம்பரிய எதிரிகள் தங்கள் வேலையைக் காட்டத் துவங்கி விட்டார்கள். சோனியா காந்தியின் உதவியாளர் ஜார்ஜுக்கு கூரியரில் புகார்கள் பறந்து கொண்டிருக்கின்றன.

● தோல்விக்கு என்ன காரணம் என்று ஆராய தமிழகமெங்கும் மூப்பனாரால் அனுப்பப்பட்ட விநாயகமூர்த்தி, பாரமலை ஆகியோர் மூட்டை மூட்டையான புகார்களுடன் சென்னைக்குத் திரும்பியிருக்கின்றனர். தொகுதிப் பக்கமே வராத எம்.எல்.ஏக்கள், தொகுதியில் தீவிரமாக 'உழைத்து' அதிகாரிகள் மற்றும் ஆளும்கட்சி உதவியுடன் ஜாம், ஜாமென்று வசதியானவர்கள், என்று புகார்களுக்கு மேல் புகாராம். "இந்த லொள்ளு போதாதென்று. தலைமை நிலையமான சத்தியமூர்த்தி பவனில் சிலர் உட்கார்ந்து கொண்டு தலைவருக்குத் தவறான தகவல்கள் சொல்கிறார்கள். முதலில் சென்னையில் இருக்கும் பிரமுகர்கள் மூப்பனார் வராத போதும் தலைமை நிலையத்துக்கு வரும் வழக்கத்தைத் துவங்கட்டும். அப்போதுதான் கட்சி உயிரோட்டம் பெறும்'' என்று சொல்கிறார் மாவட்ட த.மா.கா. பிரமுகர் ஒருவர். இதற்கிடையில் சோனியா, காங்கிரஸின் தலைவரானதை அடுத்து த.மா.கா. எந்த நிலை மேற்கொள்ள வேண்டும் என்றும் கட்சிக்குள் கருத்துக்கள் கேட்கப்படுகிறதாம்.

● "ஏற்கெனவே அதிகாரிகளுக்கும் எங்களுக்கும் ஏழாம் பொருத்தம். இப்போது பாராளுமன்றத் தேர்தலில் வேறு தோற்று விட்டதால் கேட்கவே வேண்டாம்'' என்று புலம்பினார் தி.மு.க. எம்.எல்.ஏ. ஒருவர். ''சில முக்கியமான இலாகாக்களில் - குறிப்பாக நுகர் பொருள் இலாகா - மின்சார இலாகா, கூட்டுறவுத் துறை போன்றவற்றில் நியாயமான அதிகாரிகள் பணிபுரிகிறார்கள். அவர்களிடம் அந்தத் துறை அமைச்சர் உட்பட ஆளும் கட்சிப் பிரமுகர்கள் சட்டத்துக்குப் புறம்பான சில சலுகைகளைக் கேட்கும் போதும் மறுக்க வேண்டியிருக்கிறது. அவ்வளவு தான்! மற்றபடி அதிகாரிகள் அரசுக்கு முழு ஒத்துழைப்புக் கொடுக்கிறார்கள்'' என்று பதிலடி தருகிறார் கோட்டை அதிகாரி!

● பா.ம.கா. சார்பாக 'தலித்' எழில் மலைக்கு மத்திய அமைச்சர் பதவி கொடுத்தது குறித்து பா.ம.க.வில் கொஞ்சம் புகைச்சல் தோன்றியிருக்கிறது. ஆனால் அதற்காக எரிச்சல்படுபவர்களிடம் டாக்டர் ராமதாஸ் 'கொஞ்சம் வெயிட் பண்ணுங்க. நாம தாழ்த்தப்பட்டவர்களையும் அனுசரித்து நடந்து ஒற்றுமையாக இருந்தால்தான் நாளை சட்டமன்றத் தேர்தல் வரும்போது நான்கு மாவட்டங்களில் அமோக வெற்றி பெறலாம்" என்று சமாதானம் சொல்லி வருகிறாராம்.

● தி.மு.க.வில் கோசி. மணிக்கு இப்போது மவுசு கூடியிருக்கிறது. காரணம் ஒன்றுபட்ட தஞ்சையின் மூன்று பாராளுமன்றத் தொகுதிகளையும் தி.மு.க. த.மா.கா. - கம்யூனிஸ்ட் கூட்டணி தக்கவைத்துக் கொள்ள, அவர் உழைப்புத்தான் காரணம் என்று தலைமை அவரை தட்டிக்கொடுத்ததுதான்! ஜூனியர் அமைச்சர்கள் பலர் இப்போது மணி அண்ணனிடம் சென்று தொகுதியைக் கைக்குள் வைத்திருப்பது எப்படி என்பதைப் பற்றிப் பாடம் கற்றுக் கொண்டு வருகிறார்களாம். ◉

- தில்லப்பா

**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621.**
**Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1600/- (Air Mail)**
**Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 800/- (Air Mail)**



# KVB-யின் பஞ்சரத்னா.

## சேமிப்புக் கணக்கின் வசதி வைப்புக் கணக்கின் வட்டி

“பஞ்சரத்னா” சேமிப்புத் திட்டத்தின் ஐந்து சிறப்பு அம்சங்கள்.

- சேமிப்புத் தொகை ரூ.1000/-யூனிட்டுகளாக வைக்கப்படும்.
- முதிர்வு காலத்திற்கு முன்னரே சேமிப்புத் தொகையிலிருந்து தேவைப்படும் தொகையினை ரூ.1000/- யூனிட்டுகளாக திரும்பப் பெறலாம்.
- முதிர்வு காலத்திற்கு முன்பே திரும்பப்பெறும் தொகைகளுக்கும் வங்கி விதி முறைப்படி வட்டியினைப் பெறலாம்.
- முதிர்வு காலத்தில் மீதமுள்ள தொகையினை உரிய வட்டியுடன் திரும்பப் பெறலாம்.
- வங்கியில் பெறப்படும் கடன் வசதிக்கு ஈடாக இந்த சேமிப்பு ரசீதினைக் கொடுக்கலாம்.




Since 1916

**தி கரூர் வைஸ்யா பேங்க் லிட்.**

கரூர் - 639 002

நாளும் நம்பிக்கை வளர்க்கும் வங்கி

இத்திட்டம் குறிப்பிட்ட கிளைகளில் மட்டுமே செயல்படுகிறது. மேலும் விவரங்களுக்கு எங்கள் கிளை அலுவலர்களை அணுகவும்.

A.D. நவநீதன்
சேர்மன்